ஸ்ரீ:

# திருமலையப்பன் திருவருள்



ந்யாய வேதாந்த வித்வச் சிரோமணி

ஸ்ரீ உ.வே. திருமலை அனந்தாண்பிள்ளை

**கிருஷ்ணமாசார்ய ஸ்வாமி**

ஸ்ரீ:

# திருமலையப்பன் திருவருள்

ந்யாய வேதாந்த வித்வச் சிரோமணி
ஸ்ரீ உ.வே. திருமலை அனந்தாண்பிள்ளை
**கிருஷ்ணமாசார்ய ஸ்வாமி**

**கீதாசார்யன் பதிப்பகம்**
7, தெற்கு மாட வீதி, திருவல்லிக்கேணி,
சென்னை 600005

ஸ்ரீ:

திருவேங்கடமுடையான் திருவடிகளே சரணம்

ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்

# முன்னுரை

திவ்யதேசங்களில் நடந்த ஸம்ப்ரோக்ஷணம், ஸ்ரீவைஷ்ணவ மஹான்களின் ஷஷ்ட்யப்தபூர்த்தி, சதாபிஷேகம் முதலியவற்றின் நினைவாக வெளியிட்ட மலர்களிலும் மற்றும் சில மாதவிதழ்களிலும் வெளியிடப்பட்ட அடியேனுடைய கட்டுரைகளில் சிலவற்றைத் தொகுத்து இப்போது வெளியிடலாகிறது. அடியேனுடைய யோகக்ஷேமங்களை பால்யம்முதலாகவே நிர்வஹித்து வரும் திருமலையப்பனின் திருநாமத்தையே இப்புத்தகத்திற்கும் பெயராக அமைத்துள்ளேன். இக்கட்டுரைகளில் உள்ள குற்றம் குறைகளைப் பெரியார் பொறுத்தருளுமாறு வேண்டுகிறேன்.

இதுதன்னை அச்சிடுவதற்கு வேண்டிய பெருளுதவி புரிந்த திருமலை திருப்பதி தேவஸ்தான அதிகாரிகளுக்கு அடியேனது நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இப்புத்தகத்தை அழகிய முறையில் அச்சிடுவதற்குரிய அனைத்து ஏற்பாடுகளையும் செய்து கொடுத்த சிரஞ்சீவி டாக்டர் ஸ்ரீ உவே. எம்.ஏ. வேங்கடகிருஷ்ணன் (சென்னைப் பல்கலைக் கழக வைணவத்துறைப் பேராசிரியர்), அடியேனுக்குப் பலவிதங்களில் உறுதுணையாய், இப்புத்தகத்தை அச்சிடும்போதும் ப்ரூப் பார்த்து மஹோபகாரம் செய்த சிரஞ்சீவி டாக்டர் ஸ்ரீ உவே. எம். வரதராஜன் (திருவேங்கடவன் பல்கலைக் கழக தமிழ்த்துறை விரிவுரையாளர்) ஆகியோருக்கு என்னுடைய மனம் நிறைந்த ஆசியை வழங்குகிறேன்.

**திருப்பதி** **தி.அ.க்ருஷ்ணமாசார்யதாஸன்**

**30.11.96**

# பொருளடக்கம்

# [1]

# ஸ்ரீராமாநுஜ ஸித்தாந்தமும் திருவேங்கடமுடையானும்

விசிஷ்டாத்வைத ஸம்ப்ரதாயம் வேதத்தில் சொல்லப் பட்டிருப்பதால், அநாதியாகும். அது சிற்சில காலங்களில் சிலரால் மறைந்திருந்து அவ்வப்போது அவதரித்த ஆழ்வார்களாலும் ஆசார்யர்களாலும் வெளிப்படுத்தப் பட்டிருக்கிறது. ஆழ்வார்களில் தலைவர் நம்மாழ்வார். ஆசார்யர்களில் தலைவர் எம்பெருமானார். இவ்விருவராலும் தத்தம் அவதார காலங்களில் இந்த ஸம்ப்ரதாயம் விசேஷமாகப்ரகாசப்படுத்தப்பட்டிருக்கிறது.

ஆழ்வார்கள் உகந்தருளின திவ்யதேசங்கள் நூற்றெட்டினுள் கோயில், திருமலை, பெருமாள்கோயில் என்னும் மூன்றும் சிறந்தவை என்று கருதப்பட்டன. ஆழ்வார்கள் எல்லாராலும் மங்களாசாஸநம் செய்யப்பட்டமையால் கோயில் என்னும் ஸ்ரீரங்கம் முதன்மை பெற்றது. தொண்டரடிப்பொடியாழ்வார் தவிர மற்ற ஆழ்வார்கள் ஒன்பதின்மரால் மங்களாசாஸநம் செய்யப் பெற்றமையால் திருமலை இரண்டாவதாக எண்ணப் பட்டது. முன்பொருகால் ஸ்ரீரங்கத்து அரையர் ஒருவர் இத் திருமலைக்கு எழுந்தருளியிருந்தபோது, அவரை இங்குள்ளார் இயலைப் பாடும்படி ப்ரார்த்தித்தார்களாம். அவர் தமது வழக்கம்போல் 'பதின்மர் பாடும் பெருமாள்' என்று திருவேங்கடமுடையானுக்கு விருதுகூறி இயலைப் பாடத் தொடங்க, இங்குள்ளார் 'அவ்விருது நம்பெருமாள் ஒருவர்க்கே தகும். சோழியன் (தொண்டரடிப்பொடியாழ்வார்) கெடுத்ததனால் திருவேங்கடமுடையானுக்கு அது பொருந்தாது' என்றார்களாம். இந்த ஐதிஹ்யம், கோயில் முதலாவது, திருமலை இரண்டாவது என்ற விஷயத்தில் தெளிவைப் பிறப்பிக்குமன்றோ?

ஒருவாறு நோக்கினால் இத்திருமலையே முதலாவது என்று சொல்லலாம். திருப்பாணாழ்வார் லோகஸாரங்க மஹாமுனி

தோளில் வந்து ஸ்ரீரங்கநாதனைப் பாதாதி கேசாந்தமாக அநுபவித்து 'அமலனாதிபிரான்' பாடினார். அதில் கடைசியில் 'அண்டர்கோன் அணியரங்கன் என்னமுதினைக் கண்ட கண்கள் மற்றொன்றினைக் காணாவே' என்றிருப்பதால் அரங்கனைக் கண்ட கண்களால் மற்றொருவரைக் காணாத அவர் பதிவ்ரதை என்று சொல்லத் தகுந்தவர். தொண்டரடிப் பொடிகளும் அத்தகையரே. அப்படிப்பட்ட திருப்பாணாழ்வாரும் 'விண்ணவர் கோன் விரையார்பொழில் வேங்கடவன்' என்று முதல் பாசுரத்திலும், 'மந்திபாய் வட வேங்கடமாமலை வானவர்கள் சந்திசெய்ய நின்றான் அரங்கத்து அரவினணையான்' என்று மூன்றாம் பாசுரத்திலும் திருவேங்கடமுடையானைப் பாடினார். அவ்விடத்து வ்யாக்யானத்தை ஸேவித்தால், ஸ்ரீவைகுண்டத்தி லிருந்து எம்பெருமான் இறங்கி வரும்போது திருமலையில் திருவேங்கடமுடையானாய் நின்று,பிறகு கோயிலில் அரங்கனாய்ப் பள்ளிகொண்டருளினான் என்று விளங்குகிறது. இதனால் (முதலில் திருமலையில் நின்றருளின காரணத்தால் திருமலை முதல் ஸ்தானத்தை வகிக்கிறது என்று சொல்லத் தடையில்லையன்றோ? மேலெடுத்த அமலனாதிபிரான் பாட்டுப் பகுதிகளிலிருந்து திருவரங்கச் செல்வனும் திருவேங்கடத்துறை செல்வனும் ஒரே வ்யக்தி என்று தெளியப்படுகின்றமையால் தொண்டரடிப்பொடி ஆழ்வார் பக்தியின் மிகுதியால் அரங்கனைப்பாடியவர் திருவேங்கட முடையானையும் பாடியவரேயாவார். பேசிற்றே பேசும் ஏககண்டர்களன்றோ ஆழ்வார்கள்! ஆக ஒரு கண் கொண்டு பார்த்தால் திருமலை முதன்மை பெறும் என்பது துணியப்படும்.

நம்மாழ்வாரும் எம்பெருமானாரும் இத் திருமலையில் மிகவும் ஈடுபட்டு ஸித்தாந்தத்தை வெளிப்படுத்தினார்கள். நம்மாழ்வார் பெரியபெருமாள் விஷயமாக 'கங்குலும் பகலும்' என்ற பதிகம் பாடினார். அதில் அவர்க்குத் தானான தன்மையில் அனுபவம் இல்லை. ப்ரேமம் அதிகமாகி ஒரு நாயகியின் தசையை அடைந்து பேசலாம் என்றுபார்த்தார். தம் துக்கத்தைத் தம்மாலும்

பேசமுடியாத அவ்வளவு துக்கநிலை ஏற்பட்டபடியால் தாய் பாசுரமாகப் பேசினார். இத்திருவாய்மொழிக்குப் பொருள் சொல்லும்போதெல்லாம் ஸ்ரீ பராசர பட்டர், 'ஆழ்வாருடைய ப்ராவண்யம் நமக்கு இல்லாமையால் அவரது நிலையை அறியமுடியாது. ஆகையால் இப்பதிகத்திற்கு நாம் எப்படிப் பொருள் சொல்லப்போகிறோம்?' என்றருளிச்செய்து தலையில் கையை வைத்துக்கொண்டிருப்பராம். இந்த ஐதிஹ்யத்தால் ஆழ்வாருடைய ப்ராவண்யம் எல்லைகடந்து, தம்மையும் தாம் மறந்திருந்தமை விளங்குகின்றதல்லவா?

இனி, திருவேங்கடமுடையானிடத்தில் நம்மாழ்வார் தாமான தன்மையில் சாஸ்த்ரார்த்தங்களை வெளிப்படுத்தி அனுபவித்த நிலையினைப்பார்க்கலாம். த்வயம் என்ற மந்த்ரத்தின் முதற்பகுதியில் சொல்லப்படுவது சரணாகதி. அதாவது பெரிய பிராட்டியாரை முன்னிட்டு ஈச்வரன் திருவடிகளைத் தஞ்சமாகப் பற்றுவது. இரண்டாம்பகுதியின் பொருள் அச்சேர்த்தியில் கைங்கர்யத்தை ப்ரார்த்தித்தல். இந்தச் சரணாகதியையும் கைங்கர்ய ப்ரார்த்தனையையும் முறையே 'அகலகில்லேன்', 'ஒழிவில்காலம்' என்னும் இரண்டு பாசுரங்களாலும் நம்மாழ்வார் திருவேங்கடமுடையானிடத்திலே செய்தார். மாறனடிபணிந்து உய்ந்தவரான எம்பெருமானாரும் ஸ்ரீபாஷ்யத்தின் தொடக்கத்தில், ब्रह्मणि श्रीनिवासे भवतु मम परस्मिन् शेमुषी भक्तिरूपा (ப்ரஹ்மணி ஸ்ரீநிவாஸே பவது மம பரஸ்மிந் சேமுஷீ பக்திரூபா) என்று பரப்ரஹ்ம சப்தத்தின் பொருளான அலர்மேல் மங்கையுறை மார்பனிடத்தில் தமக்கு பக்தி உண்டாக வேண்டும் என்று அருளிச்செய்தார். வேதார்த்த ஸங்க்ரஹம் என்று ப்ரஸித்தமான க்ரந்தமும் திருவேங்கடமுடையானெதிரில் எம்பெருமானார் செய்த உபந்யாஸமேயாகும். ஆக ஆழ்வாரும் எம்பெருமானாரும் மிக உகந்த ஸ்தானமாதல் பற்றிக் கோயிலைக் காட்டிலும் ஆதரிக்கத் தகுந்த இடம் திருமலை என்பதாயிற்று. இதனால் கோயிலுக்குக் குறையொன்றும் ஏற்படாது நஹிநிந்தா ந்யாயத்தை இங்கு நினைக்க

ஆசார்யருசி பரிக்ருஹீதமான அர்த்தமே இவ்வாத்மாவுக்குத் தஞ்சம் என்பர் பெரியோர். கண்ணபிரான் தருமபுத்திரனை பீஷ்மரிடத்தில் தர்மோபதேசம் பெறும்படி ஏவினதாகவும், தருமபுத்திரன் பீஷ்மரை அணுகி, **को धर्मस्सर्वधर्माणां भवत: परमो मत:** (கோ தர்மஸ் ஸர்வ தர்மாணாம் பவத: பரமோ மத:) ('உயர்ந்த தர்மமாகத் தேவரீர் கருதியிருக்கும் தர்மம் யாது?') என்று கேட்டதாகவும், அதற்கு பீஷ்மர் **एष मे सर्वधर्माणां धर्मोऽधिकतमो मत: । यद्भक्त्या पुण्डरीकाक्षं स्तवैरर्चेन्नरस्सदा ॥** (ஏஷ மே ஸர்வ தர்மாணாம் தர்மோऽதிகதமோ மத:, யத்பக்த்யா புண்டரீகாக்ஷம் ஸ்தவைரர்சேந்நரஸ்ஸதா' - 'ஸ்ரீமந்நாராயணனைப் பூஜிப்பது தான் உயர்ந்த தர்மமென்று நான் கருதியிருப்பது' என்று பதிலளித்ததாகவும் ஸஹஸ்ரநாமஸ்தோத்ரத்திலே சொல்லப்படுகிற ஐதிஹ்யத்தைக் கொண்டு இதைத் தெளியலாம். வேதபுருஷனும் நம்மாழ்வாரும், எம்பெருமானாரும் ஆகிய ஆசார்யர்கள் எந்த அர்த்தத்தை உகந்து அநுஷ்டித்திருக்கிறார்களோ அந்த அர்த்தம்தான் நம்மாலும் உகந்து அநுஷ்டிக்கத் தகுந்தது என்னத் தடையில்லையன்றோ! அதைச் சிறிது காண்போம்.

வேதபுருஷன் **द्रष्टव्य: श्रोतव्यो मन्तव्यो निदिध्यासितव्य:** (த்ரஷ்டவ்ய: ச்ரோதவ்யோ மந்தவ்யோ நிதித்யாஸிதவ்ய:) முதலிய வேத வாக்யங்களினால் மோக்ஷோபாயமாக பக்தியை விதித்தான். **मुमुक्षुर्वै शरणं अहं प्रपद्ये** (முமுக்ஷுர்வை சரணமஹம் ப்ரபத்யே) என்ற வாக்கியத்தினால், ப்ரபத்தியையே (சரணாகதியையே) அநுஷ்டித்தான். நம்மாழ்வார் தமது ப்ரபந்தங்களினால் பக்தி செய்ய வேணும் என்று பலவிடங்களில் உபதேசித்துவிட்டு, 'அகலகில்லேன்' என்ற பாசுரத்தினால் சரணாகதியையே ஆசையுடன் அநுஷ்டித்தார். எம்பெருமானாரும் இதை அடியொற்றி, ஸ்ரீபாஷ்யத்தில் பல இடங்களிலும் பக்தியை விதித்துவிட்டு, கத்யத்ரயத்தினால் ப்ரபத்தியையே தாம் உகந்து அநுஷ்டித்தார். இம்மூவரும் பக்தியை உபதேசித்தார்களே தவிர

அநுஷ்டித்தது ப்ரபத்தியையே ஆதலால் பக்தி ப்ரபத்திகளுள் ப்ரபத்திதான் (ஆசார்யர்கள் ஒரு மனதாக உகந்தது காரணமாக) சிறந்தது. அதுதான் நம்மாழும் உகந்து பின்பற்றத் தகுந்தது. அப்படிப்பட்ட ப்ரபத்திக்குப் பயன் கைங்கர்யமே ஆகும் என்பது விசிஷ்டாத்வைத மதக் கொள்கை.

இனி, திருவேங்கடமுடையானிடத்தில் நம்மாழ்வார் ஈடுபட்டு உபாயோபேய நிஷ்கர்ஷம் செய்தருளினமையைச் சிறிது விவரிப்போம். இளையபெருமாள் இராமபிரானிடம் अहं सर्वं करिष्यामि 'அஹம் ஸர்வம் கரிஷ்யாமி' (எல்லா அடிமைகளையும் நான் செய்வேன்) என்றுப்ரதிஜ்ஞை செய்தார். பிராட்டியை முன்னிட்டு இராமபிரானை, கைங்கர்யத்திற்காகத் தஞ்சம் புகுந்தார். நம்மாழ்வாரும் திருவேங்கடமுடையானிடம் கைங்கர்யம் செய்ய வேண்டும் என்று பாரித்தார். பிராட்டி புருஷகாரமாகத் திருவேங்கடமுடையானைச் சரணம் புகுந்தார். ஆயினும் இளையபெருமாளைக் காட்டிலும் நம்மாழ்வார் உயர்ந்தவர். எங்ஙனேயென்னில்;

'எல்லாம் தெரியும்' என்பதைக் காட்டிலும் 'தெரியாதது ஒன்றும் இல்லை' என்பதல்லவோ உயர்ந்தது! இளைய பெருமாள், "நீர் ஏவியதெல்லாம் செய்யக் கடவேன்" என்றாரே தவிர, இராமபிரான் காட்டிற்கு வரவேண்டாம் என்று தடுத்ததைக் கேட்கவில்லை. ஆகையால் 'எல்லாம் செய்யக் கடவேன்' என்றது,'எல்லாம் தெரியும்' என்பதுபோல் குறைந்ததே! இனி, 'தெரியாதது ஒன்றுமில்லை' என்பதைப்போல் உயர்ந்தது ஆழ்வாருடைய பாரிப்பு. 'வழுவிலா அடிமை செய்ய வேண்டும் நாம்'- தொண்டு செய்தலில் ஒன்றும் குறையாமல் செய்யவேண்டும் என்கிற ஆழ்வார் வாக்கு. பொய்யில் பாடல் ஆதலால் தெரியாதது ஒன்றும் இல்லை என்பதுபோல் ஆழ்வார் செய்யாத தொண்டு இல்லை என்பது விளங்குவதால் ஆழ்வார் வாக்கு உயர்ந்தது அல்லவா?

இனி, 'அகலகில்லேன்' என்ற பாசுரத்தில் அனுஸந்தித்த அர்த்தத்தைச் சிறிது அனுபவிக்கலாம். அவ்வர்த்தமே சரணாகதி என்ற ப்ரபத்தியாகும். பிராட்டியைப் புருகாரமாகக் கொண்டு குணபூர்த்தியுள்ள திருவேங்கடமுடையானை ஆழ்வார் தம்முடைய புகலில்லாமையைச் சொல்லிக்கொண்டு சரணம் புகுகிறார் என்பது இப்பாசுரத்தால் விளங்குகிறது. 'அகலகில்லேன் இறையும் என்று அலர்மேல் மங்கை உறை மார்பா!' என்ற முதலடியில் பிராட்டியைப் புருஷகாரமாகப் பற்றுகிறார். பிராட்டியால் பேறு பூர்த்தியாகிறது. மோக்ஷம் நமக்குக் கிடைக்கவேணுமானால் அதற்கு நான்கு காரணங்கள் இன்றியமையாதன என்பர். அவையாவன, சரீரம், ஆத்மா, ஸர்வேச்வரன், பிராட்டி என்பன. வராகப்பெருமாள் பூமிப் பிராட்டிக்கு உபதேசிக்கும்போது, सुस्वस्थे शरीरे सति 'ஸுஸ்வஸ்த்தே சரீரே ஸதி' என்று சரீரத்தைப் பேற்றுக்கு உபாயமாக அருளினார். நிவ்ருத்தனான (தன்னைத் தானே காப்பாற்றிக் கொள்வதிலிருந்து மீண்ட) ஆத்மா காரணம் என்பது திருமந்த்ரத்தில் நம: என்கிற பதத்தினால் தெரியவருகிறது. अहं त्वा सर्व पापेभ्यो मोक्षयिष्यामि 'அஹம் த்வா ஸர்வ பாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி' என்ற சரமச்லோகத்தினால், ஸர்வேச்வரனான தான் காரணம் என்பதைக் கண்ணபிரானே அருளிச்செய்தான். பிராட்டி புருஷகாரமானாலல்லது ஸர்வேச்வரன் கார்யம் செய்ய மாட்டானென்று த்வய மந்த்ரத்தில் தெரிய வருதலால், அவளால்தான் கார்யம் பூர்த்தியாகும் என்று விளங்குகிறது. அதனால்தான் ஆழ்வார் பிராட்டியைப்பற்றுகிறார் முதலடியிலே.

பிராட்டி இருந்தால்தான் நம் கார்யம் கைகூடும் என்பது இராவணன், காகாசுரன் என்ற இருவரது கதைகளையும் நோக்குவார்க்கு விளங்கும். இராவணன் சாப பயத்தினால் சீதையிடம் சேஷ்டை செய்யவில்லை. காகாசுரனோ சீதையிடம் பெருத்த அபசாரத்தைச் செய்தான். இராவணனும் முதல்நாள் போரில் चचाल चापं च मुमोच वीरः (சசால சாபஞ்ச முமோச வீர:)

என்னும்படி செயலற்று நின்றான். காகாசுரனும் त्रीन्लोकान् संपरिक्रम्य तमेव शरणं गतः 'த்ரீந் லோகாந் ஸம்பரிக்ரம்ய தமேவ சரணம் கத:' என்கிறபடியே இராமபிரான்முன்னிலையில் செயலற்று விழுந்தான். செயலற்ற நிலை நோக்கி இராமபிரான் காப்பாற்றுவதானால் இருவரையும் காப்பாற்றவேண்டும், அல்லது இருவரையும் கொன்றொழிக்கவேண்டும். அதற்கு மாறாக காகாசுரனைக் காட்டிலும் பாபம் குறைந்த இராவணனைக் கொன்றதும், இராவணனைக் காட்டிலும் பாபியான காகாசுரனைக் கொல்லாததும் ஏன் என்று கேட்பார்க்கு, இராவணன் செயலற்று நின்றபோது பிராட்டி அருகில் இல்லாததும், காகம் செயலற்றுக் கிடந்தபோது பிராட்டி அருகில் இருந்ததும்தான் இராவணன் மாண்டதற்கும் காகம் உயிர் தப்பியதற்கும் முறையே காரணம் என்று ஆசார்யர்கள் அருளிச் செய்திருப்பது தெளிவைப் பிறப்பிக்கவல்லது. 'பிராட்டியின் வார்த்தையை எம்பெருமான் கேட்பனோ, அவன் யாருக்கும் வசப்படாத ஸ்வதந்த்ரனன்றோ?' என்று மேலும் கேட்பார்க்கு ஒன்று கூறித் தெளிவு பிறப்பிக்கலாம். அதாவது இராவண வதம் முடிந்த பிறகு, திருவடி (அனுமன்) சீதையிடம் சென்று, 'உன்னை முன்பு நலிந்த இந்தராக்ஷஸிகளை வதைக்க எனக்கு அனுமதி செய்ய வேண்டும்' என்று கேட்க, 'இவர்களிடம் தயைபாராட்ட வேணும் நீர். உலகத்தில் தவறு செய்யாதவர் யாரும் இலர்' என்று கூறித் திருவடியைப் பொறுப்பிக்கவில்லையா? பிடித்தது விடாத குரங்குச் சாதியில் பிறந்த அனுமனையும் பொறுப்பித்த பிராட்டி தன் சொல்லைத் தட்டாத எம்பெருமானைத் திருத்தி நம் கார்யம் செய்யமாட்டாளோ என்பதுதான்.

அவதாரகாலத்தில் பிராட்டிக்குச் சிறிதுபோது பிரிவென்பது நேருமாகிலும், திருவேங்கடமுடையான் திருமார்பில் இறையும் அகலகில்லாமல் பிராட்டி உறைகின்றாள் ஆகையால், தம் பேறு தப்பாதென்று திருவுள்ளம் பற்றுகிறார் ஆழ்வார். அப்படித் தாம் பற்றின புருஷகாரபலத்தால் எம்பெருமானிடத்தில்

தலையெடுக்குமவையான வாத்ஸல்யம், ஸ்வாமித்வம், ஸௌசீல்யம், ஸௌலப்யம், (குற்றத்தை நற்றமாகக் கொள்ளுதல், தலைமை, தாழ்ந்தவரோடும் புரையறக் கலத்தல், கண்ணுக்கு இலக்காந்தன்மை) எனும் நான்கு குணங்களை 'நிகரில் புகழாய், உலகம் மூன்றுடையாய், என்னை ஆள்வானே, நிகரிலமரர் முனிக்கணங்கள் விரும்பும் திருவேங்கடத்தானே' என்று முறையே நான்கு ஸம்போதனங்களுள்ள இரண்டு மூன்றாம் அடிகளால் அருளிச் செய்கிறார். 'புகலொன்றில்லா அடியேன் உன்னடிக்கீழ் அமர்ந்து புகுந்தேனே' என்ற நான்காமடியால் அப்படிப்பட்ட குணங்களை உடைய திருவேங்கடமுடையான் அடிக்கீழ் அமர்ந்து புகுகின்றார் (சரணாகதி செய்கின்றார்).

ஆத்மைக்ய ஜ்ஞானத்தால் மோக்ஷம் உண்டாகும் என்பர் அத்வைதிகள். எம்பெருமானையே தஞ்சம் என்று பற்றினால் அவன், கைங்கர்யமாகிற மோக்ஷஸாம்ராஜ்யத்தை அளிப்பான் என்பர் விசிஷ்டாத்வைதிகள். ஆக, பரமாசார்யரான நம்மாழ்வார் இத்திருமலையெம்பெருமானிடத்தில் மிகவும் ஈடுபட்டு, 'அகலகில்லேன்', 'ஒழிவில்காலம்' என்ற பாட்டுக்களினால் முறையே சரணாகதியையும் கைங்கர்யப்ரார்த்தனையையும் செய்து உபாயோபேய நிஷ்கர்ஷம் செய்தருளினாராயிற்று.

இங்ஙனம் கைங்கர்யமே மோக்ஷமென்பதும் அதற்கு எம்பெருமானே தஞ்சம் என்பதும் ஆகிய பகவத் ராமாநுஜ ஸித்தாந்தமென்று சொல்லப்படுகிற விசிஷ்டாத்வைத ஸித்தாந்தம் திருவேங்கடமுடையானோடு சேர்த்துச் சிறிது அனுபவிக்கப்பட்டது.

இது, 40 ஆண்டுகளுக்கு முன்பு, திருப்பதி நம்மாழ்வார் ஸன்னிதியில் ஸ்ரீ உவே. ந்யாய வேதாந்த மஹாவித்வான் காரப்பங்காடு வேங்கடாசார்ய ஸ்வாமி அருளிய உபந்யாஸத்தின் தொகுப்பு.

# [௨]

# திருவோணத் திருவிழா

**காணலுறுகின்றேன் கல்லருவி முத்துதிர
ஓணவிழவில் ஒலியதிர - பேணி
வருவேங்கடவா என்னுள்ளம் புகுந்தாய்
திருவேங்கடமதனைச் சென்று.**

இது ஆழ்வார்கள் பதின்மரில் நான்காமவரான திருமழிசைப் பிரான் அருளிய நான்முகன் திருவந்தாதியின் நாற்பத்தொன்றாம் பாசுரமாகும். திருவேங்கடமுடையான் தனது திருவோணத் திருவிழாவின் சிறப்பை, ஆழ்வார் தமது அகக் கண்ணுக்குக் காட்டியருளக் கண்டு அனுபவித்து அவ்வளவில் திருப்தி பெறாமல் திருவேங்கடமலைக்கே சென்று, அச்சிறப்பினை வெளிக்கண்ணால் கண்டு களிக்கத் தாம் கொண்டுள்ள ஆசையை அவ்வெம்பெருமானையே விளித்து விண்ணப்பம் செய்கிறார்.

ஓணவிழவில் - திருவோண நன்னாளை முக்யமாகக் கொண்டு நடத்தும் திருவிழாவில், கல்லருவி - 'கல்'லென்று ஒலித்துக்கொண்டு பாயும் அருவிகளிலிருந்து, முத்து உதிர - சிங்கம் பிளந்த யானை மத்தகங்களின் முத்துக்களும், மூங்கில் உதிர்த்த முத்துக்களும் உதிரா நிற்கவும், ஒலி அதிர - வேத ஆகம பாராயண ஒலிகளும், வாத்தியவொலிகளும் முழங்கா நிற்கவும், பேணி வருவேங்கடவா - திருமால் திருவைகுந்தத்தையும் விட்டு நமக்காக வந்து நிற்கிற இத்திருமலையே நாமும் சென்று சேர வேண்டிய இடமென்று கருதி, பக்தர்கள் திரள்திரளாக விரும்பிச் சென்று சேரப்பெற்றதான வேங்கடமலையை உறைவிடமாகக் கொண்ட எம்பெருமானே, என்னுள்ளம் புகுந்தாய் - நான் உன்னை இடைவிடாமல் நினைந்து இன்புறுமாறு என் மனத்தினுள் புகுந்தாய். முத்துக்களை உதிர்க்கும் அருவிகளின் ஒலியோடும், வேத வாத்தியங்களின் ஒலியோடும் வேங்கடத்திற்கு விரும்பி வந்து சேர்ந்து உன்னைத் தொழுகின்ற பக்தர்களோடும் அங்கு

அவர்களுக்கு நீ காட்சியளிக்கின்ற நிலையோடும் கூட என் உள்ளத்தினுள்ளே புகுந்துவிட்டாய் என்றபடி. நானோ என்றால், திருவேங்கடமதனைச் சென்று காணலுறுகின்றேன் - நீ எழுந்தருளியிருக்கும் திருவேங்கட மலையை வந்து கிட்டி உன்னைக் காண ஆசைப்படுகின்றேன். அதாவது, - அகக் கண்ணால் உன்னைக் கண்டு இன்புறுவதில் திருப்தியடையாமல், வெளிக்கண்கள் கொண்டு உன்னையும், உன் பக்தர்களையும், திருவிழாக் கோலம் பூண்ட திருமலையையும், அங்கு அருவிகள் முத்துக்களை உதிர்ப்பதையும் காணவேண்டும்; வேத வாத்தியங்களின் ஒலிகளையும், அருவிகளின் 'கல்'லென்ற ஒலியையும் கேட்கவேண்டும்; இதற்காகத் திருவோணத் திருவிழாவின்போது திருவேங்கடமலைக்கு வரவேண்டும் என்று நான் விரும்புகிறேன் என்றபடி.

பேணிவருதல் (விரும்பி வருதல்) என்பதற்குக் கருத்தாவாக (எழுவாயாக) 'பக்தர்கள்' என்ற சொல்லை வருவித்துப் பொருள் கூறப்பட்டது. இனிப் பாட்டிலுள்ள வேங்கடவனையே கருத்தாவாகக் கொண்டு, 'பக்தர்களை' என்றும், 'என்னை' என்றும் செயப்படு பொருளாக வருவித்து இரண்டு வகையாகப் பொருள் உரைத்தலும் ஏற்கும்.

திருவோணத் திருவிழாவில் உன்னைத் தொழவேணும் என்று நினைத்துத் திருவீதியில் நிற்கின்ற பக்தர்களை நீ விரும்பி வெவ்வேறு வாகனங்களில் வருகின்ற வேங்கடவனே! என்று கூறுதல் ஒருவகை. எல்லாரும் உன்னை விரும்பித் திருவேங்கடமலைக்கு வந்து மிகமிகச் சிறப்பாகத் திருவிழா நடத்தாநிற்க, அதனைப் பொருட்படுத்தாமல், பேணிவரு வேங்கடவா - நீ என்னை விரும்பி நான் இருந்தவிடத்திற்கு வருகின்ற (வந்த) வேங்கடவனே! என்பது மற்றொரு வகை. திருவேங்கடமதனைச் சென்று காணலுறுகின்றேன் என்பதற்கு இவ்விருவகைகளிலும் பொருள் வேற்றுமையில்லை.

காணல் என்பதற்குச் செயப்படு பொருளாக 'உன்னை' என்ற ஒரு சொல்லைச் சேர்த்துப் பொருள் கண்டோம். அவ்வாறன்றி, 'திருவேங்கடமதனை' என்று பாட்டிலுள்ளதையே செயப்படுபொருளாக்கிப் பொருள் காண்போம். அதாவது நீ திருமலையை விட்டு என்னை விரும்பி வந்து என்னுள்ளத்தில் புகுந்துவிட்டாய். வெகு தொலைவிலுள்ள வைகுந்தத்தில் இருந்தால் விரைந்துவந்து என்னுள்ளத்தில் புகுரமுடியாதென்று கருதியன்றோ, அதை அறவே விட்டிட்டு அண்மையிலுள்ள திருவேங்கடமலையில் நீ வந்து நின்றருளியது. அங்ஙனம் நீ விரைந்து வந்து என்னுள்ளத்தின்கண் புகுவதற்குக் காரணமாயிருந்த திருமலைதன்னையே நன்றியறிவுடன் வந்துகாண ஆசைப் படுகிறேன் என்றவாறு.

"நானோ திருமலையில் வந்து உன்னைக் காண விரும்பியிருக்கின்றேன். நீயோ அங்கு நின்றும் என்னுள்ளத்தே வந்து உறைகின்றாய். இனி நான் என் செய்வேன்" என்றும் பொருள் கொள்ளலாமென்று, காஞ்சி மஹாவித்வான் பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசார்ய ஸ்வாமி தமது திவ்யார்த்த தீபிகை என்ற விரிவுரையில் அருளிய பொருள் மிகமிக நினைத்தின்புறத்தக்கது.

இனி, இத்திருவந்தாதியில் இப்பாட்டுக்கு முன்னே மூன்றாம் பாட்டில், "அழைப்பன் திருவேங்கடத்தானைக் காண, இழைப்பன் திருக்கூடல் கூட - மழைப்பேரருவி மணிவரன்றி வந்திழிய ஆனை வெருவி அரவொடுங்கும் வெற்பு என்று திருவேங்கட வெற்பினைக் கூடவும், திருவேங்கடத்தானைக் காணவும் கூடவும் தாம் கூடலிழைப்பதாக அருளியுள்ளதை நோக்குங்கால், இவ்வாழ்வார்க்குத் திருவேங்கடநாயகன் திறத்தில் நாயகியாந்தன்மையும் உண்டென்று கொள்ளத் தகுதியுண்டு. இதற்குப்பின் ஐந்தாம் பாட்டில், "கொண்டு குடங்கால் மேல் வைத்த குழவியாய்த் தண்டவரக்கன் தலை தாளால்

பண்டெண்ணிப் போம்குமரன் நிற்கும் பொழில் வேங்கட மலைக்கே போம் குமரருள்ளீர் புரிந்து'' என்று திருவேங்கடத்தானைக் குமரனாக - நித்ய யௌவனப் பருவம் உடைய புருஷோத்தமனாக இவர் அருளியுள்ளமை இக் கருத்தை வலியுறுத்தும். ஆக, திருவேங்கடமுடையானுடைய யௌவனத் தன்மைக்கும் அழகுக்கும் தோற்றுப் பெண்ணாகத் தம்மைப் பாவனை செய்யும் ஆழ்வார் - தலைவியாகிய தம்முள்ளத்துள்ளே திருவேங்கடவன் புகுந்துகொண்டு திருமலையில் தன் திருவோணத் திருவிழாக் கண்டருளுவதைக் காட்டிக் கொடுக்க அதையே நினைந்து நினைந்து உருவெளிப்பாடாகக் கண்டு கொண்டிருக்கச் செய்தேயும், அம்மாத்திரத்தில் மனவமைதி பெறாமல், நாயகன் எழுந்தருளியிருக்கும் திருவேங்கடத்திற்கே சென்று அவனையும் திருவிழாச் சிறப்பினையும் தாம் காணுதலையும், அவ்வெம்பெருமான் நாயகியாகிய தம்மைக் காணுதலையும் தாம் விரும்புவதாக, 'காண லுறுகின்றேன்' என்று அப்பெருமானுக்கு விண்ணப்பிக்கிறாரென்று கொள்ளுதலும் பொருந்தும்.

இங்ஙனம் ஆழ்வார் சிறப்பித்துக் கூறிய திருவோணத் திருவிழா- பொதுவாக 'ஓணவிழவு' என்று குறிப்பிடப்பட்டிருந்த போதிலும், புரட்டாசி மாதத்தில் வரும் திருவோணத் திருவிழா என்றே கொள்ளத் தக்கது. புரட்டாசித் திருவோணமே திருவேங்கடமுடையான் திருவவதாரம் செய்தருளிய நாளாகவும் அதையே முக்கிய நாளாகக் கொண்டு நான்முகக் கடவுள் திருவேங்கடவனுக்குப் பத்து நாள்கள் உற்சவம் செய்வித்ததாகவும் புராணங்களினால் அறியப்படுவது இதற்கு அத்தாட்சியாகும்.

பாத்மபுராணத்தைச் சேர்ந்த வேங்கடாசல மாஹாத்ம்யம் பதினொன்றாம் அத்யாயத்தில் - முதலாம் க்ருத யுகத்தில் நாவலந்தீவினில் பாரத நாட்டில், கங்கைக்குத் தெற்கே இருநூறு யோஜனைத் தொலைவிலும், கிழக்குக் கடலுக்கு மேற்கே ஐந்து

யோஜனைத் தொலைவிலும் உள்ள நாராயணகிரி என்று பெயர் பெற்ற திருவேங்கடமலையில் ஸ்வாமி புஷ்கரிணியின் தென்மேற்குக் கரையில் தேவர் கணங்கள் வேண்டுகோளுக்கு இரங்கிய லோக ரக்ஷகனாகிய பகவான் பரமபுருஷன் புரட்டாசி மாதம் திருவோண நக்ஷத்ரம் கூடிய துவாதசியில் திங்கட் கிழமையன்று ஸித்தயோகத்தில் ஸ்ரீநிவாஸனாகத் தோன்றினான் என்றுள்ளதும்,

பவிஷ்யோத்தர புராணத்திலுள்ள வேங்கடாசல மாஹாத்ம்யம் பதினான்காம் அத்யாயத்தில் - திருவேங்கட முடையான் நான்முகக் கடவுளைக் குறித்து, "லோக பிதாமஹனான பிரம்மனே! எனக்கு நீ கொடியேற்று விழாத் தொடக்கமாக ரதோத்ஸவம் முடிய, பல வாஹனங்களுடன் திருநாளை நடத்தி வைக்கக் கடவாய்" என்று கட்டளையிட அப்பிரமதேவன் தொண்டைமான் சக்ரவர்த்தியிடம் இச் செய்தியை அறிவித்து, தேவசில்பியான விச்வகர்மாவை அழைத்து அவ்வரசனிடம் சேர்க்க, அரசனாணையின்படி அச்சிற்பியும் குடை, சாமரம், ஆலவட்டம், பல வாகனங்கள், திருத் தேர் முதலியவற்றை நிருமிக்க, பின்பு பகவானுடைய உத்தரவின்படியே அங்க வங்க கலிங்காதி தேசங்களிலிருந்து அந்தணர், அரசர், வணிகர், வேளாளர் முதலிய பல சாதிகளைச் சேர்ந்த மக்களை வரவழைக்க, அதன் பிறகு பிரமன் முனிவர்களையும் அரசர்களையும் அழைத்து வைத்துக்கொண்டு அங்குரார்ப்பணம் (திருமுளை), மறுநாள்காலை த்வஜாரோஹணம் (கொடியேற்றுவிழா) ஆரம்பமாக அவபிரதம் (தீர்த்தவாரி), புஷ்பயாகம் இறுதியாக உத்ஸவத்தை நடத்தினார். அதில் த்வஜாரோஹண தினத்தில் காலை பெருமாளுக்கு வாஹனம் ஆளின் பல்லக்கு; இரவு சேஷ வாஹனம். இரண்டாம் நாள் காலை சேஷசயனனும் சேஷாத்ரி வாஸியும் ஸதா சேஷனிடம் அன்புடையவனுமாகிய பகவானுக்கு மறுபடியும் சேஷவாஹனம்; இரவு ஹம்ஸ வாஹனம். மூன்றாம்

நாள் காலை ஸிம்ஹ வாஹனம்; இரவு முத்து மண்டபம். நான்காம் நாள் காலை கற்பக விருக்ஷம் (புன்னைமர வாஹனம்); இரவு ஸர்வபூபால வாஹனம். ஐந்தாம் நாள் காலை அமரர்க்கு அமுதமளித்த மோஹினீ ரூபம் தரித்த பெருமானுக்குப் பல்லக்கு; இரவு வேதத்தினால் அறியப்படும் வேங்கடவனுக்கு வேத மூர்த்தியாகிய கருட வாஹனம். ஆறாம் நாள் காலை ஆஞ்ஜநேய வாஹனம்; மாலை வஸந்தோத்ஸவத்தின் போது மங்களகிரி; இரவு யானை வாஹனம். ஏழாம் நாள் காலை ஸூர்யப்ரபை; மாலை மலர் கொய்ய விரும்பும் மலர்மகள் மண்மகளுடன் கூடிய பெருமானுக்குத் தோட்ட உத்ஸவத்தில் மங்களகிரி; இரவு சந்த்ரப் பிரபை. எட்டாம் நாள் காலை திருத்தேர்; இரவு குதிரை வாஹனம். ஒன்பதாம் நாளில், அதாவது திருவேங்கடவன் அவதரித்த புரட்டாசித் திருவோண நன்னாளில் பின்மாலை பல்லக்கு. பின் காலையில் சூர்ணாபிஷேகமானவுடன் மங்கள கிரியில் ஏறியருளித் திருவீதி வலம் வந்த பிறகு பெருமானுக்கு ஸ்வாமி புஷ்கரிணியில் தீர்த்தவாரி; இரவு கொடியிறங்கும் விழாவில் மங்களகிரி; பத்தாம் நாள் புஷ்பயாகம். இவையெல்லாம் முறையே நடந்தன. இங்ஙனம் திருவேங்கடமுடையானுக்குத் திருவிழா நடத்தி வைத்த பிரமன் அப்பிரானை வணங்கி வழிபட்டு அவனாணை பெற்றுத் தனது ஸத்யலோகம் சென்றார். தொண்டைமான் சக்ரவர்த்தியும் அங்ஙனமே பகவானுடைய அனுமதி பெற்றுத் தன் ஊர்க்குத் திரும்பினான் - என்றுள்ளதும் இங்குக் குறிக்கொள்ளத் தக்கன.

இதுவரையில் காட்டிய புராணச் செய்திகளின்படியே மற்ற மாதத்திய திருவோண நன்னாட்களைவிட, புரட்டாசித் திருவோணத் திருநாளுக்கே பெருமை மிக்கிருப்பதனால், திருமழிசைப்பிரானும் அதனையே தமது பாசுரத்தில் "ஓணவிழவு" என்று அருளிச் செய்திருப்பரென்று கூறத் தடையில்லை.

# [3]

# பஞ்சமீ தீர்த்தம்

சுகமுனிவர் தவம் செய்து முக்தி பெற்ற இடம் திருச்சுகனூர். அது இப்போது திருச்சானூர் என்று திரிந்து வழங்கப்பட்டு வருகிறது. பெரும்பாலோர் அலர்மேல்மங்காபுரம் என்று இதைக் குறிக்கின்றனர். இங்குப் பத்மஸரோவரம் என்று புராணப் பிரசித்தமான திருக்குளம் ஒன்று அமைந்துள்ளது. இத் தடாகத்தில் இங்குக் கோயில்கொண்டு எழுந்தருளியுள்ள அலர்மேல் மங்கைத் தாயாருக்கு ப்ரம்மோத்ஸவத்தின் முடிவில் அவப்ருதம் (தீர்த்தவாரி உற்சவம்) நடைபெறுகிறது. இது ஒவ்வொரு வருடமும் கார்த்திகை மாதத்தில் சுக்லபக்ஷ பஞ்சமியில் நடப்பதனால் பஞ்சமீதீர்த்தமென்றே இத் தீர்த்தவாரி உத்ஸவம் மக்களால் குறிக்கப் படுகின்றது. இதற்குப் பல தேசங்களிலிருந்து பக்தர்கள் திரண்டுவந்து இக் குளத்தில் நீராடித் தூய்மை பெற்று அலர்மேல்மங்கைத் தாயாரின் திருவருளுக்கு இலக்காகித் தாம்தாம் கோரிய பயனைப் பெற்று வருவது கண்கூடு.

சில ஊர்களில் தெய்வத்திற்குப் பெருமை சிறந்திருக்கும். மற்றும் சில இடங்களில் தீர்த்தத்திற்கு மகிமை உயர்ந்திருக்கும். இத் திருச்சுகனூரிலோவெனில், அலர்மேல் மங்கைத் தாயாருக்கும் பத்மஸரோவரத்திற்கும் உண்டான மாட்சிமை ஒப்புயர்வற்றது. திருவேங்கடமுடையானால் தவம் செய்து பெறப்பட்டமை தாயாருக்கும், அப்பெருமானால் தோண்டப்பெற்று அத்தாயார் உதித்தமை பத்மஸரோவரத்திற்கும் சிறந்த பெருமையாகும்.

திருவேங்கடவன் எப்போதும் தன்னைப் பிரியாத அலர்மேல் மங்கையைப் பிரிவதும் மறுபடியும் தவம் செய்து பெறுவதும், குளம் தோண்டுவதும் ஏனென்று எழுகின்ற கேள்விக்குப் பாத்மபுராணம் க்ஷேத்ரகாண்டம் 34ம் அத்யாயம் விடையளிப்பதைச் சிறிது காண்போம்.

ஸத்வகுணமுள்ள பரம்பொருள் எதுவென்று நிச்சயிப்பதற்காக முனிவர்கள் எல்லாரும் ஒன்றுகூடி ஆராய்ந்து, அதைத் தெரிந்து கொண்டு வருவதற்காகப் பிருகு முனிவரை அனுப்பினர். அவர் ஸத்யலோகத்திற்குச் சென்றுபிரமதேவனைச் சபையில் கொலுவீற்றிருக்கும்போது வணங்கினார். அப்பெருமான் முனிவரை நலம் விசாரித்தல், கண்கொண்டு பார்த்தல் ஏதும் செய்யாமல் இருக்கவே, அம்முனிவர் நான்முகக் கடவுளைச் செருக்குடைமை கொண்டுரஜோகுணமுள்ளவராக நிச்சயித்துக் கொண்டு கைலாச மலை சென்றார். அங்குப் பார்வதியுடன் லீலை புரிந்துகொண்டிருக்கும் சிவபெருமான் முனிவருக்குக் காட்சியளிக்கவில்லை. அம்முனிவர் அப்பெருமானை எப்போதும் போகத்தில் ஆழ்ந்திருப்பது காரணமாகத் தமோகுணமுடையவராக அறுதியிட்டுப் பின்பு வைகுந்தம் சென்றார். அங்கு வாழும் திருமாலைத் திருமார்பில் காலால் உதைத்தார். உடனே திருமால் எழுந்திருந்து "மிகக் கடினமான அடியேனுடைய மார்பில் உதைத்ததனால் தேவரீருடைய மெல்லிய திருவடி நொந்திருக்குமே!" என்று உபசார வார்த்தை கூறி, அவர் திருவடியை வருடிப் பின்பு அம்முனிவரைப் பலவகையாகப் பூஜித்தார். முனிவரோவெனில், 'நாம் உதைத்ததற்குச் சிறிதும் சினமடையாமல், நம் காலைப் பிடித்து நல்வார்த்தை சொல்லி உபகரித்த இத் திருமாலே ஸத்வ குணமுடைய பரம்பொருளாவார் என்று தேறித் திரும்பிவந்து அச்செய்தியை முனிவர்க்கு உரைத்தனர் என்னும் இக்கதை உலகில் மிகவும் பிரசித்தமானதே. ஆனால் அம்முனிவர் திரும்பிய பின்பு வைகுந்தத்தில் நடந்ததைப் பற்றிப் பாத்மபுராணம் கூறும் கதையைக் கேளீர்!

பிருகுமுனிவர் தான் வசிக்கும் திருமாலின் திருமார்பில் உதைத்ததனால் கோபம் கொண்ட திருமகள், வைகுந்த உலகை விட்டுப்பாதாளவுலகம் சென்று சேர்ந்து விட்டாள். அங்கு வாசம் செய்யும் கபில முனிவர் அவளுக்குக் கோவில்கட்டி ஆராதனை

செய்ய, வெகுகாலம் திருமகள் அங்கு எழுந்தருளியிருந்தாள். இதற்குள் திருமால் திருமகளைத் தேடுவதற்காகப் பூலோகத்திற்கு வந்து 56 தேசங்களிலும் பல உருக் கொண்டு தேடிக் கொண்டே கொல்லாபுரத்தை அடைந்தார். அங்கு ஒரு கோயிலில் முன்பு அகத்திய முனிவரால் வழிபாட்ப் பெற்ற அர்ச்சை வடிவிலுள்ள திருமகளைக் கண்டார். அங்குப் பல முனிவர்களால் பூஜிக்கப்பட்டு வருகின்ற அத்திருமகளைத் தாமும் பூஜித்துக் கொண்டே பத்தாண்டு காலம் கழித்தார்.

அப்போது ஒருநாள் திருமாலைக் குறித்து ஓர் அசரீரி வாக்குத் தோன்றியது. 'திருமகளைக் காணவிரும்பும் விஷ்ணு பகவானே கலங்காதீர். இங்கிருந்து தெற்கே செல்லும் க்ருஷ்ணா நதிக்குத் தெற்கில் 22 யோஜனைத் தூரத்தில் உள்ளதும் முனிவர்கள் வசிக்கும் இடமுமாகிய ஸுவர்ணமுகி நதிக் கரையில் கடப்பாரை கொண்டு ஓர் தடாகம் தோண்டும். அதன் கரையில் தவம் செய்யும். தேவலோகத்திலிருந்து பொற்கமலமலர்க் கொடிகளைக் கொண்டு வந்து அக்குளத்தில் வையும். அதன் கரையில் பலவிதமான மலர்ச் செடிகளையும் நட்டுத் தோட்டம் ஏற்படுத்தும். அங்கு இருந்து கொண்டு திருமகளைப் பன்னிரண்டு ஆண்டு காலம் திருமகளின் மந்த்ரத்தை ஜபம் செய்து கொண்டும் தாமரை மலர்களால் அவளை அர்ச்சனை செய்து கொண்டும் தவம் செய்வீராகில், அக்குளத்தில் ஒரு பொற்றாமரை மலரில் பதினாறு வயதிற்குட்பட்ட யுவதியாய்த் திருமகள் தோன்றுவாள். ஆகையால் ஸுவர்ணமுகி நதிக்கரைக்கு விரைவாகச் செல்வீராக' என்பதே அந்த அசரீரி வாக்கு.

அத்தகைய நல்வார்த்தையைச் செவியுற்ற திருமால் கருடன் மீதேறி ஸுவர்ணமுகி நதிக்கரை சேர்ந்து பின்பு வராகப் பெருமாள் எழுந்தருளியுள்ள திருவேங்கடமலையை அடைந்து அங்கு ஸ்வாமி புஷ்கரிணியைக் கண்டார். வராகப் பெருமாள் கோவிலின் அருகே கருடவாகனத்திலிருந்து இறங்கி தான்

இன்னாரென்று யாரும் அறியாவண்ணம் ஓர் அரசகுமார வேடங் கொண்டு ஸ்வாமி புஷ்கரிணியில் நீராடிப் பல முனிவர்களால் விருந்திட்டு உபசரிக்கப்பெற்றுப் பின்பு காலையில் எழுந்திருந்து முனிவர்களிடம் விடை பெற்றுக் கருடனைக் குதிரையாக மாற்றி அதன் மீதேறிப் பல பொற்றாமரை மலர்கள் நிறைந்த ஸுவர்ணமுகி நதியை அடைந்தார். அங்கு இறங்கி ஓர் சமமான இடத்தில் கடப்பாரையால் பூமியை வெட்டி அழகிய குளமொன்றை நிருமித்தார். உடனே வாயுதேவனை நினைத்தார். அவன் எதிரே தோன்றவும் அவன் மூலமாகத் தேவலோகத்திலுள்ள பொற்றாமரை மலர்க் கொடிகளை இந்திரனுடைய அனுமதியுடன் வரவழைத்து அக்குளத்தில் நட்டார். அதன் கரையில் கிழக்கு முகமாகச் சூரிய தேவனைப் பிரதிஷ்டை செய்தார். அவனது அருளால் எப்போதும் மலர்ந்தே இருக்கும் தாமரைமலர்களைக் கொண்டு, திருமகளைப் பெறுவதற்காகச் சூரிய பகவானை அர்ச்சனை செய்து வந்தார். விடியற்காலையில் லக்ஷ்மீ மந்த்ரத்தை ஒரு நாளுக்கு மூவாயிரந் தடவைகள் ஜபித்துக் கொண்டும் அக்குளத்தின் நன்னீரால் முன்னூறு தடவைகள் தர்ப்பணம் செய்து கொண்டும் அதன் பொற்றாமரை மலர்கள் ஆயிரங் கொண்டு திருமகளை அர்ச்சித்துக் கொண்டும், வேறுணவில்லாமல் பாலை மட்டுமே அருந்தி அச்சூரிய பகவானுக்கு எதிரில் மேற்கு முகமாக இருந்து லக்ஷ்மியை ஆராதனம் செய்வதிலேயே ஊற்றமுடையவராய் வேறெண்ணமேதுமின்றி இப்படியே பன்னிரண்டு ஆண்டுகள் தவமியற்றினார்.

இங்ஙனமிருக்க இப்பெருமானை இந்திரன், தன் பட்டத்திற்காகத் தவம் செய்யும் ஓர் மனிதனாக நினைத்து இவர் தவத்தைக் கெடுக்க ஊர்வசி முதலிய தேவமாதர்களை ஏவினான். அவர்கள் இவரை மோஹிக்கச் செய்வதற்காக இவரெதிரில் தோன்றி ஆடவும் பாடவும் ஆரம்பித்தார்கள். சிறிது கண் திறந்து பார்த்த திருமால் ஒருமாயையை உண்டாக்க

அம்மாதர்கள் அனைவரும் கவிழ்தலையிட்டு ஓடிப்போயினர். திருமால் தடையொன்றுமின்றித் தவத்திலேயே ஊன்றலானார்.

இவ்வாறு பன்னிரண்டு வருஷங்கள் கழிந்து பதிமூன்றாம் ஆண்டில் கார்த்திகை மாதம் சுக்லபக்ஷம் பஞ்சமி திதி வெள்ளிக் கிழமை உத்தராட நக்ஷத்ரம் வர அன்று மைத்திரமென்ற முகூர்த்தத்தில் அத்தாமரைத் தடாகத்தின் நடுவில் ஒளித்திரட்சி ஒன்று தோன்றியது. அதன் மத்தியத்தில் பொற்றாமரை மலர்களால் நிருமிக்கப்பட்ட உயர்ந்ததோர் தேர் தென்பட்டது. அத் தேருக்குள்ளே ஆயிரம் இதழ்கள் பொருந்தியதோர் தாமரை மலர் போன்ற திருக்கண்களும் செந்தாமரைப் பூப்போன்ற இரு பாதங்களும் கமல மலரின் மணம் வீசுகின்ற திருவாயும் கோவைக் கனி போன்ற உதடுகளும் புன்சிரிப்பும் தானுமாய்ப் பலவகை ஆபரணங்களும் பீதாம்பரமும் அணிந்து நறுமணம் மிக்க செங்கழுநீர் மலர் மாலையைக் கழுத்தில் அணிந்து கொண்டு, திருமகள் அங்குத் தவமியற்றுந் திருமாலை ஆசையுடன் கடைக் கணித்துக் கொண்டே தோன்றினாள்.

அப்போது தேவர்கள் துந்துபிகளை முழங்கினர். சங்குகள் ஒலித்தன. தேவமாதர் ஆடினர். கந்தருவர் பாடினர். இவ் வொலியைக் கேட்டு பிரமன் சிவன் இந்திரன் முதலிய தேவர்கள் அனைவரும் அக்குளக்கரையினருகில் வந்தனர். திருமகளைக் கண்டனர். சில தேவர்களும் அசுரர்களும் இவள் நம்மையே மணம் புரிவாள், நம்மைத் தான் அடையப் போகிறாள் என்றபடி மனப்பால் குடித்துக் கொண்டிருக்கையில், திருமகள் புன் சிரிப்புடன் எழுந்து வந்து தன் கழுத்திலணிந்த செங்கழுநீர் மலர்மாலையைக் களைந்து திடீரென்று திருமாலின் கழுத்தில் ஸமர்ப்பித்து அப்பெருமானை அணைத்துக் கொண்டு, அதன் பின்பு அங்குக் குழுமியிருக்கும் எல்லோரையும் பார்த்தாள். திருமாலின் திருமார்பில் சேர்ந்த அத்திருமகளின் கடாக்ஷத்தால் தேவரும் அசுரரும் முனிவரும் தந்தம் கோரிக்கைகள் நிறைவேறப் பெற்றனர்.

நெடுநாள் பிரிந்து வருந்திப் பின்பு தவமியற்றித் திருமகளைப் பெற்ற பாக்கியசாலியான திருமால் (ஓ தாமரைத் தடாகமே! உனது கரையின் கண் சூரிய பகவானுக்கு எதிரில் தவமியற்றிய நான் திருமகளை நித்தியமாகப் பெற்றேன். இன்று முதல் நீ பத்மஸரோவம் (உயர்ந்த தாமரைத் தடாகம்) என்று பெயர் பெற்றுத் திருமகளின் அன்பிற்குப் பாத்திரமாய் மூவுலகங்களிலும் பிரசித்தி அடையக் கடவாய்' என்று அக்குளத்திற்கு வரமளித்துவிட்டுக் கருடவாகனமேறி ஆதிசேஷமலை (திருவேங்கடமலை) சென்று சேர்ந்து ஸ்வாமி புஷ்கரிணியின் கரையில் திருமகளோடு மகிழ்ந்து விளையாடிக் கொண்டிருக்கிறார். இதுதான் பத்மபுராணம் கூறும் கதை.

இப்புராணத்தின்படி அலர்மேல் மங்கைத் தாயார் கார்த்திகை மாதம் சுக்லபக்ஷம் உத்திராடம் வெள்ளிக்கிழமை கூடிய பஞ்சமியில் திருவவதாரம் செய்தமை தெரிய வருவதால் அப்பிராட்டியின் அர்ச்சா விக்ரஹத்திற்கு நடத்தப் பெறும் பிரம்மோத்ஸவத்தின் 9வது நாளான கார்த்திகை மாதப் பஞ்சமியன்று அவளுக்குத் தீர்த்தவாரி உத்ஸவம் தொன்று தொட்டு நடத்தப்பட்டு வருகிறது. அந்த நன்னாளில் குளத்தின் கரையில் உள்ள மண்டபத்தில், அலர்மேல்மங்கைத் தாயாருக்குத் திருமஞ்சனமாகித் தீர்த்தவாரி நடைபெற்றுத் திருமலையில் இருந்து வந்த திருவேங்கடமுடையானது பிரசாதமான பட்டுப் புடவை ரவிக்கை மஞ்சள் குங்குமப்பூ மலர்மாலை முதலியவைகள் ஸமர்ப்பிக்கப் பெற்று நிவேதமானவுடன் திவ்யப் பிரபந்த பாராயணமும் - சாற்றுமுறையும் செய்யப்படுகிறது. இப்பஞ்சமீ தீர்த்தப் பெருமையைக் கண்டு களித்தல் அனைவர்க்கும் அவசியமானதொன்றாகும். அலர்மேல்மங்கைத் தாயாரின் அருளைப் பெற விரைந்து வாரீர்!

[4]

# திருமலையும் ஸ்ரீவைஷ்ணவ ஸம்ப்ரதாய நெறியும்

மயர்வற மதிநலம் பெற்ற அருளப்பெற்ற ஆழ்வார்களின் அருளிச் செயல்களை அலப்யலாபமாகப் பெற்ற நூற்றெட்டுத் திருப்பதிகளில் சிறந்தவையென்று சொல்லப்படுகின்ற கோயில் திருமலை பெருமாள் கோயில் என்னும் மூன்றினுள்ளே நடுநாயகமாக விளங்குவது திருவேங்கடமலையாகும். இத் தலத்தை விஷ்ணு க்ஷேத்திரமென்றும், இதன் கண் திகழும் திருவேங்கடமுடையானைத் திருமாலென்றும் வேதம் இதிஹாஸம் புராணம் ஸ்ரீபாஞ்சராத்ர ஸ்ரீவைகானஸாகமங்கள் ஆழ்வார்கள் அருளிய திவ்யப்ரபந்தங்கள் முதலிய ப்ரமாண க்ரந்தங்கள் சிறப்பித்துக் கூறுகின்றமை அனைவரும் அறிந்த விஷயம். இத்திருப்பதியில் எம்பெருமானுக்கு ஸ்ரீவைகாநஸாகம முறைப்படி நித்ய திருவாராதன மஹோத்ஸவாதிகளெல்லாம் தொன்று தொட்டு நடைபெற்று வருகின்றன. திருவேங்கடமுடையானைப் பற்றி இதிஹாஸ புராணங்களிலுள்ள ஏறக்குறைய பன்னீராயிரம் ச்லோகங்களடங்கிய ஸ்ரீவேங்கடாசல மாஹாத்ம்யப் பகுதியும் நான்கு வேதங்கள் போலே பண்டிதர்களால் இக் கோவிலில் தினந்தோறும் பாராயணம் செய்யப்பட்டு வருகின்றது. இவையனைத்தும் ஸ்ரீவைஷ்ணவ ஸம்ப்ரதாய நெறிமுறைகளேயாயினும் ஆழ்வார்களின் திவ்யப்ரபந்தாநுஸந்தானமும் எம்பெருமானார் முதலிய பூர்வாசாரியர்களின் ஸம்பந்தமும் இல்லையாகில், திருமலையில் நடைபெறும் ஸ்ரீவைஷ்ணவ ஸம்ப்ரதாய நெறி முறைக்குப் பூர்த்தியில்லையாகையால், அருளிச் செயல்களின் அநுஸந்தானத்தைப் பற்றியும் பூர்வாசாரியர்களின் ஸம்பந்தத்தைப் பற்றியும் சிறிது விண்ணப்பிக்கப்படுகிறது. ஆறாயிரப்படி குருபரம்பராப்ரபாவம் ஸ்ரீவேங்கடாசல

இதிஹாஸ மாலை திருமலையொழுகு முதலிய நூல்களிலுள்ள விஷயங்களேயன்றி வேறு விஷயங்கள் இதில் இடம்பெறவில்லை. ப்ராமாணிகர்கள் குற்றம் நீக்கிக் குணமுண்டேல் கொள்ள வேண்டுகிறேன்.

எம்பெருமானார் முதன் முதலாகத் திருமலைக்கு எழுந்தருளும்போது திருமலையடிவாரத்தில் கோயில் கொண்டெழுந்தருளியிருக்கும் ஆழ்வார்களைத் திருவடி தொழுதாரென்று ஆறாயிரப்படி குருபரம்பரா ப்ரபாவத்தில் காண்கிறபடியாலும் திருமலைக்கு எழுந்தருளின ஆழ்வார் திருவரங்கப் பெருமாளரையரைத் திருமலை நம்பியும், அனந்தாழ்வானும், 'நாளை முதல் இங்கு நடைபெறும் அத்யயனோத்ஸவத்தில் தேவரீர் நாலாயிரத்தையும் தேவ கானத்திலேறிட்டு, அனுஸந்திக்க வேணும்' என்று ப்ரார்த்தித்ததாகத் திருமலையொழுகில் உள்ளதனாலும், திருமலையில் எம்பெருமானார் காலத்துக்கு முன்பே அருளிச் செயலின் அநுஸந்தானமும் ஆழ்வார்களின் கோயில்களும் உண்டென்பது அறியக் கிடக்கின்றது. அருளிச் செயல் அநுஸந்திக்கும் முறையில் சில திருத்தங்கள் எம்பெருமானாரால் ஏற்படுத்தப்பட்டன என்பது பின்னர் விண்ணப்பிக்கப்படும்.

## திருவேங்கடமுடையான் அருளிச்செயல் கேட்டருளும் ப்ரகாரம்

தினந்தோறும் காலை மாலைகளில் நடக்கும் தோமால ஸேவைகளில் (திருவாராதன காலங்களில்) திருவேங்கடமுடையான் அருளிச் செயல் கேட்டருளுகிறார். காலைத் தோமால ஸேவையில் திருப்பள்ளியெழுச்சியும், திருப்பாவையும் எழுத்தெழுத்தாக எண்ணி ஸேவித்து, அமுது செய்தவுடன் திருப்பாவை சாத்துமுறை செய்யப்படுகிறது. மாலைத் தோமால ஸேவையில் - திருப்பல்லாண்டு, பூச்சூடல், காப்பிடல்,

சென்னியோங்கு, விண்ணீலமேலாப்பு, ஊனேறு செல்வத்து, தாயே தந்தை, வாடமருதிடை, ஏழையேதலன், ஒழிவில் காலம், உலகமுண்ட, கங்குலும் பகலும், ஆழியெழ, அமலனாதிபிரான், கண்ணிநுண்சிறுத்தாம்பு என்கிற பதினைந்து பதிகங்கள் ஸேவித்து உடனே சாத்துமுறையாகும். இத் திருவாராதன காலங்களில் பெரிய ஜீயர் அல்லது சிறிய ஜீயர் அல்லது ஏகாங்கி ஸ்ரீவைஷ்ணவர் திருத்துழாயை அர்ச்சகரிடத்தில் கொடுத்து, 'ஸாதித்தருள ஸ்ரீசைலேசதயாபாத்ர'மென்று தொடங்கிவிட்டு அருளிச் செயல் ஸேவித்துக் கொண்டே பெருமாளுக்குத் திருவால வட்டம் ஸமர்ப்பித்துக்கொண்டிருப்பர். சாத்துமுறை யாகும்போது அர்ச்சகர், ஜீயர் ஸ்வாமி கொடுத்த திருத்துழாயைப் பெருமாள் திருவடிகளில் சேர்த்துக் கொண்டிருப்பர். இப்படி மூலவர் உத்ஸவர்களிடம் நடக்கும் எல்லாச் சாற்றுமுறைக் காலங்களிலும் அந்தந்த மூர்த்திகளின் திருவடிகளில் திருத்துழாயை ஸமர்ப்பிக்கும் முறை நடந்து வருகிறது. சாத்துமுறையில் கடைசியில் 'பல்லாண்டு - ஸர்வதேசதசா காலேஷ்ு . . . . . . . மணவாளமாமுனியே இன்னுமொரு நூற்றாண்டிரும்' ஸேவித்து முடிந்தவுடன் கோஷ்டிக்குத் தீர்த்தம் ஸ்ரீசடகோபன் ப்ரஸாதங்கள் யதோசிதம் விநியோகிக்கப்படும்.

தோட - மால (தோட்டமாலை) அல்லது தோள்மாலை என்பது தோமால என்றாயிற்றென்பர். திருமலைக்குப் புஷ்ப மண்டபமென்று ப்ரஸித்தியுள்ளதனாலும் திருவாராதனத்தின் கடைசியில் புஷ்பமாலை ஸமர்ப்பிப்பதனாலும் திருவாராதான ஸமயத்தைத் தோமாலஸேவை என்று முன்னோர் குறித்திருக்கலாம்.

வியாழக்கிழமைகள்தோறும் நடக்கும்பூலங்கித் தோமால ஸேவையில் *வாடமருதிடை போகிக்கு முன்பாக *ஊன்வாட

உண்ணாதென்னும் திருமொழி யனுஸந்தான முமுண்டு. வெள்ளிக்கிழமைகள் தோறும் மூலவருக்குத் திருமஞ்சன காலத்தில் *வெண்ணெயளைந்த, *பின்னை மணாளனை என்ற இரண்டு பதிகங்களும் திருமஞ்சனமானவுடன் நாச்சியார் திருமொழியும், பிறகு நடக்கும் ஸேவையில் சிறிய திருமடலும் சேவித்து, அமுது செய்தவுடன் நாச்சியார் திருமொழி சாத்துமுறை செய்யப்படும். வெள்ளிக்கிழமைகளில் மூன்று தோமால சேவைகள் நடைபெறும்.

ஒவ்வொருநாளும் உத்ஸவருக்கு நடக்கும் திருக்கல்யாண உத்ஸவத்தில தேங்காயுருட்டும்போது *வாரணமாயிரம் அநுஸந்திக்கப்படும்.

ஆண்டு முழுதும் காலையில் திருக்காப்பு நீக்கும் போது திருப்பள்ளியெழுச்சியே அநுஸந்திக்கப்பட்டு வந்ததென்றும், மணவாளமாமுனிகள் திருமலைக்கு எழுந்தருளியபோது தம்முடனிருந்த ப்ரதிவாதிபயங்கரம் அண்ணாவுக்கு நியமிக்க, அண்ணா, ஸுப்ரபாதம், ஸ்தோத்ரம், ப்ரபத்தி மங்களமென்னும் நான்கு துதிகளை விண்ணப்பிக்க, அதற்கு மனமகிழ்ந்த மாமுனிகள் - மார்கழி மாதத்தில் மட்டும் திருப்பள்ளியெழுச்சி யையும், மற்ற மாதங்களில் இந்நான்கு துதி நூல்களையும் திருக்காப்பு நீக்கும்போது அனுஸந்திக்குமாறு நியமித்தா ரென்றும் பெரியோர்கள் பணிப்பர்.

திருக்கார்த்திகைத் திருவாராதனத்தின்போது திருவேங்கடமுடையான் மூலவரிடத்தில் 'வையந்தகளியா', 'அன்பேதகளியா', 'திருக்கண்டேன்' என்ற மூன்று பாசுரங்களை ஜீயர்ஸ்வாமி முதலியோர் அநுஸந்திக்கையில் மூன்று ஹாரத்திகள் நடைபெறும். திருமாலைத் திருவிளக்கேற்றிக் கண்ட முதலாழ்வார்களின் பாசுரங்களை 'செந்தமிழ் பாடுவார் (முதலாழ்வார்கள்) தாம் வணங்கும் தேவர்' என்று கலியனால்

சிறப்பிக்கப் பட்ட திருவேங்கடமுடையானுக்கு நடக்கும் தோராதனத்தில் அநுஸந்திப்பது அத்யந்தம் உசிதமன்றோ?

மார்கழி மாதத்தில் பின்மாலை திருக்காப்பு நீக்கும்போது திருப்பள்ளியெழுச்சி, பின்பு தநுர்மாஸத் தோமால ஸேவையில் உபதேசரத்தினமாலை, மாலைத் தோமாலஸேவையில் திருவாய்மொழி நூற்றந்தாதி ஆகியவை ஸேவிக்கப்படும். வெள்ளிக்கிழமைகளில் திருமஞ்சனமானவுடன் நாச்சியார் திருமொழியும், தோமாலஸேவையில் சிறியதிருமடலும் அநுஸந்திப்பதில்லை. தோமால ஸேவையில் உபதேச ரத்தினமாலை ஸேவித்து அமுதுசெய்தவுடன் சாத்துமுறை செய்யப்படும். மார்கழி மாதத்தில் அனத்யயனம் நீங்கி விட்டாலும் பின்மாலை ஸேவித்துவிட்டபடியால், காலைத் தோமாலஸேவையில் உபதேசரத்தினமாலையே ஸேவிக்கப் படும். மாலைத்தோமாலஸேவையில் மற்ற மாதங்களிற் போலவே நித்யாநுஸந்தானமே ஸேவிக்கப்படும்.

கார்த்திகைமாதத்தில் திருக்கார்த்திகைப் பண்டிகைக்குப் பிறகு காலை மாலை தோமால ஸேவையில் முற்கூறியபடி உபதேசரத்தினமாலையும் திருவாய்மொழிநூற்றந்தாதியும் முறையே ஸேவிக்கப்படும்.

ஒவ்வொரு திருவோணத்தின்போதும் மாலையில் திருமலையப்பன் புறப்பாட்டில் முதல்திருவந்தாதி ஸேவித்து வந்து, பெருமாள் கோபுரவாசலுக்குள் எழுந்தருளும்போது சாத்துமுறை, பல்லாண்டு வாழிதிருநாமத்துடன் நடைபெறும். ரோஹிணியில் கண்ணன் புறப்பாட்டில் பெரியாழ்வார் திருமொழியும் புனர்வஸுவில் சக்ரவர்த்திதிருமகன் புறப்பாட்டில் பெருமாள் திருமொழியும் ஸேவித்து முன்பு போலவே கோபுர வாசலுக்குள் சாத்துமுறை செய்யப்படும். திருவாதிரை தோறும் எம்பெருமானார் திருமலையப்பனுடன் புறப்பட்டு திருவீதி

எழுந்தருளும்போது இராமாநுச நூற்றந்தாதியை அநுஸந்தித்துக் கோபுரவாசலுக்குள் சாத்துமுறை செய்யப்படும். அனத்யயன காலங்களில் இவ்வெல்லாப் புறப்பாடுகளிலும் உபதேசரத்தினமாலை ஸேவிக்கப்படும்.

அழகியசிங்கர், மேயான் வேங்கடம் வராகப் பெருமாள், சேனைமுதலியார் ஆகியவர்களின் வருஷத் திருநக்ஷத்திரத்தின் போது திருப்பல்லாண்டு, கண்ணிநுண்சிறுத்தாம்பு, கோயில் திருவாய்மொழி, இராமாநுசநூற்றந்தாதி, உபதேசரத்தின மாலை ஆகியவை ஸேவித்து சாத்துமுறை செய்யப்படும். ஸ்ரீஜயந்தியன்று இரவில் உக்ரஸ்ரீனிவாஸமூர்த்திக்கு நடக்கும் த்வாதசாராதனத்திலும், திருமலையப்பனுடைய வஸந்த உத்ஸவத்தின் மூன்றாம் நாளிலும், வராகப் பெருமாளுடைய அத்யயனோத்ஸவத்திலும், திருமலை எம்பெருமானார் ஸன்னிதியில் நடைபெறும் மணவாளமாமுனிகள் சாத்து முறையிலும் முன்புபோலவே ஸேவை சாத்துமுறைகள் நடைபெறும்.

ஸ்ரீஜயந்தியன்று இரவில் கண்ணனுக்குத் திருமஞ்சனம் ஆனவுடன் பெரியாழ்வார் திருமொழி ஸேவை சாத்துமுறைகள் நடைபெறும்.

மூன்றுநாள்கள் நடைபெறும் திருப்பவித்ரோத்ஸவத்தின் போது, திருமலையப்பனுடைய மாலைப்புறப்பாட்டில் முறையே முதல் மூன்று திருவந்தாதிகள் ஸேவித்து, சாத்துமுறை செய்யப்படும். ஹோமம் நடக்கும்போது திருவாய்மொழி ஸேவை உண்டு.

## ப்ரஹ்மோத்ஸவம்

புரட்டாசி மாதத்தில் நடைபெறுகிற திருவேங்கடமுடையானுடைய ப்ரஹ்மோத்ஸவத்தின் முதல்

நாள் காலை த்வஜாரோஹணத்திற்காக நடக்கும் தோளுக்கினியான் புறப்பாட்டில் இயல்கோஷ்டி இல்லை. இரவு சேஷவாகனத்தில் முதல் திருவந்தாதி. இரண்டாம்நாள் காலை சிறிய சேஷவாஹனத்திலும், இரவு ஹம்ஸவாகனத்திலும் இரண்டாம் திருவந்தாதி. மூன்றாம் நாள் காலை ஸிம்ம வாகனத்திலும், இரவு முத்துப்பந்தலிலும் (சப்பரம்) மூன்றாம் திருவந்தாதி. நான்காம் நாள் காலை கற்பக விருக்ஷத்திலும் இரவு ஸர்வ பூபாலத்திலும்(விமானம்) நான்முகன் திருவந்தாதி. ஐந்தாம் நாள் காலை பல்லக்கில் நாச்சியார் திருக்கோலத்திலும் இரவு பெரியதிருவடி வாகனத்திலும் திருவிருத்தம். ஆறாம் நாள் காலை சிறிய திருவடியிலும் இரவு யானை வாகனத்திலும் பெரிய திருவந்தாதி. மாலையில் நடக்கும் வஸந்தோத்ஸவத்தில் இயல் இல்லை. இவ்வாறு நாட்களிலும் இயற்பாவிற்குப் பின்பு பெரியாழ்வார் திருமொழியைச் சிறிது சிறிதாக சேவித்து முடிப்பர்கள். ஏழாம் நாள் காலை சூர்யப்ரபையிலும் இரவு சந்த்ர ப்ரபையிலும் எட்டாம்நாள் காலை திருத்தேரிலும் பெரிய திருமொழி ஸேவித்துக் திருத்தேர் நிலை சேர்ந்தவுடன் பெரியாழ்வார் திருமொழியும் பெரியதிருமொழியும் சாத்துமுறை செய்யப்படுகிறது. திருவாசிரியம், திருவெழுகூற்றிருக்கை, சிறிய திருமடல், பெரியதிருமடல் ஆகியவற்றையும் திருத்தேர்ப் புறப்பாட்டிலேயே ஸேவித்து முடிப்பர்கள். எட்டாம்நாள் இரவு குதிரை வாகனத்தில் நாச்சியார் திருமொழி. ஒன்பதாம்நாள் காலையில் பல்லக்குப் புறப்பாட்டில் பெருமாள் திருமொழியும் உள்ளே எழுந்தருளியவுடன் சூர்ணாபிஷேகத்தில் திருச்சந்த விருத்தம் முதலாகக் கண்ணிநுண்சிறுத்தாம்பு ஈறாகவுள்ள ப்ரபந்தங்களும் திருக்குறுந்தாண்டகமும் ஸேவித்து, தீர்த்தவாரிக்காக ஸ்வாமி புஷ்கரிணிக்கெழுந்தருளும்போது திருநெடுந்தாண்டகம் ஸேவித்து நிறுத்தப்படும். ஸ்வாமி புஷ்கரிணிக் கரையில் ஸ்ரீவராஹப் பெருமாள் ஸந்நிதி வாசலில்

உபயநாச்சிமாருடன் திருமலை அப்பனுக்கும் சக்கரத்தாழ்வாருக்கும் அலங்காரத் திருமஞ்சனமாகிச் சக்கரத்தாழ்வார் தீர்த்தம் ஸாதித்தவுடன் திருவாராதனத்தில் திருப்பள்ளியெழுச்சி, திருப்பாவை, திருப்பல்லாண்டு, கண்ணிநுண்சிறுத்தாம்பு, கோயில் திருவாய்மொழி, இராமநுச நூற்றந்தாதி, உபதேசரத்தினமாலை சேவித்துச் சாத்துமுறை செய்யப்படும். திருப்பாவைக்கும் திருவாய்மொழிக்கும் நடுவில் திருநெடுந்தாண்டகச் சாத்துப் பாட்டுக்களும் ஸேவிக்கப்படும். எட்டாம் நாள் திருத்தேர் அடியிலும் ஒன்பதாம்நாள் வராஹப் பெருமாள் ஸந்நிதி வாசலிலும் சாத்துமுறையில் இயற்சாத்தும் (நன்றும் — மலர்ந்த பூவே) வாழித் திருநாமமும் சேவிக்கப்படும். ஒன்பதாம் நாளிரவு த்வஜாவரோஹணப் புறப்பாட்டில் இராமாநுசநூற்றந்தாதி பத்தாம்நாள் த்வாதசாராதனமும் திருவாய்மொழியாயிர ஸேவையும் நடந்ததாகக் திருமலை யொழுகில் காணப் படுகின்றது. ஆனால் அது அன்று நடவாமல் அடுத்த வருஷம் ஸ்ரீ ஜயந்தி அன்று உக்ரமூர்த்திக்கு நடக்கின்றது. கோயில் திருவாய்மொழிதான் ஸேவிக்கப்படுகின்றது. இதற்குக் காரணம் தெரியவில்லை. எட்டு ஒன்பதாம் நாட்களில் காலை வேளைகள் நீங்கலாக மற்ற நாட்களில் எல்லாம், வாகனத்திலிருந்து படிகளைந்து கோயிலுக்கெழுந்தருளும் போது கோபுர வாசலுக்குள் சாத்துமுறையும், எம்பெருமானார் ஸந்நிதி வாசலில் இயற்சாத்து வாழிகளும் ஸேவிக்கப்படும். கோயில் வாசலில் நடக்கும் திருவந்திக்காப்பின்போது திருமலையப்பன் அமுது செய்யும் இயற்படியென்றே வழங்கப்படுகிற தோசைப்படி எம்பெருமானார்க்கு அமுது செய்விக்கப்பட்டு, இயற்சாத்தின் போது விநியோகிக்கப்படும். திருப்பவித்ரோத்ஸவத்தில் மூன்று நாட்களிலும் எம்பெருமானார் திருமுன்பாக இயற்சாத்தும் இயற்படி விநியோகமும் நடக்கும். இரண்டு மூன்று வருடங்கட்கு

ஒருமுறை தனியாக நடக்கும் நவராத்ரி ப்ரம்மோத்ஸவத்திலும் முற்கூறியபடியே ஸேவை சாத்துமுறைகளும் இயற்படியும் இயற்சாத்தும் நடைபெறும்.

ப்ரம்மோத்ஸவங்களில் திருவேங்கடமுடையான் திருநக்ஷத்ரமாய் தீர்த்தவாரி நாளான ச்ரவணத்தினன்று இரவு புறப்பாட்டில் இராமாநுச நூற்றந்தாதிச் சாத்து முறையானவுடன், பெருமாள் கருட மண்டபத்தில் த்வார பாலகரின் ஸமீபத்தில் வடக்கு முகமாக எம்பெருமானாரைக் கடாக்ஷித்துக் கொண்டே எழுந்தருளியிருந்து அமுது செய்து ஆஸ்தானம் கண்டருளுவர். ஒவ்வொரு மாதத் திருநக்ஷத்ரமான திருவோணத்தில் கிழக்கு முகமாகக் கருடனைக் கடாக்ஷித்துக் கொண்டு ஆஸ்தானம் கண்டருளும் திருமலையப்பன் ப்ரஹ்மோத்ஸவத் திருவோணத்தில் மட்டும் வடக்கு முகமாக எழுந்தருளி எம்பெருமானார்க்கு ஸேவை ஸாதிப்பதை ப்ரஹ்மோத்ஸவத்தை நன்றாக நடத்தி வைத்தற்காகத் திருமலையப்பன் எம்பெருமானாருக்கு உபயநாச்சிமார்களுடன் தன்னை முற்றூட்டாக அனுபவிப்பிக்கும் ஸர்வஸ்வதானமென்று பெரியோர் அருளிச் செய்வர்.

## திருவத்யயனோத்ஸவம்

திருமலையில் திருவத்யயனோத்ஸவம் இருபத்து மூன்று நாட்கள் நடைபெறுகின்றது. வைகுண்ட ஏகாதசிக்கு முன்பு வரும் அமாவாசையன்றிரவு தோமால ஸேவையாகி அமுது செய்தவுடன் திருமலையப்பன் உபயநாச்சிமார்களுடன் புறப்பட்டுத் திருமாமணி மண்டபம் சேர்ந்து கிழக்கு முகமாக திவ்ய ஸிம்ஹாஸனத்தில் வீற்றிருப்பர். நம்மாழ்வார் திருமேனி திருமலையில் இல்லாத குறை ஒருவாறு தீர அவருக்கு ஆசார்யரான ஸ்ரீஸேநாபதியாழ்வான் ஸிம்ஹாஸனத்தின் கீழே பக்கத்தில் தெற்கு முகமாக வீற்றிருப்பர். மண்டபத்தின் கீழே

எம்பெருமானாரும் தெற்கு முகமாகவே எழுந்தருளியிருப்பர். தளிகை கண்டருளியவுடன் ஜீயர் ஸ்வாமிகளும் அத்யாபகர்களும் இயற்பாவில் முதல் திருவந்தாதி முதலாகத் திருவிருத்தம் ஈறாக உள்ள ப்ரபந்தங்களில் முதற்பாட்டும் சாத்துப்பாட்டுகளும் ஸேவித்துத் தொடங்குவர்கள், மறுநாள், அதாவது பகற்பத்தில் முதல்நாள் காலை இயற்பா முழுதும் ஸேவிப்பர்கள். அன்றிரவு திருப்பல்லாண்டும் *வண்ணமாடங்கள்* பதிகமும் தொடங்குவர்கள். இரண்டாம் நாள் காலை பெரியாழ்வார் திருமொழியில் முதலிரண்டு பத்துக்கள். இரவு *சென்னியோங்கு* தொடக்கம். மூன்றாம்நாள் காலை பெரியாழ்வார் திருமொழி முடிவு பெறும். இரவு *விண்ணீலமேலாப்பு* தொடக்கம். நான்காம்நாள் காலை திருப்பாவையும் நாச்சியார் திருமொழியும். இரவு *ஊனேறு செல்வத்து* தொடக்கம். ஐந்தாம் நாள் காலை பெருமாள் திருமொழி முதல் கண்ணிநுண்சிறுத் தாம்பு முடிய ஸேவை. இரவு பெரியதிருமொழியில் *வாடினேன் வாடி*, *தாயே தந்தை* தொடக்கம். ஆறாம் நாள் காலை திருமொழியில் முதலிரண்டு பத்துக்கள். இரவு *வாட மருதிடை* தொடக்கம். ஏழாம் நாள் காலை மூன்று நான்கு பத்துக்கள். இரவு *பண்டை நான்மறையும்* தொடக்கம், எட்டாம் நாள் காலை ஐந்து,ஆறு, ஏழு பத்துக்கள். இரவு *தெள்ளியீர்* தொடக்கம். ஒன்பதாம் நாள் காலை எட்டு ஒன்பது பத்துக்கள். இரவு காதிற்கடிப்புத் தொடக்கம். பத்தாம்நாள் காலை பத்து பதினொன்று பத்துக்கள். இரவு திருக்குறுந்தாண்டகமும் திரு நெடுந்தாண்டகமும் ஸேவித்து, பெரியாழ்வார் திருமொழி பெரியதிருமொழி திருநெடுந்தாண்டகம் இவற்றைச் சாத்துவர்கள். அதன் மறுநாள் அதாவது இராப்பத்து முதல்நாள் தொடங்கி இரவில் திருப்பல்லாண்டு ஆரம்பித்துத் திருவாய்மொழியில் முறையே ஒவ்வொரு பத்தாக ஸேவித்துப் பத்தாம் நாளிரவு திருவாய்மொழி சாத்துமுறை செய்யப்படும்.

அதன் மறுநாளிரவு கண்ணிநுண்சிறுத்தாம்பு தனியாக ஸேவிக்கப் படும். அதற்கு மறுநாளிரவு இராமாநுச நூற்றந்தாதி, உபதேச ரத்தினமாலை ஸேவையாகிச் சாத்துமுறையில் இயற்சாத்து, வாழித் திருநாமம் ஸேவிக்க அத்யயனோத்ஸவம் முடிவு பெறும். ஆகத் திருமலையப்பனுக்குத் திருவத்யயனோத்ஸவம் இருபத்து மூன்று நாட்கள் அதன் மறுநாள் வராகப் பெருமாளுக்குக் கோயில் திருவாய்மொழியுடன் அத்யயனோத்ஸவம் நடைபெறும்.

பகற்பத்து சாத்துமுறையன்றும், இராப்பத்து சாத்துமுறை யன்றும், இராமாநுச நூற்றந்தாதி சாத்துமுறையன்றும் சாத்துமுறை முடிவு பெற்றவுடன் எம்பெருமானார் புறப்பட்டு ப்ரதக்ஷிணமாக மூலவர் ஸந்நிதிக்கெழுந்தருளிக் கருட மண்டபத்தில் த்வாரபாலகர்களிடம் எழுந்தருளியிருப்பர். அர்ச்சகர் மூலவரிடமிருந்து பரிவட்டம் மாலை சேஷவஸ்த்ரம் இவற்றைக் கொணர்ந்து எம்பெருமானார்க்கு அணிவித்து ஸ்ரீசடகோபன் சாதிப்பர். பிறகு ஜீயர் ஸ்வாமி முதலியோர் உடையவர் அனுஸந்திப்பதாக, *குன்றமேந்தி* *அகலகில்லேன்* *ஒழிவில் காலம்* *பல்லாண்டு* *அடியோமோடும்* என்ற பாட்டுக்களையும் கத்யத்தில் *ஓம் பகவந் நாராயண* என்று தொடங்கும் முதல் சூர்ணையையும் ஸேவிப்பர்கள். முன்னும் பின்னும் தனியனும் வாழியும் முறையே உண்டு. கோஷ்டிக்கும் ஸ்ரீசடகோபன் ஸாதிப்பதுண்டு.

பகற்பத்துசாத்துமுறையன்று, *குன்றமேந்தி* முதலிய பாசுரங்களின் ஸ்தானத்தில் *தாயே தந்தையென்றும்* என்ற பாசுரமொன்றே ஸேவிக்கப்படும். மற்றவை முன்போலவே நடக்கும். இப்படி எம்பெருமானார் மங்களாசாஸனம் செய்தருளுவதனால் திருமலையில் மூலபேரத்திற்கு ப்ராதான்யம் வந்ததென்று திருமலையொழுகு தெரிவிக்கிறது. இவ்விதமாக

இம்மூன்று நாட்களிலும் மங்களா சாஸனம் முடிந்த பின்பு எம்பெருமானார் மறுபடியும் விமான ப்ரதக்ஷிணமாகப் புறப்பட்டு தாடீ பஞ்சகம் யதிராஜ விம்சதி கோஷ்டியுடன் தம் ஸந்நிதி சேர்ந்து தீர்த்தம், அனந்தாழ்வான் (பாதுகை), ப்ரஸாதம் இவற்றைக் கோஷ்டியாருக்கு ப்ரஸாதிப்பர்.

தெலுங்கு வருஷப் பிறப்பாகிய யுகாதிப் பண்டிகை தொடங்கி நாற்பது நாட்களுக்கு திருமலையப்பனுக்கு நித்யோத்ஸவம் மாலைவேளையில் நடைபெறும். சிறிய திருமடல் வீதியில் அநுஸந்திப்பர்கள். திருவீதிப் புறப்பாடு முடிந்தவுடன் எம்பெருமானார் ஸந்நிதி வாசலில் பெருமாள் எழுந்தருளியவுடன் சுக்கு வெல்லம் கடலைப் பருப்புச் சுண்டல் பகளாபாத் அமுது செய்து கோஷ்டி விநியோகமாகும்.

எம்பெருமானார்க்கு திருமலையில் நடைபெறுகிற பத்துநாள் உத்ஸவத்தில் நாலாயிரஸேவை நடைபெறும். மாலைப் புறப்பாடுகளில் பத்துநாட்களிலும் திருமலையப்பனுடனும், காலை புறப்பாட்டுகளில் அப்பனுடைய ஸ்ரீசடகோபனுடனும் எம்பெருமானார் திருவீதி எழுந்தருள்வர். காலையில் திருவீதியிலும் பகலில் ஆஸ்தானத்திலும் இயற்பா முதலிய மூவாயிரஸேவையும் இரவு ஆஸ்தானத்தில் திருவாய்மொழி ஸேவையும் நடக்கும். காலைப் புறப்பாடாகிக் கோபுர வாசலுக்குள் இயல் முடிந்தவுடன் உள்ளே எழுந்தருளும் போது விமானப்ரதக்ஷிணத்தில் பத்து நாளிலும் தாடீ பஞ்சகம், யதிராஜ விம்சதி அநுஸந்தானமும் ஸந்நிதி சேர்ந்ததும் இயற்சாத்தும் இயற்படி விநியோகமும் நடைபெறும்.

இயல்சோஷ்யில் நடக்கும் திருமலைப் புறப்பாடுகள் எல்லாவற்றிலும் கோபரவாசலுக்குள் இயல் முடிக்கும் போது கோஷ்டிக்கு ஸ்ரீசடகோபன் ஸாதிப்பதுண்டு.

கீழ்த் திருப்பதியில் கோவிந்தராஜனுக்கு காலைத் தோமால ஸேவையில் திருப்பள்ளியெழுச்சியும் திருப்பாவையும், மாலைத் தோமால ஸேவையில் நித்யாநுஸந்தானமும், அநத்யயன காலங்களில் உபதேசரத்தினமாலாதிகளும் உண்டு. கோவிந்த ராஜன், சக்ரவர்த்தி திருமகன், திருச்சானூர்த் தாயார் இவர்களின் ப்ரஹ்மோத்ஸவங்களில் இயல் ஸேவிக்கும் க்ரமம், உடையவர் ஸந்நிதியில் இயற்சாத்து இயற்படி விநியோகம் இவையெல்லாம் திருமலையிற் போல் நடைபெறும். திருச்சானூர்த் தாயார் உத்ஸவம் அனத்யயனத்தில் வந்தால் உபதேசரத்தினமாலை திருவாய்மொழி நூற்றந்தாதிகளே ஸேவிக்கப்படும்.

கோவிந்தராஜன் மாதத் திருநக்ஷத்ரம் உத்திரத்தில் திருவந்தாதிகளே வரிசையாக ஸேவிக்கப்படும். ஒவ்வொரு மாதப் பௌர்ணமியிலும் இரவு பூலங்கியில் பெருமாள் திருமொழியும், வருஷத் திருநக்ஷத்ரம் பங்குனி உத்திரத்தில் காலையில் எண்ணெய்க்காப்பில் நாச்சியார் திருமொழியும் இரவு பூலங்கியில் பெருமாள் திருமொழியும் ஸேவிக்கப்படும்.

திருமலையில் அத்யயனோத்ஸவம் தொடங்கும் அமாவாசைக்கு அடுத்த அமாவாசையில் தொடங்கும் ஸ்ரீகோவிந்தராஜனுடைய அத்யயனோத்ஸவம் திருமலையிற் போலவே நடைபெறும். ஆழ்வார்களும் ஆசார்யர்களில் எம்பெருமானாரோடு கூரத்தாழ்வானும் எழுந்தருளி நடைபெறுவது விசேஷம். பகற்பத்து சாத்துமுறை, இராப்பத்து சாத்துமுறை, கண்ணிநுண்சிறுத்தாம்பு, இராமாநுச நூற்றந்தாதி நாட்களில் முறையே கலியன் நம்மாழ்வார் மதுரகவிகள் இராமாநுசன் ஆகியோர்க்கு கோவிந்தராஜன் மூலவரிடம் மங்களாசாஸனமும், தாமபஞ்சக, பராங்குசாஷ்டக , யதிராஜ விம்சதி ஸ்தோத்ரா நுஸந்தானமும் திருமலையிற் போலவே நடைபெறும். இராப்பத்து சாத்துமறையன்று மாலை

நம்மாழ்வார் கோவிந்தராஜனுடன் திருவீதி எழுந்தருளும்போது ஆழ்வார் மட்டும் பெருமாளைப் பிரிந்து சிறிது தூரம் வடக்கே சென்று திருமலையைப் பார்த்தெழுந்தருளியிருந்து *குன்றமேந்தி* முதலிய பாசுரங்களை ஸேவிக்க மங்களா சாஸனம் செய்தருளித் திரும்பிக் கோவிந்தராஜனுடன் சேர்ந்து ஸந்நிதிக்கெழுந்தருள்வர். திருமலை மங்களாசாஸநம் முடிந்து கோவிந்தனுடன் சேரும்வரையில் ஆளவந்தார் ஸ்தோத்ர அநுஸந்தானம். இரவு திருமாமணி மண்டபத்தில் ஆழ்வார் திருவடி தொழுகிறார்.

கீழ்த்திருப்பதியில் உள் நம்மாழ்வார், வெளி நம்மாழ்வார் என்று நம்மாழ்வார் இருவர் ஸேவை ஸாதிக்கின்றனர். வெளி நம்மாழ்வார் அத்யயந உத்ஸவத்தில் கோவிந்த ராஜனைத் திருவடி தொழுகிறார். பத்துநாளுத்ஸவம் ஸ்வப்ரபந்த ஸேவையுடன் கண்டருளுகிறார். உள் நம்மாழ்வார் கோவிந்தராஜனுடன் சாத்துமறை யன்று திருமஞ்சனமும் கோயில்திருவாய்மொழி சாத்துமுறையும் கண்டருளுகிறார். பெரியாழ்வாரும் இருவர் உளர். அவர்களில் வெளிப் பெரியாழ்வார் கோவிந்தராஜனுடன் சாத்துமுறையன்று திருப்பாவை திருவாய்மொழி சாத்துமுறை கண்டருளுகிறார்.

ஸேனைமுதலியார், பொய்கையார், பூதத்தார், பேயார், திருமழிசைப்பிரான், குலசேகரர், உள்பெரியாழ்வார், தொண்டரடிப்பொடிகள், திருப்பாணாழ்வார், முதலியாண்டான், பட்டர், பிரதிவாதிபயங்கரம் அண்ணா ஆகியவர்களுக்குப் பத்துநாள் உத்ஸவமில்லை. ஒருநாள் மட்டும் (சாத்துமுறை மட்டும்) மாதத் திருநக்ஷத்ரம் போல் நடக்கிறது. சேனை முதலியார் மூலவர் பக்கத்தில் இருக்கிறபடியால் அவர்க்கும் பெருமாளிடமிருந்து பரிவட்டம், மாலை, ஸ்ரீசடகோபன் எல்லாம் உண்டு. மற்றவர்களுக்கு இல்லை.

ஸுதர்சனாழ்வான் சாத்துமுறையன்று கோவிந்தன் திருவீதி எழுந்தருளித் திரும்பியவுடன், கோயில் திருவாய்மொழி சாத்துமுறை நடக்கிறது. கூரத்தாழ்வான் சாத்துமுறைக்குக் கோவிந்த ராஜன் எழுந்தருளுகிறார். திருவீதிப் புறப்பாடு இல்லை. கோயில் திருவாய்மொழிதான். இருவர்க்கும் ஒரே ஒருநாள் தான் உத்ஸவம்.

புண்டரீகவல்லித் தாயாருக்கு பங்குனியுத்தரம் முடிய எழுநாள் உத்ஸவம். ஆண்டாள், வெளிப் பெரியாழ்வார், கலியன், அநந்தாழ்வானுடன் கூடிய மதுரகவிகள், திருமலைநம்பி, வேதாந்தாசாரியர் இவர்களுக்குப் பத்துநாளுத்ஸவம். சாத்துமறை நாட்களில் காலையிலேயே இவர்கள் சந்திக்கு கோவிந்தராஜன் எழுந்தருளித் திருமஞ்சனம், திருப்பாவை சாத்துமுறை, மாலையில் புறப்பாடு, இரவில் திருவாய்மொழி சாத்துமுறை எல்லாம் நடைபெறுகின்றன. இவர்களெல்லாருக்கும் திருவாய்மொழியும் யதோசிதம் ஸ்வப்ரபந்தமும் ஸேவிக்கப்படும். வேதாந்ததேசிகருக்கு நாலாயிர சேவை நடக்கிறது. புண்டரீகவல்லித் தாயார், ஆண்டாள் தவிர்ந்த மற்றவர்க்குக் கோவிந்தராஜன் மூலவரிடம் திருவாய்மொழி சாத்துமுறையான பிறகு மங்களாசாஸனம் நடைபெறுகிறது. வேதாந்த தேசிகருக்கு இப்போது நடப்பதில்லை.

எம்பெருமானார்க்கும் மணவாள மாமுனிகளுக்கும் பத்து நாள் உத்ஸவம். சாத்துமுறையன்று இவர்கள் ஸந்நிதிக்குக் கோவிந்தராஜன் மாலையில் எழுந்தருளி, இவர்களுடன் தினசர்யை யதிராஜவிம்சதி ஆளவந்தார் ஸ்தோத்ர கோஷ்டியுடன் திருவீதி எழுந்தருளி இவர்கள் ஸந்நிதி சேர்ந்தவுடன் அமுது செய்து திருவாய்மொழி சாத்துமுறை கண்டருளுகிறார். எம்பெருமானார் உத்ஸவத்தில் எம்பெருமானார்க்குப் பத்து நாளும் இரண்டு வேளையும்

புறப்பாடும் நாலாயிரமும் ஸந்நிதி சேர்ந்தவுடன் இயற்சாத்து
இயற்படியும் உண்டு. மணவாள மாமுனிகளுக்கு நாலாயி
சேவையும், சாத்துமுறையன்று இரவு மட்டும் கோவிந்
ராஜனோடு புறப்பாடும் நடைபெறுகிறது. எம்பெருமானார்க்கு
சாத்துமுறையன்று காலையிலும் மாலையிலும்
கோவிந்தராஜனுடைய விமான ப்ரதக்ஷிணத்தில் தாமடபஞ்ச
யதிராஜவிம்சதி கோஷ்டி நடைபெறுகிறது. மணவா
மாமுனிகளுக்குச் சாத்துமுறையன்று திருப்பா
திருவாய்மொழி சாத்துமுறைகள் முடிந்தவுடன் இரண்
வேளைகளிலும் திநசர்யை, யதிராஜவிம்சதி அநுஸந்தானமு
நடக்கிறது. வேதாந்ததேசிகருக்குச் சாத்துமறையன்று (ஐப்பசி
திருவோணம்) வடகலையார்களின் தேசிக ஸ்தோத்ரா
ஸந்தானம் புறப்பாட்டிலும் உள்ளேயும் உண்டு.

ஸ்ரீ ஜயந்தியன்று கண்ணனுக்குப் பெரியாழ்வா
திருமொழியும், ஸ்ரீராமநவமியன்று கோவிந்தன் ஸந்நிதி இராம
பிரானுக்கும் தனிக்கோயில் சக்ரவர்த்தி திருமகனுக்கு
பெருமாள் திருமொழியும் ஸேவிக்கப்படும்.

பேரிசெட்டியாரின் ஆதீனத்திலிருக்கும் திருக்கச்சி நம்பி
ஸந்நிதியில் அவருக்குப் பத்துநாள் உத்ஸவமும் திருவாய்மொ
ஸேவையும் சாத்துமுறையன்று அதே ஸந்நிதியில் எழுந்தரு
இருக்கிற தேவப்பெருமாளுடன் புறப்பாடும் நடைபெறுகிறது

திருமலையிலும் திருப்பதியிலும் திருச்சானூரிலும் உள்
எல்லா ஸந்நிதிகளிலும் 'ஸாத்தித்தருள! ஸ்ரீசைலேச தயாபாத்ர
என்று தொடங்கி அத்யாபகர்களைக் கொண்டு ஸேவை
நடப்பிக்கும் அத்யாபகத் தலைமை ஸ்ரீமத்பரமஹம்ஸேத்யா
விசிஷ்டரான பெரிய ஜீயர் ஸ்வாமியின் தனிப்பட்ட
செல்வமாகும். அவரில்லாதபோது, ஸ்ரீமத்பரமஹம்ஸ சிறிய ஜீய
ஸ்வாமியோ, அவருமில்லாத சமயத்தில் ஏகாங்

ஸ்ரீவைஷ்ணவரோ அப்பணியைப் பெரிய ஜீயர் ஸ்வாமிக்குப் பிரதிநிதியாகச் செய்தருளுவர்கள். இந்தப் பொறுப்பைத் தேசிகர் ஸந்நிதியிலும் வடகலை ஏகாங்கி ஸ்ரீவைஷ்ணவர் மூலமாகப் பெரியவர் நிர்வஹித்தருள்வர். தேசிகர் ஸந்நிதியில் ஸ்ரீசைலேச தயாபாத்ரத்திற்குப் பதிலாக ராமாநுஜ தயாபாத்ரத்தை வடகலை ஏகாங்கி தொடங்குவர்.

இப்பெரிய ஜீயர் ஸ்வாமிக்கு அத்யாபகத் தலைமைச் செல்வத்தோடு, தர்மகர்த்ருத்வம், *சுமந்து மாமலர் நீர்சுடர் தூபங் கொண்டு* செய்யும் அத்தாணிச் சேவகம் என்ற வேறிரண்டு செல்வங்களுமுண்டு. இவற்றுக்கெல்லாம் சம்மானமாக வேங்கடக்கோன் தானுமிழும் பொன் வட்டிலில் இருந்து கோஷ்டியில் முதல் தீர்த்த மரியாதையும் மற்ற பகுமானங்களும்ப்ரஸாத பணியாரப் பங்கும்பெற்று அநுபவித்து வருகிறார் இவர். இவையனைத்தும் எம்பெருமானார்க்கு இருந்த படியினால் அவருடைய பரம்பரையில் வந்த இந்தப் பெரிய ஜீயர் ஸ்வாமிக்குப் பைத்ருகதனம் போல் அநுபவத்திலிருந்து வருகிறது. இத்தகைய மூன்று பெருமைகளும் பெற்ற ஜீயர் ஸ்வாமி இவரொருவரே. வேறெங்கும் இருப்பதாகத் தெரியவில்லை.

## இனித் தீர்த்தக்ரமம்

1. பெரிய ஜீயர் ஸ்வாமி
2. சிறிய ஜீயர் ஸ்வாமி
3. ஏகாங்கி ஸ்வாமி
4. தோழப்பாசாரியர்
5. அனந்தாண் பிள்ளை திருவம்சத்தினர்.
6. கந்தாடையார்

7. ப்ரதிவாதிபயங்கரத்தார்

8. வீரவல்லியார்

9. தர்மபுரியார்

10. பரவஸ்து பட்டர்பிரான் ஜீயரைச் சார்ந்தவர்கள்

திருமலை திருப்பதி திருச்சானூரில் இதுவே தீர்த்த க்ரமம்

இதுவரையில் திருமலை திருப்பதி திருச்சானூர்க் கோயில்களில் நடைபெறும் திருநாள்கள் திவ்யப்ரபந்தா நுஸந்தானம் முதலிய விண்ணப்பிக்கப் பெற்றன. இனி அவற்றை நிறம்பெறுவிக்கும் பூர்வாசார்யர்களின் ஸம்பந்தம் விண்ணப்பிக்கப் பெறும்.

## ஆழ்வார்கள்

திருவேங்கடமுடையானுக்குத் ஸ்ரீதொண்டரடிப் பொடியாழ்வார் தவிர மற்ற எல்லா ஆழ்வார்களுடைய மங்களாசாஸனமும் உண்டென்பது ப்ரஸித்தம். அவர்களுக்குள் ப்ரதாநரான நம்மாழ்வார் தவ்யமந்த்ரார்த்தமான உபாய வரணத்தையும் உபேய ப்ரார்த்தனையையும் முறையே *உலகமுண்ட பெருவாயா* *ஒழிவில் காலம்* என்ற இரண்டு பதிகங்கள் வாயிலாக இப்பெருமான் திறத்திலேயே செய்திருக்கிறார் என்பதும் அனைவரும் அறிந்ததேயாகும். இங்ஙனம் ஆழ்வார்களில் முக்கியமானவரும் ப்ரபந்ந ஜந கூடஸ்தருமான (*ப்ரபத்தி நிஷ்டர்களான ஆசார்யர்களுக்கு மூல புருஷருமான) நம்மாழ்வாருடைய ஸம்பந்தமே அவர் பரம்பரையில் வந்த பூர்வாசாரியர்கள் இத்தலத்தின்கண் மிக்க பற்றுடையவர்களாக இருந்தமைக்குக் காரணமாகும்.

## ஆளவந்தார்

திருமலையில் திருவேங்கடமுடையானுக்கு முன்பு இடது பக்கத்தில் ஆளவந்தார் சிறுகுடிலொன்றை அமைத்துக்கொண்டு

அதில் புஷ்பங்களை மாலையாகத் தொடுத்துப் பெருமாளுக்கு ஸமர்ப்பித்து வந்தார் என்று ஸ்ரீவேங்கடாசலேதிஹாஸ மாலை தெரிவிக்கின்றது.

## திருமலைநம்பி

எம்பெருமானருக்கு மாதுலரான பெரிய திருமலை நம்பி ஸ்வாசார்யரான ஆளவந்தார் ஸந்நிதியில் திருவாய்மொழி கேட்கும்போது ஒழிவில் காலம் பதிகம் வந்தவாறே 'சுமந்து மாமலர் நீர்சுடர் தூபங் கொண்டு' என்ற பகுதியை விவரித்துக் கொண்டிருக்கிற ஆளவந்தாருடைய கட்டளையின் படி திருமலைக் கெழுந்தருளிப் பாபவிநாச தீர்த்தத்திலிருந்து திருமஞ்சனங் கொண்டு வந்து தினந்தோறும் ஸமர்ப்பித்துக் கொண்டிருந்தார். இவருடைய கைங்கர்யசரத்தையை உலகோர் அறியும்படியாகச் செய்யவேணுமென்றெண்ணிய திருவேங்கடமுடையான் ஒருநாள் நடுவழியில் வேடனாய்த் தோன்றி, "தாத்தா தாகம் மிக்கிருக்கிறது. தீர்த்தம் தாரும்" என்று கேட்டான். 'அடவேடா! பெருமாளுக்காகத் தீர்த்தம் எடுத்துச் செல்கிறேன்; இது மனுஷ்யார்ஹமன்று ' என்று மறுத்துக் கூறிவிட்டுப் பெரிய திருமொழியநுஸந்தானத்தில் ஆழ்ந்து மகிழ்ச்சியோடு நம்பி தீர்த்தகுடமெடுத்துச் செல்லா நிற்க, அவரைப் பின் தொடர்ந்த வேடன் அவருக்குத் தெரியாதபடி மிக லாகவமாக வில்லில் அம்பு தொடுத்து எய்து குடத்தின் வயிற்றில் துளைத்து அதிலிருந்து மிகச் சிறிய தாரையாக வரும் நீரை எல்லாம் குடித்துக் கொண்டே செல்கிறான். பெரிய திருமொழியினால் பகவத் குணங்களை ஆழ்ந்து அநுபவிக்கும் நம்பி வேடன் செய்ததைச் சிறிதுமறியாதிருந்தவர் சிறிது தூரம் சென்ற பிறகு நீர் பெருகிப் போவதனால் மெல்ல மெல்ல லேசாய்ப் போன குடத்தைப் பார்த்து 'இது என்?' என்று திருமுகத்தைத் திருப்பி, நீர்த் தாரையைக் குடித்துக்

கொண்டிருக்கும் வேடனைக் கண்டு 'அட வேடா! அதிருஷ்டம் அற்றவனே! பெருமாள் தீர்த்தத்தில் துரோகம் செய்தாயே' என்று அவனை நிந்தித்தார். 'தாத்தா! கவலைப்படாதீர்கள், ஸமீபத்தில் உமக்கு தீர்த்தம் காட்டுகிறேன், அதிலிருந்து பெருமாளுக்கு தீர்த்தம் எடுத்துச் செல்லும்' என்று கூறி, அவரையழைத்துச் சென்று ஆகாச கங்கா தீர்த்தத்தில் விட்டு, அங்கு நீர் தென்படாமையால் அம்பினால் ஒரு குண்டுக்கல்லைத் துளைத்து அதிலிருந்து நீர்த்தாரையை உண்டாக்கி 'தாத்தா! இந்த ஆகாச கங்கை பெருமாளுக்கு மிகப் பிரியமானது. இன்று முதல் இதிலிருந்தே எனக்குத் தீர்த்தம் கொண்டு வாரும்' என்று கூறி, தானே திருவேங்கடமுடையான் என்பதைக்காட்டி மறைந்தான் அவ்வேடன். அவ்வியப்பைக் கண்ட திருமலைநம்பி 'ஆச்ரிதரிடத்தில் வேங்கடவனின் விளையாட்டுச் சுவைதான் என்னே!' என்று நினைத்து ஆச்சரியமடைந்தவராய் அக்குடத்தைச் சரிப்படுத்தித் தீர்த்தம் நிரப்பி வந்து பெருமாள் திருமுன்பே வைத்தார். திருவேங்கடமுடையான் அர்ச்சகரை ஆவேசித்து, 'வாரீர்! ஸ்ரீசைல பூர்ணரே! நீர் கொண்டு வந்த சுசியும் ருசியுமுள்ள தீர்த்தத்தாலே நடுவழியில் என் தாகம் தீர்ந்தது' என்று கூறி அவரை மகிழ்வித்து, அவருடைய திருமஞ்சன கைங்கர்யம் தானுகந்ததென்பதை உலகிற்குக் காட்டியருளினான். இதைக் கண்ட நம்பி தம்மைப் பரமபாக்ய சாலியாக எண்ணி அதுமுதல் அக்கைங்கர்யத்தில் அளவற்ற ஆசையுடையவராய் ஆகாச கங்கையிலிருந்தே தினந்தோறும் திருமஞ்சனம் கொண்டு வந்து ஸமர்ப்பித்துப் பெருமாளை மகிழ்வித்துக் கொண்டெழுந்தருளியிருந்தார். (தாத்தா என்று இவரைப் பெருமாள் அழைத்தபடியால் இவருடைய ஸந்ததியார் தாதாசார்ய வம்சத்தவர் எனப்பட்டார்கள்) இவ்வாசார்யர் பெருமானே தர்சநஸ்தாபகரான எம்பெருமானாருக்குத் திருமலையிலிருந்து தினந்தோறும் இறங்கி வந்து அடிவாரத்தில்

ஸ்ரீராமாயண ரஹஸ்யார்த்தங்களை ஒரு வருஷகாலம் உபதேசித்தவர்.

## ஆழ்வார் திருவரங்கப் பெருமாளரையர்

எம்பெருமானார்க்குத் திவ்யப்ரபந்தம் ஸ்தோத்ரம் பெரியோர்கள் அருளிச் செய்த நல்வார்த்தைகள் இவற்றை உபதேசித்தவராய் ஆளவந்தாருடைய சிஷ்யரான ஆழ்வார் திருவரங்கப் பெருமாளரையர் ஒருகால் ஸ்ரீரங்கத்தில் திருக்கார்த்திகை மஹோத்ஸவத்தில் பெரிய பெருமாளைத் திருவடி தொழுது எம்பெருமானாருடைய அநுமதி பெற்றுத் திருவேங்கட மலைக்கு எழுந்தருளித் திருமலைநம்பி அனந்தாழ்வான் ஆகியோர்களால் எதிர் கொண்டழைக்கப் பெற்று அவர்கள் புருஷகாரமாகச் சென்று திருவேங்கடமுடையானைத் திருவடி தொழுதார். திருமலையப்பன் அவருக்குத் தீர்த்த ப்ரஸாதாதி வரிசைகளெல்லாம் ப்ரஸாதித்து 'வாரீர் அரையரே! நீர் நம் உடையவருக்குத் திருவாய்மொழியாசார்யராகையாலே நமக்கு மிகவும் உகந்த விஷயமாயிருக்கிறீர்; ஆகையால் செந்தமிழில் முந்துற முன்னம் நம்மைக் கவி பாடுகையாலே நமக்கு இனிய விஷயமான முதலாழ்வார்கள் கவியிலே ஒரு கவி பாடும்' என்று அருளிச்செய்ய, அரையர் முதல்மூன்று திருவந்தாதிகளில் முதல் பாட்டு முடிவுப் பாட்டுக்களையும் *மனத்துள்ளான் வேங்கடத்தான்* *நெறியார் குழற்கற்றை* என்னும் இரண்டு பாட்டுக்களையும் தேவ கானத்தில் பாடத் திருவேங்கடமுடையான் மிகவுமுகந்து மறுபடியும் தீர்த்தம் ஸ்ரீசடகோபன் முதலான வரிசைகளை எல்லாம் ப்ரஸாதித்தான். இதைக் கண்டு கொண்டிருந்த நம்பியும் அனந்தாழ்வானும் அரையரைப் பார்த்து, 'தேவரீர் நாளை முதலாக அத்யயனோத்ஸவத்தில் ஆழ்வார்களின் திவ்யப்ரபந்தங்களைத் திருவேங்கடமுடையான் திருச்செவி சாத்தியருளும்படி தேவகானத்தில் ஏறிட்டுப்

பாடியருள வேணும்' என்று ப்ரார்த்திக்க, அரையர் இது திருவேங்கடமுடையானுடைய நியமனம் என்று மறுநாள் தொடங்கி எல்லாவற்றையும் பாடிப் பெருமாளை உகப்பித்துத் திருநாள் முடிந்தவாறே பெருமாளிடமும், நம்பி, அனந்தாழ்வான், அர்ச்சகரிடமும் அனுமதி பெற்று ஸ்ரீரங்கத்திற்கு எழுந்தருளி உடையவர் ஸத்கரிக்க, அவரிடம் தேவரீருக்குத் திருவாய்மொழி ஓதுவித்தேனென்று அடியேனைத் திருவேங்கடமுடையான் ஆதரித்த விஷயத்தை அடியேனால் சொல்லி முடியாது என்று கூறி, திருமலைநம்பி, அனந்தாழ்வான் நியமித்ததையும் அதைத் தாம் அநுசரித்ததையும் விவரமாக அருளிச் செய்தார். (திருமலையொழுகு)

இன்னொரு சமயம் இந்த அரையர் திருமலைக்கு எழுந்தருளித் திருவேங்கடமுடையானை மங்களாசாஸனம் செய்தருளும் போது பூர்வவாஸனையாலே *கங்குலும் பகலும்* என்ற பத்துப்பாட்டையும் தேவகானத்திலேறிட்டுப் பாடா நிற்க, பெருமாள் உகந்து, "வாரீர் அரையரே! ஆழ்வார் நம்பக்கல் மோஹித்து நாயிகா தசையை அடைந்து நம்மை அநுபவித்த ப்ரகாரத்தை அநுசரித்துக் காட்டினீர் இது நமக்கு மிகவும் இனியதாயிருந்தது; கலியன் நாயிகாதசாபந்நராய் நம்மை அநுபவித்த சொல்லிலே ஒன்றைச் சொல்லீர்!" என்ன, அரையர் கலியன் மடலூர்ந்து பகவதநுபவம் பண்ணின சிறிய திருமடலைப் பரவசராய் ஈடுபட்டருளிச் செய்யக் கேட்ட திருவேங்கடமுடையான் அரையருக்கு வரிசைகளெல்லாம் ப்ரஸாதித்தருளினான் .(திருமலையொழுகு)

## எம்பெருமானார்

திருமலையிலும் திருப்பதியிலும் ஸ்ரீஸ்வாமி எம்பெருமானார் செய்தருளிய அமாநுஷக்ருத்யங்கள் கணக்கில் அடங்கா. திருமலையொழுகு இதிஹாஸமாலை முதலிய சரித்திர

நூல்களில் அவற்றையெல்லாம் காண்க. முக்கியமென்று கருதிய சில சரித்திரங்கள் மட்டும் இங்கு விண்ணப்பிக்கப்படுகின்றன.

இக்கலியுகாதியில் திருவேங்கடமுடையான் தன் பரமபக்தனாகிய தொண்டைமான் சக்ரவர்த்திக்கு சத்ரு ஸம்ஹாரார்த்தமாகத் திருவாழி திருச்சங்குகளைத் தாம் கொடுத்தருளிய பெருமையை உலகோரக்கு அறிவித்ததற் பொருட்டு திருக்கைகளில் திருவாழி திருச்சங்குகளில்லாமல் ஸேவை ஸாதிப்பதைக் கண்ட காளஹஸ்திச் சைவர் சிலர் யாதவராஜன் திருமலையப்பனுக்கு திருவாராதனம் செய்யும் ஸ்ரீவைகாநஸ அர்ச்சகர்களிடம் ஏதோ ஒரு காரணமாகச் சிறிது கோபமுற்றிருந்த ஒரு சமயத்தைப் பயன்படுத்திக் கொண்டு, திருமலையப்பனைப் பற்றி இவன் கந்தனென்றும், சிவனென்றும் ஹரிஹரமூர்த்தியென்றும் தம் மனம்போனபடியெல்லாம் அரசனிடம் கூறி இத்திவ்யதேசத்தை ஸ்வாதீனப்படுத்திக் கொள்ள முயன்றபோது, திருமலையிலுள்ள ஸ்ரீவைஷ்ணவர் களால் அழைக்கப் பெற்ற எம்பெருமானார் ஸ்ரீரங்கத்திலிருந்து எழுந்தருளி அரசனது சபையில் சைவர்களுடன் வாதம் புரிந்து சுருதி ஸ்ம்ருதி இதிஹாஸ புராண திவ்யப்ரபந்தாதி ப்ரமாணங்களை உபந்யஸித்துத் திருவேங்கடமுடையான் ஸ்ரீமஹாவிஷ்ணுவேயென்று நிலைநாட்டியருளியதோடு அல்லாமல் இனி யாருக்கும் எவ்வித சந்தேகமும் இல்லாதபடி ஸ்வர்ணத்தில் சங்கு சக்ரங்களை நிருமாணம் செய்வித்துப் பெருமாளது அநுமதி பெற்று அவற்றை அவர் திருக்கைகளில் சாத்தினார்.

இதனால் யாதவராஜன் மகிழ்ந்து எம்பெருமானார்க்குச் சிஷ்யனானான். சைவர்களை தேசப்ரஷ்டர்களாக்கினான். இது அவர் செய்தருளிய கார்யங்களில் சிகரமானதாகும். மேலும் கேண்மின்.

திருவேங்கடமுடையான் திருமார்பில் (சிலை உருவத்திலேயே) அகலகில்லேனிற்படியே பிராட்டி எழுந்தருளி இருக்கச் செய்தே, ஸந்நிதியில் திவ்யைச்வர்யம் உண்டாகும்படிக்கு ஸ்வர்ணத்தினால் த்விபுஜையான திருமார்பு நாச்சியாரை ஏறியருளப் பண்ணிப் பெருமாள் திருமார்பில் சாத்துவித்தார். நாஸிகா மூலம் தொடங்கிக் கேசாந்தமாகப் பெருமாளுக்குத் திருமண்காப்பு அணிவித்தார். செங்கனிவாயன் திருவம்சத்தில் பிறந்த பரமபாகவதர்களான ஸ்ரீவைகானஸர்களின் திருக்கைகளாலேயே முன்பு போல் திருவாராதனம் கண்டருளும்படி கட்டளையிட்டார். மார்கழி மாதத்தில் க்ருஷ்ணனே சயனபேரமாக இருக்கும்படி நியமித்தார். பெருமாளுடைய திவ்ய விமானத்தில் ஸ்ரீவைகானஸ சாஸ்த்ரத்திற் கூறியபடியே நான்கு பக்கங்களிலும் வராஹ நரஸிம்ஹ வைகுண்டநாத ஸ்ரீவேங்கடேசர்களை ஏறியருளப் பண்ணுவித்தார். திவ்யநகராபி விருத்திக்காகவும் ஸந்நிதியில் திவ்யைச்வர்யம் உத்ரோத்தரம் அபிவிருத்தமாம்படிக்கும், கௌதுக பேரமான மலை குனிய நின்ற பெருமாளை உத்ஸவ மூர்த்தியாகவும் உத்ஸவபேரமான வேங்கடத்துறைவாரைக் கௌதுக பேரமாகவும் மாற்றியமைத்தார். திருவேங்கடமுடையானுக்கு முன்னமே, வராகப் பெருமாள் திருவாராதனமாகி அமுது செய்தருளும்படி நியமித்தார். சிவபெருமானுக்கு ஸேவை ஸாதிப்பதற்காகத் தோன்றியதாக ப்ரஹ்மாண்டாதி புராணங்களில் சொல்லப்பட்ட அழகிய சிங்கர் பக்கத்திலே அவருடைய பக்தனான எங்கள் சிவபெருமானையும் ப்ரதிஷ்டை செய்து கொள்ளுகிறோமென்று ஒருகால் சைவர்கள் சண்டையிட வைஷ்ணவர்கள் அரசன் மூலமாக அதைத் தடுத்து நிறுத்தி, கலகத்துக்குச் காரணமான இந்த அழகிய சிங்கருக்குத் திருவாராதனம் வேண்டாமென்ற நிறுத்திவிட்டதாகக் கேள்விப்பட்ட எம்பெருமானார், இனி கலஹத்திற்கு இடமில்லாதபடி

திருமலை விஷ்ணு ஸ்தலமென்று ஸ்தாபிக்கப்பட்டு விட்டபடியினால் அழகிய சிங்கருக்குத் திருவாராதனலோபம் உண்டானால் ஸ்தலத்துக்கு அநிஷ்டமென்று நினைத்தருளி அவரைத் திருவேங்கடமுடையானுக்கு எதிரே ப்ரதிஷ்டை செய்வித்துத் திருவாராதனமும் நடக்கும்படி நியமித்தார். சோழ அரசனது உபத்ரவத்தினால் திருச்சித்ர கூடத்திலிருந்து உபய நாச்சிமாருடன் எழுந்தருளிய தேவாதிதேவனென்னும் கோவிந்தராஜ உத்ஸவ மூர்த்தியை, ஒரு மூலவரை யேறியருளப் பண்ணி அவருடன் கீழ்த் திருப்பதியில் ப்ரதிஷ்டை செய்வித்தார். திருமலை நம்பியை வழியில் தடுத்து அவர் கொண்டு செல்லும் திருமஞ்சன தீர்த்தத்தை திருவேங்கடமுடையான் அமுது செய்தருளிய ஐதிஹ்யத்தை அது நடைபெற்ற - அத்யயன உத்ஸவம் முடிந்த மறுநாளிலேயே, - திருமலை நம்பி வம்சத்தில் பிறந்த ஸ்ரீவைஷ்ணவர் பாபநாசத்திலிருந்து தீர்த்தம் கொண்டு வரும்போது திருமலையப்பனை எழுந்தருளப் பண்ணி;க் கொண்டு சென்று, அவர் அத்தீர்த்தத்தை பானம் செய்தருளும் பாவனையில் ஒருத்ஸவமாக நடத்தி வைத்தார். அனந்தாழ்வான் தமது தோட்டத்தில் புஷ்பம் களவு போவதைக் கண்டு பிடிக்க வேணுமென்று இரவில் தூங்காமல் தோட்டத்தில் சுற்றிவர, பெருமானும் பிராட்டியுமாக ராஜதம்பதிகள் வேஷத்தில் எழுந்தருளி, ஒருவருக்கும் தெரியாமல் புஷ்பங்களை க்கொய்து செல்ல, ஒருநாள் அவருக்குக் கையும் களவுமாகப் பிடிபட்ட திவ்யதம்பதிகளில் பெருமான் மட்டும் தப்புவித்துக் கொண்டு ஓடி அப்ரதக்ஷிணமாகக் கோவிலுக்குள்ளே புகுந்தாரென்றும், பிராட்டி பிடிபட்டு அனந்தாழ்வானால் செண்பக மரத்தில் கட்டுண்டு 'என்னிடம் தவறேதுமில்லை; என் கணவன்தான் புஷ்பத்தைக் களவு கண்டவன்; தயை செய்து என்னை விட்டு விடுவீரானால் உமக்கு நான் பெண்ணாக ஆவேன்;' என்று கூறிக் கொண்டிருக்க, அப்போது பொழுது விடிந்து அர்ச்சகர்

முதலியோர் திருமார்பில் நாச்சியாரைக் காணாமல் வருந்தி நிற்க, பெருமாள் ஒருவனை ஆவேசித்து நடந்ததைச் சொல்லி பிராட்டியையும் அநந்தாழ்வானையும் அழைத்து வரும்படி கட்டளையிட, பரிஜனங்கள் தோட்டத்திற்கு வந்து விண்ணப்பிக்க, மணத்திற்குரிய பருவத்திலிருக்கும் கந்யையாக ஸேவை ஸாதிக்கிற பிராட்டியைக் கட்டவிழ்த்துப் பொறை வேண்டி, அவள் கூறியபடியே தன் பெண்ணாக அவளை எண்ணி இடுப்பில் எடுத்துக் கொண்டு சென்று திருமார்பில் ஸ்வர்ணமயமான கண்டிகையில் சேர்த்து முன்போல் விளங்கினாள் என்னும் சரிதத்தைக் கேட்ட எம்பெருமானார் ப்ரஹ்மோத்ஸவத்தின் ஏழாந் திருநாள் மாலை நடக்கும் தோட்ட உத்ஸவத்தில் பெருமாளை அப்ரதக்ஷிணமாக எழுந்தருளும்படிக்கும், எட்டாம் திருநாள் காலை நடக்கும் திருத்தேர் உத்ஸவத்தில் அனந்தாழ்வான் தோட்ட வாசலில் மருமகப் பிள்ளையான பெருமாளுக்கு மாமனார் செய்யும் ஸம்பாவனையாக அனந்தாழ்வான் திருப்பரிவட்டம் ஸமர்ப்பிக்கும்படிக்கும் நியமித்து நடத்தியருளினார். (அப்ரதக்ஷிணோத்ஸவம் இப்போது ஏழாம் நாளில் நடவாமல் தீர்த்தவாரி தினத்திற்கு மறுநாளில் நடக்கிறது) இங்ஙனே பல நியமனங்கள் திருமலையொழுகில் காணத்தக்கன., இனி அருளிச் செயல் ஸேவையில் சில திருத்தங்கள் எம்பெருமானாரால் அருளப் பட்டவை உள. அவை மேலே காண்க.

முதலாழ்வார்களின் பாசுரத்தைத் திருவேங்கட முடையான் மிக விரும்பிக் கேட்டாரென்பதை ஆழ்வார் திருவரங்கப் பெருமாளரையர் வாயிலாக அறிந்த எம்பெருமானார் - "செந்தமிழ்பாடுவார் தாம் வணங்கும் தேவர்" என்ற கலியனருளிச் செயல் துணுக்கைக்கு முதலாழ்வார்கள் வணங்கும் திருவேங்கடமுடையான் என்னும் பொருளைப் பெரிய பெருமாளுடைய சிஷ்ய ஸம்ப்ரதாயத்தில் கேட்டிருந்ததற்கு

அரையர் கூறியதை ஸம்வாதமாக நினைத்தருளி, நாதமுனிகளின் திருவம்சயரான ஓர் அரையரை (ஸ்ரீரங்கத்தில் இருந்தவரை) அழைத்து மலைகுனிய நின்றாரரையரென்று. திருநாமம் சாத்தி, திருமலைக்குச் சென்று அத்யயனோத்ஸவத்தில் முதன் முதலாக இயற்பாவை அநுஸந்தித்துப் பின்பு முதலாயிரம் பெரிய திருமொழிகளை அநுஸந்தித்துத் திருவாய்மொழி சாத்திய மறுநாள்- அனந்தாழ்வான் நாள்தோறும் புஷ்ப கைங்கர்யம் செய்து கொண்டும் ஆழ்வார்கள் திவ்ய ஸூக்திகளை ப்ரவசனம் செய்து கொண்டும் மதுரகவிகளைப் போல் சரமபர்வ நிஷ்டராய் எப்போதும் கண்ணிநுண்சிறுத்தாம்பை அநுஸந்தித்துக் கொண்டிருக்கிறவராய் மதுரகவி தாஸரென்று திருநாமம் பெறுகையாலே அவருகந்த கண்ணிநுண்சிறுத்தாம்பை ஸந்நிதியில் பெருமாள் திருமுன்பு தனியாக அநுஸந்திக்கும்படி நியமித்து அவரைத் திருமலைக்கு அனுப்பியருளினார். அரையர் திருமலைக்கு எழுந்தருளி திருமலைநம்பி அனந்தாழ்வான் ஆகியவர்களோடு ஸந்நிதிக்குச் செல்ல, அனந்தாழ்வான் உடையவர் நியமனத்தைப் பெருமாளுக்கு விண்ணப்பிக்கத் திருமலையப்பனும் 'நம்மிராமாநுசன் நியமனத்தைப் பரிபாலனம் பண்ணுகிறோம்' என்று உகப்பாலே அருளிச் செய்து அப்படியே நடத்தும்படி அனந்தாழ்வானுக்குக் கட்டளை பண்ணினான். அதுமுதல் இதுவரையில் அப்படியே நடந்து வருகிறது. ஆழ்வார் திருவரங்கப் பெருமானரையர் *கங்குலும் பகலும்* திருவாய்மொழியையும் சிறிய திருமடலையும் தேவகானத்தில் ஏறிட்டுப் பாடத் திருமலையப்பன் மிகவும் உகந்தானென்பதைக் கேட்ட எம்பெருமானார், பகலில் திருமாலை சாத்தும்போது சிறிய திருமடலையும் மாலையில் நித்யாநுஸந்தானத்தில் *கங்குலும் பகலும்* பதிகத்தையும் அநுஸந்திக்கும்படி நியமித்தார். (சிறிய திருமடல் இப்போது வெள்ளிக்கிழமைகளில் மட்டுமே அநுஸந்தானத்தில் உள்ளது) வெள்ளிக் கிழமைகளில்

மூலவருக்குத் திருமஞ்சனமானவுடன் திருமார்பிலுள்ள பிராட்டியை இறக்கித் திருமஞ்சனம் கண்டருளச் செய்யும் போது, பிராட்டியின் பிரிவைப் பொறுக்க மாட்டாத திருவேங்கடமுடையானுடைய விச்லேஷ வ்யஸனத்தை ஒருவாறு பரிஹரிக்க நினைத்த எம்பெருமானார், பிராட்டியின் அபராவதாரமாய் பூதேவியின் அம்சமான ஆண்டாள் பெருமாளைப் பிரிந்து ஆற்றாமையில் அநுஸந்தித்த நாச்சியார் திருமொழியை, திருவேங்கடமுடையான் கேட்டு தரிக்கட்டும் என்று நினைத்து நாச்சியார் திருமொழியை அப்போது அநுஸந்திக்குமாறு ஆணையிட்டார். காசிராஜாவின் மனைவியினுடைய கனவில் திருவேங்கடமுடையான் தோன்ற அவள் ஸந்தானம் வேண்டும் என்று அபேக்ஷிக்க, உன் நாஸாமணியை(மூக்குத்திருகு அல்லது புல்லாக்கு) எனக்குத் தந்தால் நான் உனக்கு ஸந்தானம் அருளுகிறேன் என்று பெருமாள் அருளிச் செய்ய, என் கணவரின் ஸம்மதி வேணுமே என்று அவள் கூற, அப்படியானால் நான் உனக்கு பிள்ளைப்பேறு அருளுவதற்கும் என் அண்ணரான கோவிந்தராஜன் அநுமதி வேணுமென்று வேங்கடவன் அருளிச் செய்தான் என்ற ஐதிஹ்யத்தைக் கேட்டிருந்ததனாலும் திருவேங்கட முடையானும் கோவிந்தராஜனும் ஸ்ரீவைகாநஸ ஆகமத்தில் ஒரே ஸம்ஹிதையில் கூறியபடியே நித்யாராதன மஹோத்ஸவாதிகள் கண்டருளுகையாலும் எம்பெருமானார் இவ்விருவரையும் ஒரு கோவிலுள்ள பஞ்ச பேரங்கள் போல் ஐக்யமுடையவர்களாக நினைத்தருளி, திருவேங்கடமுடையான் மாலையில் நித்யாநுஸந்தானம் கேட்டருளும்போது கோவிந்த ராஜனுடைய *ஊன்வாட* *வாடமருதிடை* என்ற இரு திருமொழிகளையும் கேட்டருளும்படியாகவும் கோவிந்தராஜன் மாலையில் நித்யாநுஸந்தானம் கேட்டருளும்போது *ஒழிவில் காலம்*, *உலகமுண்ட* என்ற இரண்டு திருவாய்மொழிகளையும்

கேட்டருளும்படியாகவும் நியமனம் செய்தருளினார். த்வஜாரோஹணத்தன்று மாலையில் யாகசாலையில் கலசங்களிலே தேவதாவாஹனம் பண்ணி ஆராதனத்தைச் செய்த பிறகு வேத பாராயணம் தொடங்குவது ப்ரமாண ஸித்தமாகையாலே தத்ஸமமான த்ராவிட வேதத்துக்கும் தொடக்கம் அப்படியே செய்வது உசிதமாகையாலே இரவுப் புறப்பாட்டில் இயல் தொடங்க வேண்டுமென்றும் காலைப் புறப்பாட்டில் வேண்டாம் என்றும் எம்பெருமானார் நியமித்தார். பராங்குசநாயகிக்கும் எம்பெருமானுக்கும் *மின்னிடைமடவார்* பதிகத்தில் உள்ள ப்ரணய கலகத்தை *பின்னைகொல் நிலமாமகள் கொல் திருமகள் கொல் பிறந்திட்டாள்* என்று திருத்தாயார் பராங்குச நாயகியைப் பிராட்டிமாராகவே சங்கிக்கையால் உபயநாச்சிமார்க்கும் பெருமாளுக்கும் நடப்பதாக இரண்டு பக்கங்களிலும் இரண்டு ஸ்ரீவைஷ்ணவர்கள் புராணம் வாசிக்கச் செய்து, ஓருத்ஸவம் (அத்யயனோத்ஸவம் இராப்பத்து ஆறாம்நாள் மாலையில்) நடத்தி வைத்தார்.

## திருமலையனந்தாழ்வான்

மேல்நாட்டில் சிறுப்புத்தூரில் அவதரித்த அனந்தாழ்வான், ஆழ்வான் ஆண்டான் அருளாளப் பெருமாளெம்பெருமானார் முதலிய சிஷ்யரால் ஆச்ரயிக்கப் பெற்ற எம்பெருமானார்திருவடிகளில் ஆச்ரயிப்பதற்காகக் கோயிலுக்கு வர, அவரை எம்பெருமானார் அருளாளப் பெருமாளெம்பெருமானார் திருவடிகளிலே ஆச்ரயிப்பித் தருளினார். ஆரம்பமே பிடித்து ஆசார்ய பாரதந்த்ர்யத்தை விரும்பிய அனந்தாழ்வான் மிகவும் உகந்திருக்க, அருளாளப் பெருமாளெம்பெருமானார் அனந்தாழ்வானிடம் 'குருவியின் கழுத்திலே பனங்காயைக் கட்டினாற்போல் உடையவர்

செய்தார். நீர் எம்பெருமானார் திருவடிகளே தஞ்சமென்றிரு
என்றருளிச் செய்தார். பின்பு உடையவரிடம் திருவாய்மொழிக்
அர்த்தம் கேட்டுக் கொண்டிருக்கும் போது *ஒழிவில்காலமு
நடவாநிற்க 'சிந்து பூ மகிழும் திருவேங்கடம்' என்ற இட
ப்ரஸ்துதமாக 'புஷ்ப மண்டபமான பெரிய திருமலையில்
திருவேங்கடமுடையானுக்கு உகப்பாகத் திருநந்தவனம் செய்
திருமாலை கட்டிச் சாத்துவார் இக்கோஷ்டியில் ஆரேனு
உண்டோ?' என்று உடையவர் கேட்டருள, அனந்தாழ்வா
எழுந்திருந்து 'அடியேன் விடைகொள்ளுகிறேன்' என்
விண்ணப்பித்து ஆசார்ய பரதந்த்ரராய் உடனே திருமலைக்
எழுந்தருளிப் பெருமாளை ஸேவித்துத் திருநந்தவனம் அமைத்
முன்பு ஆளவந்தார் குடில் கட்டிக் கொண்டெழுந்தருளியிருந்
இடத்தில் யமுனைத் துறைவர் என்ற பெயரையுடைய ஓ
மண்டபத்தையும் உடையவர் உத்தரவின்படி ஏற்படுத்தி
தோட்டத்தில் மலரும் மலர்களை அம் மண்டபத்திற்கு
கொண்டு வந்து மாலையாகக் கட்டித் திருவேங்கட
முடையானுக்கு ஸமர்ப்பித்து வந்தார். உடையவர் திருவாய்
மொழி காலக்ஷேபத்தை முடித்துச் சாத்துமுறை செய்துவிட்டு
பெரியபெருமாளிடம் அநுமதி பெற்றுத் திருமலைக்கு
எழுந்தருளித் திருவேங்கட முடையானைத் திருவடி தொழு
தோட்டத்திற்கு எழுந்தருளிக் கடாக்ஷித்து 'வளர்த்தனால் பய
பெற்றேன்' என்று கூறி அனந்தாழ்வானை அணைத்து
கொண்டார். அனந்தாழ்வான் திருமலையில் ஏரி வெட்டும்போது
கர்ப்பவதியான தம் தேவிகளைக் கொண்டு மண் சுமத்தா நிற்க
இதைக் கண்ட திருவேங்கடமுடையான் ஒரு ப்ரஹ்மசா
உருவில் சென்று அவளிடமிருந்து நிர்ப்பந்தமாக மண் கூடை
வாங்கிக் கொண்டு சென்று மண்ணை வேறோரிடத்தில் சேர்த்
வருவதைக் கண்டு அனந்தாழ்வான் 'நான் செய்யு
கைங்கர்யத்திற்கு தடை செய்யாதே, கூடையைத் தொடாதே

என்றுமிரட்டியும் கேளாது மண்கூடையயை வாங்கிக் கொண்டு செல்லும்ப்ரஹ்மசாரியைத் தூரத்திச் சென்று கடப்பாரையினால் அவரை யடித்தார். மோவாயில் பலமாக அடிபட்ட திருவேங்கடவன் கோயிலுக்குள் புகுந்து கொண்டு, பின்பு அனந்தாழ்வானால் அபசாரக்ஷாமணம் வேண்டப் பெற்றான். அனந்தாழ்வான் அடிபட்ட இடத்தில் புஷ்பதூளிகளை எடுத்து அழுத்தினார். 'பக்தனால் ஏற்படுத்தப்பட்ட இந்த இடத்திற்குத் தினந்தோறும் பச்சை கருப்பூரப் பொடியை அழுத்தி, நான் பக்தன் அடித்தாலும் மகிழ்ச்சியோடு ஏற்றுக் கொள்பவனென்பதை உலகறியச் செய்யுங்கோள்' என்று அர்ச்சகர்களுக்குத் திருமலை அப்பன் ஆணையிட்டருளினான். அடித்த கடப்பாரை பெருமாள் உத்தரவின்படி பெரியகோபுர வாசலுக்குள் வடக்குப் பக்கத்தில் தொங்கவிடப்பட்டிருக்கிறது. இன்றும் காணலாம். அநந்தாழ்வான் தோட்டத்தில் புஷ்பம் பறியாநிற்கத் திருக்கையில் அரவம் தீண்டப் பின்பு போய் நீராடிப் புஷ்பம் பறித்தார். விஷம் தீர்க்க உபாயமேதும் செய்யவில்லை என்பதனை அறிந்த திருவேங்கடமுடையான் விஷந் தீர்க்க வேண்டாவோ என்று கேட்டருள, 'ஸ்வாமீ! கடியுண்ட பாம்பு வலிதாகில் திருக்கோனேரியில் நீராடித் தேவரீருக்குத் தொண்டு செய்கிறேன். கடித்த பாம்பு வலிதாகில் விரஜையில் தீர்த்தமாடி ஸ்ரீவைகுண்டநாதனுக்குக் கைங்கர்யம் செய்கிறேன்' என்று கூறி, உடையவர் திருவருளால் தமக்கேதும் அபாயம் நேராதென்பதனை வெளியிட்டருளினார்.

ஒருநாள் அனந்தாழ்வான் யமுனைத் துறைவர் மண்டபத்தில் திருமாலை கட்டாநிற்க, திருவேங்கடமுடையான் அழைத்தருள, அப்பொழுது செல்லாமல் திருமாலை கட்டி முடித்து எடுத்துக் கொண்டு செல்ல, 'நான் அழைத்தபோது நீர் ஏன் வரவில்லை?' என்று பெருமாள் கேட்க, 'புஷ்பம் மலருவதற்குள்ளே மாலை கட்ட வேணுமென்று உடையவர்

உத்தரவிருக்க, தேவரீரால் எனக்கென்ன காரியம்?' என்ன
பெருமாள் 'நான் உம்மை இங்கிருந்து போகச் சொன்னால் நீ
என் செய்வீர்' என்ன, அநந்தாழ்வான் 'பரன் சென்று(" வந்
சேர் திருவேங்கடம் என்கிறபடியே தேவரீர் வந்தேறிகள். இந்
இடம் தேவரீரை ஆச்ரயித்தவர்களதன்றோ?' என்றுகூற
திருவேங்கடமுடையான் மிகவும் உகந்தருளினான்
எம்பெருமானாருடைய அவதாரஸமாப்தியைக் கேட்ட
அனந்தாழ்வான் திருவேங்கடமுடையானோடு முசித்து ஒ
வருஷகாலம் திருநந்தவன கைங்கர்யத்தையும் உபேக்ஷித்திருக்க
திருவேங்கடமுடையான் அனந்தாழ்வானை அழைப்பித்து
'உமக்கென்ன வேண்டும்? நாமே தலைக்கட்டுகிறோம்' என்
பின்பு 'ஒருகாலத்தில் தேவரீர் விட்டருளிய திருவாழி திரு
சங்குகளைத் தேவரீருக்கு அளித்தும் பாஹ்யகுத்ருஷ்டிகள்
மண்ணுண்ணும்படி தேவரீரே பரதத்வமென்றும் மோக
ப்ரதரென்றும் நிரூபித்து ஸ்ரீபாஷ்யம் செய்தருளியும் உபகரித்
எம்பெருமானார் விஷயமான நூற்றந்தாதியை தேவரீ
அத்யயனோத்ஸவத்தில் முடிவில் திருச்செவி சாத்தியரு
வேணும், ஏற்கெனவே உடையவரால் அடியேனுக்கு அளிக்க
பெற்று அடியேன் திருவாராதனம் செய்து வரு
எம்பெருமானாரின் அர்ச்சாவதாரத் திருமேனியை
தேவரீருடைய திருமுன்பே ஸந்நிதியில் திருப்ரதிஷ்டை
கொண்டருள ஸம்மதிக்க வேணும்' என்று அனந்தாழ்வா
விண்ணப்பிக்கப் பெருமானும் மிகவும் உகந்து ஸம்மதிக்
அவ்விரண்டையும் அனந்தாழ்வான் நிறைவேற்றி வைத்தார்.

இப்படித் திருவேங்கடமுடையானுக்கு அத்யந்தப்ரியரா
ஆசார்ய நிஷ்டராய் எழுந்தருளியிருந்த அனந்தாழ்வானுக்கு
திருப்பதிகோவிந்தராஜன் ஸந்நிதியிலுள்ள மதுரகவி ஸந்நிதியி
அவருக்குப் பக்கத்தில் அர்ச்சைத் திருமேனியைப் பெரியோர்
எழுந்தருளப் பண்ணியிருக்கிறார்கள். மதுரகவி சாத்துமுறை

யன்று கோவிந்தராஜன் மதுரகவிகள் ஸந்நிதிக்கு எழுந்தருளி மதுரகவிகளுடன் மதுரகவி தாஸரான அனந்தாழ்வானுக்கும் ஸகல மரியாதைகளையும் செய்வித்துச் சாத்துமுறை கண்டருளுகிறார். திருமலையில் அனந்தாழ்வான் தோட்டத்தில் அனந்தாழ்வான் உடையவர் திருவடியைச் சார்ந்த பிறகு முளைத்ததோர் மகிழ மரத்தை 'எம்பெருமான் பொன்மலை மேல் ஏதேனும் ஆவேனே' என்கிறபடியே திருவேங்கடமுடையான் அனந்தாழ்வானாகவே மதித்து, தீர்த்தவாரிக்கு அடுத்த தினத்தில் நடைபெறும், தோட்ட உத்ஸவத்திலும் அனந்தாழ்வான் பரமபதித்ததாக கருதப்படும் நாளான திருவாடிப்பூரத்தன்றும் மாலையில் தோட்டத்திற்கு எழுந்தருளி அமுது செய்து விநியோகமானவுடன் அம்மரத்திற்கு புஷ்ப மாலையும் ஸ்ரீசடகோபனும் ஸாதித்துக் கௌரவிக்கிறார்.

## பெரியஜீயர் ஸ்வாமி

திருமலைநம்பி திருநாட்டுக்கு எழுந்தருளிய பிறகு அனந்தாழ்வான் ஒருவரால் ஸந்நிதி நிர்வாஹம் செய்வதன் அருமையை எண்ணிய எம்பெருமானார் அனந்தாழ்வானோடு ஆலோசித்து அனந்தாழ்வானுடைய அந்தேவாஸியாய் இதற்கு முன்பே ஏகாங்கி ஸ்ரீவைஷ்ணவராக ஸந்நிதியின் நிர்வாஹத்திற்குத் தம்மாலேயே ஏற்படுத்தப்பட்டுள்ள ஸ்ரீஸேநாபதி ஜீயருக்கு த்ரிதண்ட காஷாயங்களைத் தந்து பூர்ணஸந்யாஸியாக்கித் திருமலையில் தம்முடைய மடத்தில் ஸ்தாபித்தருளினார். 'வழுவிலா அடிமை செய்யவேண்டும் நாம்' என்று எல்லா அடிமைகளும் செய்யப் பாரித்த ஆழ்வார் வாசிகமாகவன்றிக் காயிகமாக அடிமை செய்யாத குறை தீர்ப்பதற்காக எம்பெருமானார் அந்த ஜீயருக்கு ஸ்ரீசடகோப ஜீயர் என்று திருநாமம் சூட்டி அவரிடம் திருவேங்கடமுடையானுடையவும், ஸ்ரீகோவிந்தராஜனுடையவும்

ஸமஸ்தைச்வர்ய நிர்வாஹப் பொறுப்பையும் ஒப்புவித்தருளினார். இரண்டு கோவில் சாவிகளும் இரவில் பெட்டியில் வைத்து ஸீல் வைத்து இரண்டிடங்களிலும் இருக்கும் பெரிய ஜீயர் மடத்திற்கு அனுப்பப்பட்டு மறுபடி காலையில் ஸந்நிதி திறப்பதற்கு முன்னே பெரிய ஜீயர் ஸ்வாமியை எழுந்தருளப் பண்ணிக் கொண்டு செல்லும் போது எடுத்துச் செல்லப்படுகிறது. இந்த ஜீயருக்குள்ள பெருமைகள் சில முன்னமே விண்ணப்பிக்கப்பட்டுள்ளன.

## மணவாளமாமுனிகள்

ஸ்ரீராமாநுஜ தர்சனப்ரவர்த்தகராய் ஸ்ரீரங்கத்தில் எழுந்தருளியிருந்த மணவாள மாமுனிகள் திருவேங்கடமுடையானைத் திருவடி தொழவேணுமென்று எழுந்தருளியவர் திருப்பதியில் மதாந்தரஸ்தரால் உபத்ரவம் வாராதபடி கோயிலில் ஸ்ரீரங்கநாராயண ஜீயர் போலே நிக்ரஹாநுக்ரஹ ஸமர்த்தரான ஒரு ஜீயரை உண்டாக்க வேணுமென்று நினைத்துத் தம்முடைய சிஷ்யர்களில் (அஷ்டதிக் கஜாசார்யர்களில்) ஒருவராய் ராஜவல்லபராய் பகவத் கைங்கர்ய துரந்தரரான ஒருவருக்குத் திருவேங்கட ஜீயரென்று திருநாமம் சாத்தி அரசனுடைய அநுமதியைப் பெற்று அவரை இளைய கேள்வி ஜீயராக்கித் தனியே திருப்பதியில் மடமும் கட்டிக் கொடுத்து அவரை எம்பெருமானார் பரம்பரையில் வந்த பெரிய ஜீயருக்குத் துணையாக இருந்து எல்லா நிர்வாஹத்தையும் செய்து கொண்டிருக்கும்படி நியமித்தருளினார். பெரிய ஜீயர்க்கதீனர்களான ஏகாங்கிகள் நால்வரில் யோக்யதையுள்ளவர்கள் சிறிய ஜீயராக எழுந்தருளக் கடவர்கள் என்றும் கட்டளையிட்டருளினார். பெரிய ஜீயர் மடத்தை ஏற்படுத்திய எம்பெருமானாரே அம்மடத்தில் முதல் ஜீயராவார். அவரால் ஏற்படுத்தப்பட்ட சடகோபஜீயர் இரண்டாமவர்.

மணவாளமாமுனிகளால் ஏற்படுத்தப்பட்ட சிறிய ஜீயர் பன்னிரண்டாவது பெரிய ஜீயராக ஆனார். இப்போது எழுந்தருளியிருக்கும் ஸ்ரீமத்பரமஹம்ஸ இருவேங்கடராமாநுஜ ஜீயர் ஸ்வாமி நாற்பத்திரண்டாவது பெரிய ஜீயராவார். இந்த ஜீயர்கள் அனைவரும் பட்டாபிஷேகம் செய்து கொண்ட தேதியும் மிகமிக விவரமாக மடத்தில் குறித்து வைக்கப் பெற்றிருக்கின்றன. பெரிய ஜீயர்மடத்தில் மணவாள மாமுனிகளும் பதினொன்று பன்னிரண்டாம் ஜீயர்களுக்கு இடையில் பெரிய ஜீயராக இருந்ததாகவும் மடத்தின் குறிப்பில் உள்ளது.

## ப்ரதிவாதி பயங்கரம் அண்ணா

பெருமாள் கோவிலில் அவதரித்து ஹஸ்திகிரி நாதரண்ணா என்னும் திருநாமத்தையுடைய இவர் தர்சன விரோதிகளான வாதிகளை வென்றவர். லௌகிக வைதிகங்களில் மிக்க நிபுணர். ஸிம்ஹாஸநாதிபதி. இவருக்கு மிக உத்தமியான தேவியும் மூன்று குமாரர்களும் உளர். கைங்கர்யத்துக்கு விரோதி என்று ஐச்வர்யங்களை எல்லாம் பகவத் பாகவத விஷயங்களில் செலவிட்டுப் பரமவிரக்தராய்க் குடும்பத்துடன் திருமலைக்கு எழுந்தருளித் திருவேங்கடமுடையானை ஸேவித்திருக்க, திருமலைத் தோழப்பர் உகந்து வெள்ளிக் குடத்தைத் தந்து 'ஆகாச கங்கையிலிருந்து திருமஞ்சனம் கொண்டு வந்து ஏலாதி வாஸநாத்ரவ்யங்கள் சேர்த்துப் பெருமாளுக்கு நீரே ஸமர்ப்பித்து வாரும்' என்று அண்ணாவுக்கு நியமிக்க அப்படியே அவர் திருமஞ்சன கைங்கர்யத்தை வெகுநாட்கள் நடத்தி வந்தார். இப்படி இருக்கையில் கோயிலிலிருந்து ஒரு ஸ்ரீவைஷ்ணவர் திருமலையப்பனை ஸேவிக்க வந்துநிற்க, அவருக்கு ஸேவையைப் பண்ணுவித்து மறுநாள் காலை அவர் மணவாளமாமுனிகளின் பெருமைகளை அருளிச் செய்யக் கேட்டுக் கொண்டே ஆகாச

கங்கைக்குச் சென்று திருமஞ்சனம் கொண்டு, பரிமள சேர்க்காமலேயே ஞாபகமில்லாமல் குடத்தைத் திருவாராதனத்துக்கு உபயோகிக்கும்படி கொடுத்த அண்ணா பரிமளம் சேர்க்காததை நினைத்து அபசாரமாயிற்றே என்றார். அர்ச்சகர் அண்ணாவைப் பார்த்து 'இத்தனை நாளை விடப் பரிமளம் விஞ்சித் திருமஞ்சன வாஸனை அதிகமாயிருக்கிறதே! என்ன காரணம்?' என்று கேட்க, அண்ணா மணவாளமாமுனிகளின் வைபவத்தைக் கேட்டுக் கொண்டே திருமஞ்சனம் கொண்டுவந்ததனால் தான் இப்படி வாசனை அதிகமாயிருக்கிறது என்றெண்ணி, அந்த ஸ்ரீவைஷ்ணவரை ஸத்கரித்து அனுப்பினார். பிறகு சில நாட்கள் கழித்துத் திருமலை அப்பனிடம் அனுமதி பெற்று ஸ்ரீரங்கம் சென்று மணவாளமாமுனிகளை ஆச்ரயித்தார். திருவேங்கடமுடையானுக்கு இவர் செய்த திருமஞ்சன கைங்கர்யம் இவருக்குப் பெறாப்பேறான மணவாள மாமுனிகளின் ஸம்பந்தத்தைப் பெறுவித்தது. இவர் செய்தருளிய ஸுப்ரபாதம் முதலிய நான்கு துதிகளே இன்றும் திருமலையில் திருக்காப்பு நீக்கும்போது அநுஸந்திக்கப்பட்டு வருகின்றன.

## இத்தலத்திய விசேஷாநுஷ்டானங்கள்

1. அனத்யயன காலமல்லாத மற்ற காலங்களிலும் திருவாய்மொழி அல்லது கோயில் திருவாய்மொழி சேவிக்கும் போது உபதேசரத்தினமாலையை நியமேந ஸேவித்தல்.

2. திருவாய்மொழிக்குப் பூர்வோத்தரங்களில் கண்ணிநுண் சிறுத்தாம்பு ஸேவியாமல், தனியாகத் திருவாய்மொழி சாத்துமுறைக்கு மறுநாளில் ஸேவிப்பது.

3. திருவெழுகூற்றிருக்கையையும் திருநெடுந் தாண்டகத்தில் எல்லா பாசுரங்களையும் இரட்டித்து ஸேவிப்பது.

4. மற்ற ஆழ்வாராசாரியர்களுக்குப் போல் சேனை முதலியார் தாயார் ஆண்டாள் இம்மூவர்க்கும் கோவிந்த ராஜனுடையபரிவட்டம்கட்டி ஸ்ரீசடகோபன் ஸாதித்து வஸ்த்ர மாலைகளை பஹுமானமாக ஸாதிப்பது (சேனைமுதலியாரும் தாயாரும் ஆசார்ய கோஷ்டியிலும், ஆண்டாள் ஆழ்வார் கோஷ்டியிலும் சேர்ந்திருத்தல் இதற்குக் காரணமென்று பெரியோர் கூறுவர்)

5. கோவிந்தராஜன் கனுபார்வேட்டை சித்ரா பௌர்ணமியில் திருவூறல் உத்ஸவம், திருமலை நம்பியின் ஜதிஹ்யோத்ஸவமான தண்ணீரமுது உத்ஸவம் இந் நாட்களில் வெகுதூரம் எழுந்தருளும்போது ஆண்டாளும் கூடவே எழுந்தருள்வது.

6. நாச்சியார் திருக்கோலத்தின்று பெருமாள் எழுந்தருளும்போது பெண்ணைத் தனியே விடாமல் புருஷோத்தமனான கண்ணனையும் உடனே எழுந்தருளப் பண்ணுவது.

7. திருவேங்கடமுடையான் திருத்துழாயைப் பஞ்சமி தீர்த்தத்தின் போது திருச்சானூரில் தாயார் மூலமாகவன்றி நேராக யாருக்கும் விநியோகியாமலிருப்பது.

8. சாத்துமுறைக் காலங்களில் பெரிய ஜீயர் திருத்துழாய் கொடுக்க அதை வாங்கி அர்ச்சகர்கள் சாத்துமுறை முடியும் வரை பெருமாள் திருவடிகளிலே சேர்த்துக் கொண்டிருப்பது.

9. மூலவரிடத்தில் தவிர உத்ஸவர் எங்கு எழுந்தருளித் திருமஞ்சனமோ சாத்துமுறையோ கண்டருளினாலும் கோஷ்டிக்கு தீர்த்தமில்லாமல் ஸ்ரீசடகோபன் மட்டும் ஸாதிப்பது.

10. தோட்டத்தில் அனந்தாழ்வானிடம் அஞ்சியோடிய திருவேங்கடமுடையான் அப்ரதக்ஷிணமாகக் கோயிலுக்குள் வந்து புகுந்த ஐதிஹ்யத்தைக் காட்டுவதற்காக பாக்ஸவாரி என்னும் தோட்ட உத்ஸவத்தில் கோவிலிருந்து அப்ரதக்ஷிணமாகவே எழுந்தருள்வது.

11. நம்மாழ்வார்க்கும் பெருமாளுக்கும் நடந்த 'மின்னிடை மடவார்' ப்ரணயகலஹத்தை உபயநாச்சிமார்க்கும் பெருமாளுக்கும் நடப்பதாக உத்ஸவம் செய்விப்பது.

12. அதியுஷ்ணமான பச்சைக் கர்ப்பூரப் பொடியை 50 தோலா 100 தோலா என்ற கணக்கில் திருவேங்கடமுடையான் மூலவருக்கு திருமண்காப்பாக அணிவிப்பது.

இங்ஙனே பல உள.

[5]

# திருவேங்கடமுடையானும் எம்பெருமானாரும்

ஸ்ரீஸ்வாமி எம்பெருமானார் எழுந்தருளியிருந்த நல்லடிக் காலத்திலே, சில காளஹஸ்திச் சைவர்கள் திருவேங்கட நாட்டை அக்காலத்தில் ஆண்டு கொண்டிருந்த யாதவ மன்னனிடம் வந்து திருமலை சைவ க்ஷேத்ரமென்றும் திருவேங்கடமுடையான் விஷ்ணுவல்லன் என்றும் சில குயுக்திகளைச் சொல்லி வாதித்துத் திருமலையைத் தங்கள் ஸ்வாதீனமாக்கித் தரவேண்டும் என்று நிர்பந்தித்தனர். அப்போது திருமலையில் எழுந்தருளியிருந்த சில ஸாது ஸ்ரீவைஷ்ணவர்கள் சைவர்களை வெல்லுவதற்காக ஸ்ரீரங்கத்திலிருந்து எம்பெருமானாரை எழுந்தருளச் செய்தனர். பின்பு அவர் எழுந்தருளி யாதவராஜனது ஸபையில் சைவர்களை வாதம் செய்து வென்று திருமலையைத் திருமாலின் தலமாகவும் திருமலையப்பனைத் திருமாலாகவும் ஸ்தாபித்தனர் என்று குருபரம்பராப்ரபாவம் முதலிய நூல்களால் தெரிந்து கொள்ளலாகிறது. இவ்விஷயங்களை விளக்கமாகத் தெரிந்து கொள்வதற்கு அனந்தாழ்வான் அருளிய 'ஸ்ரீவேங்கடாசல இதிஹாஸமாலை' என்னும் வடமொழி நூல் மிகவும் உதவி செய்கிறது. அதை மூலமாகக் கொண்டு 'திருவேங்கடமுடையானும் எம்பெருமானாரும்' என்ற தலைப்பில் பல நூற்றுக் கணக்கான பக்கங்கள் எழுதலாம். இப்போது எம்பெருமானார், திருமலையை விஷ்ணுக்ஷேத்ரமென்று ஸ்தாபிப்பதற்காகக் கையாண்ட ச்ருதி ஸ்ம்ருதி இதிஹாஸ புராண பாஞ்சராத்ர சிஷ்டாசார ரூபங்களான எண்ணற்ற ப்ரமாணங்களில் ஒரே ஒரு ருக் வேத(ச்ருதி) வாக்யத்தை ப்ரமாணமாக எடுத்து உபன்யஸித்து ஸ்தாபித்ததை மட்டும் அவ்விதிஹாஸமாலையில் காட்டப்பட்டுள்ளது. வேதமென்பது எம்பெருமானைப் போலவே ஆதியுமந்தமுமற்றது. புருஷனால் செய்யப்படும் நூல்கள் அப்புருஷனுக்கு ஐயம் திரிபுணர்ச்சி

முதலிய குற்றங்கள் உள்ளமை ஸஹஜமாகையால் ப்ரமாணங்களாக(நம்பத்தக்க அத்தாட்சியாக) ஆகாமற் போகலாம். அத்தகைய குற்றங்களுக்கு ஸம்பாவனையுள்ள ஒரு மனிதனால் நிர்மிக்கப் படாமல் அபௌருஷேயமாய் நித்யமாய் உள்ள வேதம் ப்ரமாணங்களில் மிகச்சிறந்ததென்பர் பெரியோர். அவ்வேதந்தன்னிலும் எப்படிப் பொருள் கொள்வது என்று ஸந்தேஹம் ஏற்பட்டால் ஸ்ம்ருதி இதிஹாஸபுராணங்களைக் கொண்டு வேதத்தின் பொருளை ஐயமற அறுதியிடவேணு மென்றும் அவர்களே கூறுவர். "வேதார்த்தம் அறுதியிடுவது ஸ்ம்ருதீதிஹாஸபுராணங்களாலே" என்று ஸ்ரீவசனபூஷண திவ்ய சாஸ்த்ரத்தின்கண் முதன் முதலில் பிள்ளைலோகாசார்யர் அருளிச்செய்திருப்பது காணலாம். ஆகவே ஒரு ச்ருதிவாக்யமும் அதற்கு விவரணமான ஒரு புராண ச்லோகமும் கொண்டு திருமலை விஷ்ணு க்ஷேத்திரமென்று உடையவர் நிச்சயம் செய்தருளியதை இனிக் காணலாம்.

ருக்வேதம் எட்டாம் அஷ்டகம் எட்டாம் அத்யாயம் பதின்மூன்றாவது ஸர்க்கத்தில் "அராயி காணே விகடே கிரிம் கச்ச ஸதாந்வே! சிரிம்பிடஸ்ய ஸத்த்வபி: தேபிஷ்ட்வா சாதயாமஸி!" என்பது முதல்மந்த்ரமாகும். இது திருவேங்கட மலையின் விஷ்ணுக்ஷேத்ரத்வத்தை நிலை நாட்ட வல்ல ப்ரபல ப்ரமாணமாகும். இதில் ஸந்தேஹம் ஏற்பட்டால், பவிஷ்யோத்தர புராணம் வேங்கடாசல மாஹாத்மியப் பகுதி நான்காவது அத்யாயத்திலுள்ள

அராயி காணே விகடே கிரிம் கச்சேதி தம் விது:
ஏவம் வேதமயஸ் ஸாக்ஷாத் கிரீந்த்ர பந்நகாசல:

என்கிற உபப்ரும்ஹண(விவரண) ச்லோகத்தைக் கொண்டு அதைத் தீர்த்துக் கொள்ளலாமென்கிறார் எம்பெருமானார்.

முதலில் புராணச்லோகத்தின் பொருளைக் காண்போம். இப்புராணத்திலுள்ள வேங்கடாசல மாஹாத்ம்யப் பகுதி திருமலை விஷ்ணுக்ஷேத்திரமென்பதை மிகமிக ஸ்பஷ்டமாகக்

கூறுகிறதென்பது முக்கியமாக இங்கு கவனிக்கத்தக்கது. அதிலுள்ள இந்த ச்லோகம் ருக்வேதத்திலுள்ளதாக முற்காட்டிய மந்திரத்தை 'அராயி காணே விகடே கிரிம் கச்ச' என்று முதலெழுத்துக் காட்டி இந்த மந்த்ரம் திருவேங்கடத்தைப் பற்றியதென்று கூறுகிறது. 'அராயி காணே விகடே கிரிம் கச்ச' என்று தொடங்கும் மந்திரத்தால் திருவேங்கடமலையைப் பெரியோர்கள் கருதுகின்றனர். (இம் மந்த்ரம் திருவேங்கட மலையைக் குறிக்கிறதென்று பெரியோர் கருதுகின்றனர் என்றபடி) ஆதிசேஷ பர்வதமாகிய இவ்வுத்தமமான மலை வேதத்தினால அறியப்படுவதனால் வேதமயமாகிறது என்பது இச்லோகத்தின் பொருள். வேதமயம்" வேதத்தினால் அறியப் படுவது. சாந்தோக்யோபநிஷத்தில்'மநோ மய:'(3-14) என்பதற்கு மனத்தினால் அறியப்படுவது என்றும் திருவாய்மொழியில் 'வேதமயன்' என்பதற்கு வேதத்தினால் ஓதப்பட்டு அறியப்படுமவன் என்றும் உரையாசிரியர் பெருமக்கள் விளக்கி அருளியுள்ளமை காண்க.

ஆக முற்காட்டிய ருக்வேத மந்த்ரம் எதைக் குறிப்பிடுகிறதென்று ஐயம் தோன்றினால் 'இதிஹாஸ புராணாப்யாம் வேதம் ஸமுபப்ரும்ஹயேத்' (பாரதம் 1-273) இதிஹாஸம் அல்லது புராணம் இவற்றைக் கொண்டு வேதத்தை விவரிக்க வேண்டும் என்றபடியே முற்கூறிய புராண ச்லோகத்தைக் கொண்டு அந்த மந்த்ரம் திருவேங்கடமலையைக் குறிப்பிடுகிறதென்பது நிச்சயிக்கப்படுகிறது.

இனிமேல் மந்திரத்தின் கருத்தை எம்பெருமானார் இனிதே விளக்கியிருப்பதைப் பார்ப்போம்.

வேதபுருஷன் அறம் பொருள் இன்பம் வீடு என்னும் புருஷார்த்தங்களைப் பெற விரும்பும் ஜீவாத்மாவை அழைத்து அவற்றை அடையத் தக்க உபாயத்தை (வழியை) அவர்கட்கு உபதேசிக்கிறான். இம்மந்திரத்தில் இடத்தை யொட்டி 'த்வயி' என்று ஒரு சேர்த்துக் கொள்க.

1. (குழந்தாய் ஜீவனே) த்வயி அராயி ஸதி = நீ இவ்வுலகச் செல்வமும் ஸ்வர்க்காதிகளான மேலுலகங்களிலுள்ள செல்வமும் இல்லாதவனாயிருந்தால், த்வயி காணே ஸதி = நீ வெளிக் கண்ணோ உட்கண்ணான அறிவோ அற்றவனாயிருந்தால், த்வயி விகடே ஸதி = நீ ஆத்யாத்மிகம் (=உடலின் கண் உண்டாகும் ஜ்வரம் முதலிய துன்பம்), ஆதிபௌதிகம் (=மனிதன் விலங்கு முதலியவற்றால் உண்டாகும் துன்பம்), ஆதி தைவிகம் (=இடி மின்னல் வெப்பம் தொடக்கமாகத் தேவர்களால் உண்டாகும் துன்பம்) என்கிற தாபங்களை அடைந்தவனா யிருந்தால், த்வயி ஸதாந்வே ஸதி = நீ முற்கூறிய புருஷார்த்தங்களைப் பெறவொட்டாமல் தடுக்கும் அசுரர் போன்ற பகைவரைப் பெற்றவனாயிருந்தால், சிரிம்பிடஸ்ய = (சரீம் பீடஸ்ய) திருமகளுக்குத் திருமார்பினால் பீடமாகிய ஸ்ரீநிவாஸனுடைய, கிரிம் = மலையைக் குறித்து, சிரிம்பிடஸ்ய ஸத்த்வபி: = ஸ்ரீநிவாஸனுடைய பக்தர்களோடு, கச்ச = (முற்கூறிய ஆபத்துக்கள் அனைத்தையும் போக்கிக் கொள்வதற்காகச்) சென்று சேர், (சேர்ந்து) தேபி: = அவர்கள் மூலமாக, த்வா = நீ, சிரிம்பிடம் சாதயாமனி = ஸ்ரீநிவாஸனை வேண்டிக் கொள்ளத் தகுதி பெற்றிருக்கிறாய். ஆக முன் சொன்ன செல்வமில்லாமை முதலிய துன்பங்கள் சேர்ந்தபோது, ஸ்ரீநிவாசனுடைய திருமலையைக் குறிந்து அவனுடைய பக்தர்களுடன் சென்று அவர்களை முன்னிட்டு அவனிடம் உனக்கு வேண்டிய பலனை யாசிக்கவுரியவனாயிருக்கிறாய் என்று வேதபுருஷனது உபதேசம் காண்க.

2. அல்லது 'தாதுநாம் அநேகார்த்தத்வம்' என்றபடி வினையடிக்குப் பல பொருள்கள் உள்ளமையால், 'சாதயாமனி' என்பதற்கு 'ஸமர்ப்பிக்கத் தகுதி பெற்றிருக்கிறாய்' என்று பொருள் கூறுவதும் ஏற்கும். சிரிம்பிடஸ்ய த்வா தேபி: சாதயாமஸி என்று அந்வயித்து, ஸ்ரீநிவாஸனுக்கு உன்னை அப்பக்தர்கள் வாயிலாக ஸமர்ப்பிக்கத் தகுதி பெற்றிருக்கிறாய் என்று பதப்பொருள் காணத்தக்கது. ஆக முன் சொன்ன

துன்பங்கள் சேர்ந்தபோது ஸ்ரீநிவாஸனுடைய திருமலையைக் குறித்து அவனுடைய பக்தர்களோடு சென்று அவர்களை முன்னிட்டு உன்னை அப்பெருமானுக்கு ஸமர்ப்பிக்கக் கடவாய் என்று வேதபுருஷன் உபதேசிக்கிறானென்று கொள்க. (ஸ்ரீநிவாஸனை வேண்டிக்கொண்டால் அல்லது ஸ்ரீநிவாசனுக்கு உன்னை அர்ப்பணம் செய்தால் துன்பங்கள் நீங்கி அறம் முதலிய நான்கு புருஷார்த்தங்கள் கிட்டுமென்பது உட்கருத்து)

## மந்திரத்திலுள்ள சொற்களைப் பற்றி சில விளக்கங்கள்

அராயி - ரை என்றால் செல்வம், விகடே - கடம் - தாஹம் தாபமென்றபடி. ஸதாந்வே - வேதத்தில தாரவம் என்பது தார்வம் என்று மாறியது போல, தாநவ: என்பது தாந்வ: என்று மாறி உள்ளது. சிரிம்பிடஸ்ய - த்ரயம்பக: என்பது த்ர்யம்பக: என்றும், ஸுவ: என்பது ஸ்வ: என்றும், திரிந்தது போல மஹாலக்ஷ்மியின் பீஜாக்ஷரமான ச்ரீம் என்பது சிரீம் என்று திரிந்தது. பீட: என்பது பிட: என்று மாறிற்று. அல்லது விசேஷமாக (நிலையாக) இருக்கும் இடம் என்ற பொருளைத் தருகின்ற விட: என்பது பிட: என்று மாறியதாகவும் கொள்ளலாம். விப்ராஜமாந: என்பது பிப்ராஜமாந: என்றாயிற்றென்று சொல்வது போல இதைக் கொள்க. ஸத்த்வ: எம்பெருமானை ஆச்ரயித்து ஸத்தை பெற்றவன் என்பது பொருளாதலால் பக்தன் என்பது அப்பதத்தின் தேர்ந்த கருத்தாகும்.

முற்கூறிய முதற்பொருளில் - சிரிம்பிடஸ்ய (=ஸ்ரீநிவாஸனுடைய) என்னும் ஆறாம் வேற்றுமைச் சொல், ஸத்தவபி: (=பக்தர்களுடன்) கிரிம் (=மலையைக் குறித்து) என்னும் இரண்டு சொற்களோடு சேரும்போது உள்ளபடியே சேருகிறது. சாதயாமஸி (=யாசிக்கக்கடவாய்) என்றதனோடு சேரும்போது மட்டும் பொருளுக்குத் தக்கபடி சிரிம்பிடம் (=ஸ்ரீநிவாஸனை) என்று இரண்டாம் வேற்றுமைப் பொருள்பட்டு நிற்கிறது.

இரண்டாம்பொருளிலோ என்றால் சாதயாமஸி ("ஸமர்ப்பிக்கத் தகுதி பெற்றிருக்கிறாய்) என்பதனோடு சிரிம்பிடஸ்ய என்பது சேரும்போது ஸ்ரீநிவாஸனுக்கு என்னும் பொருள்பட்டு ஆறாம் வேற்றுமைச் சொல்லாகவே இருந்து சேருகிறது. ஸத்த்வை: என்பது ஸத்த்வபி: என்றும், தை: என்பது தேபி; என்றும் திரிந்துள்ளது. முதற்பொருளில் இரண்டாம் வேற்றுமைச் சொல்லாகிய த்வா என்பது, நீ என்று, முதல்வேற்றுமைப் பொருளுடையதாய் மாறியது. இதற்கு 'ஸஹஸ்ர சீர்ஷம் தேவம்' என்ற இரண்டாம் வேற்றுமைச் சொற்களிரண்டும் முதல் வேற்றுமைப் பொருள்பட மாறி இருப்பதை உதாஹரணமாகக் கொள்க. இரண்டாம் பொருளில் உன்னை என்று கூற வேண்டியிருப்பதனால் த்வா என்பது உள்ளபடியே இரண்டாம் வேற்றுமைச் சொல்லாகவேயிருந்து சேருகிறது. இவையெல்லாம் ச்சாந்தஸமான (வேதத்திலுள்ள) விகாரங்கள் (மயக்கங்கள்). செய்யுள்களில் விகாரங்கள் இருப்பது இயற்கை தானே.

இம்மந்திரத்திலுள்ள சொற்களின் அமைப்பை நோக்கினால் ஸ்ரீநிவாஸனுடைய மலையையும் ஸ்ரீநிவாஸனையும் அவனுடைய பக்தர்களை முன்னிட்டு அடைய வேண்டியிருக்கும் நிலை இதிலிருந்து ஏற்படுகின்றபடியினால் இத் திருவேங்கட மலை விஷ்ணுஸ்தலமென்பதும் அங்கு எழுந்தருளியுள்ள எம்பெருமான் ஸ்ரீபீடனாகிய (அலர்மேல் மங்கை உறைமார்பனாகிய) விஷ்ணுபகவானென்பதும் உறுதிப்படுகிறது.

இங்ஙனம் எம்பெருமானார் ப்ரமாணங்களில் சரேஷ்டமான வேதமந்திரத்தையும் அதற்கு விவரணரூபமான புராண ச்லோகத்தையும் உதாஹரித்து சைவர்களை வென்று யாதவ மன்னனை நம்பச் செய்து சிஷ்யனாக்கித் திருமலையையும் திருவேங்கடமுடையானையும் காப்பாற்றிய படியினால் தான் இத் திவ்யதேசம் உலகுக்குத் திலகமாய் விளங்குகின்றது.

# [6]

# திருவேங்கடமலை வராஹப் பெருமாளும் எம்பெருமானாரும்

ஸ்ரீவேங்கட வராஹாய ஸ்வாமி புஷ்கரிணீ தடே!
ச்ரவணர்க்ஷே துலாமாஸே ப்ராதுர்ப்பூதாத்மநே நம:!

(திருவேங்கடமலையில் ஸ்வாமி புஷ்கரிணியின் கரையின் கண் ஐப்பசி மாதத் திருவோண நன்னாளில் தோன்றிய திருமேனியையுடைய வராஹப் பெருமானுக்கு வணக்கம்) என்று ப்ரஸித்தி பெற்ற திருமலை வராஹப்பிரானது வரலாறு திருமலை அநந்தாழ்வான் அருளிய ஸ்ரீவேங்கடாசலேதிஹாஸ மாலை என்னும் நூலை அநுஸரித்து எழுதப்படுகிறது.

பாத்மபுராணப் பகுதியில் உள்ள 29 என்னும் எண்குறித்த ஆறாமத்யாயத்தில், 'பொற்குடங்களிலிருந்து தொடர்ந்து இடைவிடாமல் பெருகுகின்ற பகம்பாலினால் அரசன் புற்றினுடைய துவாரத்தின் உட்பகுதியை அபிஷேகம் செய்யத் தொடங்கினான். அங்ஙனம் செய்து கொண்டிருக்கையில் அப்புற்றின் உட்பகுதியிலிருந்து பூஜிக்கத்தக்க வராஹ உருக் கொண்ட பெருமான் தோன்றினார் என்றது முதலாகக் கூறப்பட்ட பெருமையையுடையவரும், இங்ஙனமே பெரும்பாலும் வேங்கடாசல மஹாத்ம்யத்தைக் கூறுகின்ற புராணப் பகுதிகள் அனைத்திலும் கூறப்பட்டு மிகவும்ப்ரஸித்தமான வைபவத்தை உடையவரும் ஸ்ரீஸ்வாமி புஷ்கரிணியின் மேற்கு கரையில் விளங்குபவருமான இவ் வராஹப் பெருமான் ஸ்ரீநிவாச பகவானுக்கு முன்னமே திருவேங்கடமலைக்கு வந்து எழுந்தருளி இருந்தபோதிலும், ஸ்ரீநிவாசப் பெருமானுக்கு இதற்கு முன்பு பிரமன் முதலியோர்களால் பிரபலமாகப் பிரம்மோத்ஸவம் முதலியன நடத்தி வைக்கப்பட்டமை புராணங்களில் அறியப்

படுவதனாலும் இப்போதும் அப்பெருமானுக்கே பிரம்மோத்ஸவாதிகள் செய்விக்கப்பட்டு வருவதனாலும், அவருடைய உத்ஸவங்களை குறைத்தல் தகாது. மேலும் ஸ்ரீவைகானஸாநந்த ஸம்ஹிதையில் "பலிசாதிக்கப்படுகின்ற ஒரு வீதியின் நடுவிலுள்ள இரு தேவதைகளில் ஒரு தேவதையை பலி ஹோமமில்லாமல் அமுக்கியமாகப் பூஜிக்க வேண்டும், உத்ஸவாதிகள் நடத்தக்கூடாது" என்றுள்ள வசனத்தினால், ஒரு தலத்தில் பலிபூஜை நடைபெறும் நான்கு வீதிகளின் நடுவில் எழுந்தருளியுள்ள பெருமான்கள் இருவர்க்கும் சமமான முக்கியத்வம் கொடுத்து பலிபீடார்ச்சனம் நித்ய ஹோமம் பிரம்மோத்ஸவம் முதலியன செய்யக்கூடாதென்றும் இருவரில் ஒருவரை அமுக்கியராக ஆக்கி பலி ஹோமங்களில்லாமல் நித்ய பூஜைமட்டும் செய்யவேண்டுமென்றும் அறியப்படுகிறது. ஆகையால் இவ் வராஹப் பிரானுக்கு பலிபீட பூஜை நித்ய ஹோமம் ப்ரஹ்மோத்ஸவம் இவையின்றி முச்சந்திகளிலும் பூஜைமாத்திரம் செய்யப்பட வேண்டுமென்று பகவத்ராமாநுஜர் நியமித்தருளினார்.

அங்ஙனம் வராஹப் பெருமானுக்குச் செய்யப்படுகின்ற பூஜையும் ஸ்ரீநிவாஸப் பெருமானுக்குப் பூஜைநடப்பதற்கு முன்பே செய்யப்பட வேண்டுமென்றும், யாத்திரை செய்பவர்கள் முன்பே வராஹ தீர்த்தத்தில் நீராடி வராஹ விமானத்தை வணங்க வேண்டுமென்றும் பகவத் ராமாநுஜ முனிவர் வரையறை செய்தருளினார்.

இங்ஙனம் வரையறை செய்ததற்கு அத்தாட்சி புராணங்களிலிருந்து அவ்வெம்பெருமானார் தாமே காட்டியுள்ளார். அவற்றைக் கீழே காணலாம்.

ப்ராஹ்மபுராணம் எட்டாமத்யாயத்தில், 'மிக உயர்ந்த இடமான ஸத்யலோகத்தில் இருக்கும் நான்முகக் கடவுள்

அனைவரும் பார்த்துக் கொண்டிருக்கும்போது இப்படி வராஹ க்ஷேத்ரமென்னும் பெயரால் ப்ரஸித்தி அடைந்திருக்கிறது. இங்கு வருபவர்கள் இதன் கண் நீராடாமல் அசுத்தராய் வராஹப் பெருமானை வணங்குதல் கூடாது. வராஹப் பெருமானைச் சேவிப்பதற்கு முன்பு ஸ்ரீநிவாசப் பெருமானை சேவித்தல் கூடாது. அப்படிச் செய்தால் ஸ்ரீநிவாசப் பெருமான் திருப்தி அடைய மாட்டான்' என்று கூறி இப்படி ஒரு நியதியை ஏற்படுத்தினார். பின்பு அவர் ஸ்ரீநிவாசப் பெருமானை சேவித்துப் பல வழிகளால் துதித்து அவர் திருப்பாதங்களைப் பிடித்துக் கொண்டு 'திருமாலே! உமக்குரிய பூஜைகட்கு முன்பாகவே அதுபோல் ஸ்தாபித்த வராஹப் பெருமானுக்குத் திருமஞ்சனம் சந்தனம் புஷ்பம் தூபம் நைவேத்யம் தாம்பூலம் ஹாரத்தி முதலிய பூஜைகள் நடக்க வேண்டும்' என்று வரம் வேண்டினார். திருவின் மணவாளரான ஸ்ரீநிவாசன் அப்படியே ஆகக்கடவது என்று வரமளித்து அதை அவ்வாறே நடத்தி வைத்தான்' என்றுள்ளமையும்,

அவ்விடத்திலேயே 'வராகவுருவம் தரித்த பெருமான் ஒரு வேடனைக் குறித்து ஸ்ரீநிவாஸனுடைய பக்கத்தில் (ஸ்வாமி புஷ்கரிணியில்) நீராடுவதற்கு முன்பு எனது விமானத்தை வணங்கவேண்டும்' என்றுதானே கூறினார். அது முதலாக அத்தீர்த்தம் முதலில் நீராடத் தக்கதாக ஆயிற்று' என்றுள்ளமையும்,

பவிஷ்யோத்தர புராணம் 5ம் அத்யாயத்தில் ஸ்ரீநிவாஸனுக்கும் ஸ்ரீவராஹப் பெருமானுக்கும் நடைபெற்ற ஸம்பாஷணையில் ஸ்ரீநிவாசன் வராஹரைப் குறித்து

"பூமிதேவியின் மணவாளா! இம்மலையில் எனது பாக்கியத்தினால் உம்மைக் காணலுற்றேன். இங்கேயே வசிக்க வேண்டும் என்னும் ஆசை எனக்குத் திடமாக உள்ளது. இந்த

யுகம் முடியும் வரையில் எனக்கு வசிக்க இடம் அளிக்க வேண்டுகிறேன்' என்று விண்ணப்பிக்க அதற்கு வராஹர் 'என்னிடமிருந்து விலை கொடுத்து வசிக்கும் இடத்தைப் பெற்றுக்கொள்ளும்' என்று கூற, அது கேட்ட ஸ்ரீநிவாசன் 'உம்மையே எல்லோரும் முன்பு வணங்குவர். பால் திருமஞ்சனமும் நைவேத்யமும் உமக்கே முன்பு நடைபெறும் இப்படி நான் நடத்தி வைப்பதையே உயர்ந்த விலைப் பொருளாக ஸமர்ப்பிக்கிறேன். கருணாநிதியான பூமிதேவி நாதனே! நான் கொடுப்பதை ஏற்றுக் கொள்ளும். அப்படியே ரமாகவா! தயாநிதியே! இதுவே சிறந்த விலைப் பொருளாகும் ஆகையால் என்னிடம் தயை புரிய வேண்டுகிறேன்' என்றும் இனிமையாகப் பேச, அதனைச் செவியுற்ற வராஹ பகவான் திருமகள் நாதனாய் வசிக்க இடம் கேட்கும் ஸ்ரீநிவாசப் பகவானுக்கு நூறடியளவுள்ள ஸ்தலத்தைக் கொடுத்தார் என்றுள்ளமையும் அத்தாட்சியாகக் கொள்ளத் தக்கன.

மேலூர் எம்பெருமானார் வராஹப் பெருமானுக்கு ஒரு உத்ஸவ மூர்த்தியை திருமாணம் செய்வித்து பிரதிஷ்டை கொண்டருளப் பண்ணி அவருக்கு ஒருநாள் அத்யய உத்ஸவமும், வராஹ ஜயந்தியன்றும் திருமலையில் வராஹர் தோன்றிய ஐப்பசித் திருவோணத் தினத்தன்றும் சிறப்பாக உத்ஸவமும் நடத்தி வைத்தருளினார். இன்றும் அப்படியே நடந்து வருகிறது.

இங்ஙனம் திருவேங்கடமுடையானால் கௌரவிக்கப் பெற்ற திருமலை வராகப் பெருமானுடைய வைபவம் வாசாமகோசரம்.

# [7]

# திருவாய்மொழி ஆறாம்பத்தின் ஸாரம்

## பத்துப் பதிகங்களின் பொருட் சுருக்கம்

கீழ் ஐந்தாம்பத்தில் நோற்றநோன்பு தொடங்கி நான்கு பதிகங்களால் ஆழ்வார் எம்பெருமானை நான்கு தடவைகள் சரணம் புகுந்த போதிலும் தம்மிஷ்டம் நிறைவேறாமையால் வருந்தி ஒரு நாயகியின் நிலைமை அடைந்து ஆற்றாமை கரை புரண்டு அதனை அண்மையிலுள்ள திருவண்வண்டூர் எம்பெருமானிடம் விண்ணப்பித்து வரும்படி குருகு நாரை முதலிய பக்ஷிகளைத் தூது விடுகிறார். வைகல்பூங்கழிவாயில் பக்ஷிகளால் அறிவிக்கப்பட்ட எம்பெருமான் சிறிது தாமதித்து வர, பராங்குச நாயகி ப்ரணய ரோஷத்தால் போகுநம்பீ! உன்னுடனே கூடேன் என்று ஊட, அவ்வூடலைத் தீர்த்து க்ருதக்ருத்யனான எம்பெருமானுடன் கூடுகிறாள் மின்னிடை மடவாரில். தம் ஊடலைத் தீர்த்துச் சேரவிட்டுக்கொண்டதைக் கண்டு ஆச்சர்யமடைந்த ஆழ்வார் விருத்த விபூதிகத்வத்தை (ஓரிடத்தில் ஒரு காலத்தில் சேராத வறுமை, செல்வம், ஸ்வர்க்கம் நரகம் முதலிய பலவற்றைத் தன்னோடு சேர்த்து நியமித்து வரும் தன்மையை)க் காட்டக் கண்டு புகழ்ந்து, ஸம்ஸாரிகளுக்கு அவன் திருவடிகளல்லது புகலில்லையென்று உபதேசிக்கிறார் நல்குரவில். பிறந்தவாற்றில் (5-10) 'உன் சிறந்த குணத்தால் உருகுந் தன்மையைப் போக்கி, தரித்து நின்று குணானுபவம் செய்யும்படி அருளவேணும்' என்று செய்த ப்ரபத்திக்குப் பயனாக எம்பெருமான் ஸ்ரீப்ருந்தாவன சரிதங்களை அனுபவிப்பிக்க அனுபவித்து 'என்ன குறை எனக்கு' என்று களித்துப் பேசுகிறார் குரவையாய்ச்சியரில். அவ்வனுபவம் தம்மை மோஹிக்கச் செய்ய, தமக்குப் பிறந்த துக்கத்தையும் தொலைவில்லி மங்கலத்து

எம்பெருமானுக்கே அற்றுத்தீர்ந்த தம் தன்மையையும் தாய்மார்க்குத் தோழி கூறுவதாகப் பேசுகிறார் துவளில்மாமணிமாடத்தில். இப்படிப் பேசிய தோழி தானும் பராங்குசநாயகியைப் போல் மோஹிக்க, தரித்திருக்கிற தாய் தம்பெண்ணின் வளை முதலியவை தாமே விட்டு நீங்குகிற படியைக் கண்டு 'என் பெண் வளையிழந்தாள், மாமைநிறமிழந்தாள்' என்று இழந்த வற்றைத் தனித்தனியே சொல்லிக் கதறுகிறாள் மாலுக்குப் பதிகத்தில். இவ்வாறு புலம்பித் தாயும் மோஹிக்கவே, முன்பு தாய் உச்சரித்த, மால் வையமளந்த மணாளன் முதலிய திருநாமங்களைக் கேட்டு உணர்ந்தெழுந்த பராங்குச நாயகி திருக்கோமளூர்க்குச் செல்ல, பின்புணர்ந்த தாய் படுக்கையில் மகளைக் காணாமல் கலங்கி, திருக்கோளூரெம்பெருமானிடம் மிக்க ஈடுபட்டிருந்த தன்மகள் அவ்வூர்க்கே சென்றிருக்க வேண்டுமென்று அறுதியிடுகிறாள் உண்ணுஞ்சோற்றில். திருக்கோளூர்க்குப் புறப்பட்ட தலைவி போக முடியாமல் தன்னூரருகிலுள்ள தோட்டத்தில் தங்கியிருந்து, மறுபடியும் பக்ஷிகளைத் தூதுவிடுகிறாள் பொன்னுலகில். தூதுவிட்ட பக்ஷிகள் தமது அழுகுரலைக் கேட்டுப் போகமுடியாமல் இரங்கவே 'பகுத்தறிவற்ற பக்ஷிகளும் இரங்கும்படி யிருக்கும் நம்மழுகுரலைக் கேட்டால் பரமசேதநனான பரமபதநாதன் இரங்காமலிரான்' என்று நினைத்துத் தம் கண்டத்வனியாலே ஸ்ரீ வைகுண்டத்திலிருந்து அவனை அழைத்துக்கொள்ளக் கூப்பிடுகிறார் நீராய்நிலனாயில். இங்ஙனம் கூப்பிட்டும் எம்பெருமான் வந்து முகங்காட்டா மையினால் வருந்திய ஆழ்வார் ஆச்ரிதர்க்கு முகங்காட்டு வதற்காகவே ராமக்ருஷ்ணா த்யவதாரங்களைப் பண்ணியதையும், பிற்பட்ட ஸம்ஸாரிகளும் தன்னையிழக்க வேண்டாதபடி நாச்சிமாருடன் திருவைங்கட மலையில் நின்ற ருளின படியையும் எம்பெருமான் காட்டக் கண்டு பிராட்டி புருஷகாரமாகத் திருவேங்கட

முடையான் திருவடிகளில் தமக்கு வேறு புகலில்லாமையை விண்ணப்பித்துச் சரணம்புகுகிறார் உலகமுண்ட பெருவாயனில். எம்பெருமான் ஆழ்வாருக்குக் காட்டித் தந்த கல்யாணகுணம் சரண்யத்வம்.

சரண்யத்வமாவது சரணவரணார்ஹத்வம். பக்தி முதலிய வேறு உபாயமும் வேறு ரக்ஷகரும் இல்லாத அடியவர்களால் தஞ்சமாகப் பற்றுதற்குத் தகுதியுடைமை என்றபடி. இக்குணம் எம்பெருமானிடம் ஐந்தாம்பத்தின் குணமான கருணை யென்னும் குணம் காரணமாக வெளிப்படுவதாகும். "ஏறு சேவகனார்க்கு என்னையும் உளளென்மின்கள்" (6-1-10) (எங்கும் ப்ரஸித்தமான பௌருஷமுடைய இராமபிரானிடம், அவரால் காக்கப்படுமவர் திரளில் நானுமொருத்தி உளேனென்று சொல்லுங்கள்) என்று தம்மைப் பற்றவும், "திருவிண்ணகர்ச் சேர்ந்த பிரான் வரங்கொள் பாதமல்லாலில்லை யாவர்க்கும் வன்சரணே" (6-3-7) என்று அளவற்ற அறிவாற்றல் படைத்தவர்களைப் பற்றவும், "வன்சரண் சுரர்க்காய்" (6-3-8) என்று தேவர்களைப் பற்றவும் எம்பெருமான் புகலாயிருக்கும் தன்மையைச் சொல்லி, "அடிக்கீழமர்ந்து புகுந்து அடியீர் வாழ்மின் என்றென்று அருள் கொடுக்கும் — எம்பெருமான்" (6-10-11) என்று திருவேங்கடமுடையான் தன்னடியாரெல்லாரையும் சரணமடையும்படி தன் திருவடிகளைத் தன் திருக்கையால் காட்டிக்கொண்டே, கல்லில் (திருமலையில்) யாராலும் இல்லை செய்ய முடியாமல் பேராது நின்று, தாம் உபாயமாயிருக்கும் தன்மையைக் கல்வெட்டாகும்படி அருளிச் செய்கின்றமையைக் கூறியிருப்பதனால் இன்னார் இனையாரென்ற வாசி பாராமல் எல்லோராலும் சரணமாகப் பற்றப்படுந் தகுதியுடைமை (அநாலோசித விசேஷாசேஷலோக சரண்யத்வம்) என்னும் எம்பெருமானுடைய கல்யாணகுணம் இப்பத்தின் ப்ரதான குணமாகும் என்பது ஆசார்யஹ்ருதயகாரரின் திருவுள்ளக் கருத்து-

## ஆழ்வார் அவனருளால் பெற்ற பேறு ப்ரேமபலோபாயத்தே புகுதல்

'கழியமிக்கதோர் கழியதோர் காதல்' என்னப்பட்ட மிக மிக உயர்ந்த ப்ரேமத்தால் எம்பெருமானை அநுபவிக்கத் தாமதம் பொறாமல் விரைந்து "அலர்மேல் மங்கை உறைமார்பா உன்னடிக் கீழ்அமர்ந்து புகுந்தேன்" (6-10-10) என்று ஆழ்வார் எம்பெருமானை உபாயமாக வரித்தல் என்பது அவர் அவனருளால் பெற்ற பேறாகும். தன்னிடமுள்ள சரண்யத்வத்தைக் காட்டித் தந்த எம்பெருமானை ஆழ்வார் அவனருளால் சரணம் பற்றினாரென்றபடி.

## ஆழ்வார் ஸம்ஸாரிகளுக்குச் செய்யும் உபதேசம்

'திருவிண்ணகர்ச் சேர்ந்த அப்பன் தந்தனன் தனதாள் நிழலே' (6-4-9) (தன் பாத நிழலை எனக்குத் தந்து எனது ஊடற் கோபமென்னும் அழலைப் போக்கினான்) என்று தம் பேற்றைப் பேசி 'திருவிண்ணகர் மன்னுபிரான் கழல்களன்றி மற்றோர் களைகணிலம் காண்மின்களே' (6-4-10) (திருவிண்ணகரில் நித்யவாஸம் செய்கிற உபகாரகனுடைய திருவடிகளைத் தவிர வேறு தஞ்சமில்லை, இதை நீங்களும் காணுங்கள்) என்று தாம் தஞ்சமாக நினைத்திருக்கும் திருவடிகளையே தஞ்சமாக நினைக்கும்படி ஸம்ஸாரிகளுக்கு உபதேசித்துத் தமது உறுதியைக் காட்டுகிறார்.

## இப்பத்தில் தோழி தாய் மகள் பாசுரங்கள்

தோழி பாசுரம் துவளில் மாமணிமாடப் பதிகம் ஒன்றே. தாய்ப்பாசுரம் - மாலுக்கு, உண்ணுஞ்சோறு என்னும் இரண்டுமாகும். வைகல், மின்னிடை, பொன்னுலகு என்ற இம்மூன்றும் மகள் பாசுரம். மற்ற நல்குரவு, குரவை, நீராய்,

உலகமுண்ட என்ற இவை நான்கும் ஆழ்வார் தாமான தன்மையில் அருளிச் செய்தவை. ப்ரணவார்த்தமான சேஷசேஷி பாவம் (அடியவனும் எஜமானனுமாகுந் தன்மை) என்னும் ஸம்பந்த ஜ்ஞானம், நம: பதார்த்தமான ஸித்தோபாயத்தின் கண் துணிவு, சேஷியாய் சரண்யனான எம்பெருமானுக்குள்ள ஏற்றத்தை நாராயணாய என்ற பதத்தினால் அறிந்தவனுக்கு உண்டாகும் ப்ராப்யத்வரை என்ற இம்மூன்றும் முறையே தோழி, தாயார், மகள் என்ற பெயர்களைப் பெறும் என்று ஆசார்ய ஹ்ருதயம் கூறும்.

இப்பத்தில் மங்களாசாஸனம் பெற்ற திவ்யதேசங்களும் அங்கங்கு எம்பெருமான் ஆவிஷ்கரித்த கல்யாண குணங்களும்:

வைகலில் திருவண்வண்டூர், நல்குரவில் திருவிண்ணகர், ஆவளில் மாமணிமாடத்தில் திருத்தொலைவில்லி மங்கலம், உண்ணுஞ் சோற்றில் திருக்கோளூர், உலகமுண்ட பெருவாயனில் திருவேங்கடம் என்ற இவ்வைந்தும் இப்பத்தில் ஆழ்வாரால் மங்களாசாஸனம் செய்யப்பட்ட திவ்ய தேசங்களாகும். இவற்றில் எம்பெருமான் வெளிப்படுத்திய கல்யாண குணங்களை ஆசார்ய ஹ்ருதயத்தைத் துணையாகக் கொண்டு காண்போம்.

1. திருவண்வண்டூர் : இதில் எம்பெருமான் ஆவிஷ்கரித்த கல்யாண குணம் - ரக்ஷணஸ்தைர்யம். அடியவரைக் காப்பதில் திண்ணியனாயிருக்கை என்றபடி. 'வ்யவஸாயஜ்ஞர் ரக்ஷண ஸ்தைர்யம் பம்போத்தர தேசஸ்தம்' என்பது ஆசார்ய ஹ்ருதய சூர்ணிகை. தோஷபட்டாரைக் காப்பதில் எம்பெருமானுக்குள்ள உறுதிப்பாட்டை அறிந்த ஸீதைப் பிராட்டியைப் போல இருப்பவர்களுடைய ரக்ஷணத்தில் யாராலும் அசைக்கமுடியாத படி இருக்கும் அவனுடைய திண்மை என்னும் குணம் பம்பையின் வடகரையான திருவண்வண்டூரில் நிலைபெற்று நிற்கும் என்பது

அதன் கருத்து. "மாறில் போரரக்கன் மதிள் நீறெழச் செற்றுகந்த ஏறு சேவகனார்க்கு என்னையுமுளளென்மின்கள்" (6-1-10) என்று தேவர், முனிவர், விபீஷணன் முதலியோரிடம் தான் செய்த ப்ரதிஜ்ஞையின்படி இராவணனைக் கொன்று அவர்களை ரக்ஷித்த திண்மையையுடைய இராமபிரானைக் கூறியதனால் இது விளங்குகிறது.

2. திருவிண்ணகர்: குணம் - விருத்தகடநாஸாமர்த்யம். சேராதவற்றைச் சேர்க்கும் ஆற்றலென்றபடி. 'விளம்ப விரோதம் அழிக்கும் விருத்தகடநாஸாமர்த்யம் நன்னகரிலே விஸ்தீர்ணம்' என்பது சூர்ணிகை. ஆழ்வார் தூது விட்டும் தாமதித்து வந்த எம்பெருமானை 'போகுநம்பீ' 'கழகமேறேல் நம்பீ' என்னும்படி பிறந்த விரோதத்தை 'அழித்தாயுன் திருவடியால்' என்னும்படித் திருவடியால் அழித்து, விரோதமுடைய ஆழ்வாரைத் தன்னோடு சேர்த்துக்கொண்ட ஆற்றல், நல்குரவு செல்வு முதலிய விருத்தங்களை விபூதியாகத் (தானிட்ட வழக்காகத்) தன்னோடு சேர்த்துக் கொண்டு நிற்கின்றமையை வெளிப்படுத்திய திருவிண்ணகரம் நன்னகரில் பரந்திருக்கும் என்பது அதன் பொருள்.

3. திருத் தொலைவில்லிமங்கலம்: குணம் - கடிதகடக விகடநாபாந்தவம். தன்னோடு சேர்க்கப்பட்ட தலைவிக்கும் சேர்த்த தாய்மார்க்கும் பிரிவை உண்டு பண்ணுவதான - எம்பெருமானிடமுள்ள தந்தை தாய் முதலிய உறவு முறையென்றபடி. 'கடிதகடக விகடநாபாந்தவம் அவ்வூரிலே த்விகுணம்' என்பது சூர்ணிகை. "ஏழையை .. தொலைவில்லி மங்கலம் கொண்டு புக்கு பிரானிருந்தமை காட்டினீர்" என்றபடி எம்பெருமானைக் காட்டி அவனுடன் தலைவியைச் சேர்த்த தாய்மார்க்கும் சேர்க்கப்பட்ட தலைவிக்கும், 'தொலைவில்லி மங்கலம் தொழுமிவளை உமக்காசையில்லை விடுமினோ' என்று

தோழி கூறியபடி, பிரிவைப் பண்ணுமதான 'தேவ பிரானையே தந்தை தாயென்றடைந்த சடகோபன்' என்கிறபடியே எம்பெருமானுக்குள்ள உறவு முறையானது - 'அவ்வூர்' எனப்பட்ட திருத்தொலைவில்லிமங்கலம் இரட்டைத் திருப்பதி ஆகையால் அங்கு இரட்டித்திருக்குமென்பது அதன் கருத்து.

4. திருக்கோளூர்: குணம் - ஆபத்ஸகத்வம். 'கைம்முதல் இழந்தார் உண்ணும் நிதியின் ஆபத்ஸகத்வம் புகுமூரிலே ஸம்ருத்தம்' என்பது சூர்ணிகை. எம்பெருமானுடன் கலந்து வாழப் பெறாமையால் நைந்து அதனால் உண்மையில் ப்ராபகமும் ப்ராப்யமுமாகாமல் அங்ஙனம் தோற்றுகிற சங்கு முதலியவை தாமே கழிகையாலே கைம்முதலிழந்தவர்கள் உண்ணுஞ் சோறு முதலிய எல்லாம் தானேயாக அனுபவிக்கும் வைத்தமாநிதி எம்பெருமானுடைய ஆபத்ஸகத்வம் - ஆபத்துக்காகச் சேமித்து வைத்த நிதி போன்ற எம்பெருமானுடைய ஆபத்தில் தோழனாயுதவுந்தன்மை - பேறு பெறுவார் புகுமூரான திருக்கோளூரில் ஸம்ருத்தமாயிருக்கும் என்பது அதன் கருத்து.

5. திருவேங்கடம்: குணம் - வாத்ஸல்யம். தோஷத்தை போக்யமாகக் கொள்ளும் தன்மையே அது. 'மண்ணோர் - விண்ணோர் வைப்பில் போகின்ற ஏழுலகுக்குயிர் பாசம் வைத்த நிகரில் வாத்ஸல்யம் உஜ்ஜ்வலம்' என்பது சூர்ணிகை. மண்ணோர்க்கும் விண்ணோர்க்கும் நிதிபோல அடையத் தகுந்த திருவேங்கடமலையில் எல்லார்க்கும் எல்லாவித பந்துவுமாய்க் கொண்டு, எல்லார்க்கும் ஆத்மாவாயிருக்கிற அந்தர்யாமி எம்பெருமானுடைய குணமான - 'என் கண் பாசம் வைத்த' (தோஷம் நிறைந்த என்னிடம் ப்ரீதியை வைத்த) என்று பாசமாகவும், 'நிகரில் புகழாய்' (ஒப்பற்ற புகழையுடையாய்) என்று ஒப்பற்ற புகழாகவும் சொல்லப்பட்ட வாத்ஸல்யம்

திருவேங்கடமுடையானுடைய திருமேனியிலே ப்ரகாசிக்கும் என்பது அதன் கருத்து. இனி ஒவ்வொரு பதிகத்திலுள்ள விசேஷார்த்தங்களில் சிலவற்றை அநுபவிப்போம்.

## 1. வைகல்

பக்ஷிகளைத் தூதுவிடும் இப்பதிகத்தால் ஆழ்வார் கடகஸமாச்ரயணம் பண்ணுகிறார் என்று ஆசார்யர்கள் அருளிச்செய்வர். கடகராவார் - எம்பெருமானோடு நம்மைக் கொண்டு சேர்க்கும் ஆசார்யர் முதலியோர். இவர்களைப் பக்ஷிகளென்பது - ஆகாசத்தில் விரைந்து செல்லுவதற்குத் தக்க பக்ஷங்கள் - சிறகுகள் இரண்டு பறவைகளுக்கு உள்ளது போல், பரமாகாசத்திலுள்ள எம்பெருமானிடம் விரைந்து சென்று சேர்வதற்குக் கருவியான ஞானம் அநுஷ்டானம் என்ற இரண்டும் இவர்களுக்குச் சிறகுகளாக அமைந்தபடியினால் என்பர். அப்படிப்பட்ட ஆசார்யர் முதலியோரை விளித்து, நீங்கள் என் நிலைமையை எம்பெருமானிடம் விண்ணப்பித்து அவனோடு என்னைச் சேர்க்க வேணும் என்று வேண்டுவதே இப்பதிகத்தின் ஆழ்ந்த கருத்தாகும்.

இரண்டாம் பதிகத்தில் எம்பெருமான் ஆழ்வாருடைய ஊடலைத் தீர்க்கப் போவதை, இப்பதிகத்தின் கடைசிப் பாட்டின், 'மின் கொள் சேர் புரிநூல் குறளாய் அகல் ஞாலங் கொண்ட வன்கள்வன்' என்ற பகுதியால் ஆழ்வார் குறித்திருப்பதாக வ்யாக்யாதாக்கள் அருளிச் செய்வர். மஹாபலியின் மமகாரத்தைப் போக்கி எம்பெருமான் எல்லா உலகங்களையும் கைக்கொண்டது போல், சேரோம் என்றிருந்த செருக்கைப் போக்கிப் பராங்குச நாயகியை ஸ்வாதீனப்படுத்திக் கொள்ளப் போகிறானென்பது இங்கு வாமன சரிதத்தால் குறிக்கப்படுகிறது. 'மின்னிடை மடவார்க்குக் கிழக்கு வெளுக்கிற படி' என்ற ஈட்டு ஸ்ரீஸூக்தி மிகவும் ரஸிக்கத் தக்கதாம்.

## 2. மின்னிடை

இப்பதிகத்தின் இறுதிப் பாட்டிலுள்ள "ஆய்ச்சியாகிய அன்னையால் அன்று வெண்ணெய் வார்த்தையுள் சீற்றமுண்டு அழு கூத்தவப்பன்" என்ற க்ருஷ்ண சரித்திரத்தினால் ஓர் சுவையுள்ள பொருள் குறிக்கப்படுகிறது. எம்பெருமான் பராங்குச நாயகியின் ஊடலைத் தீர்க்க வந்த போது 'நீ எங்கள் திரளில் புக வேண்டா' என்று அவள் கூற, அவ்விடம் விட்டு நீங்காமல் எளிவரவுபட்டு அவன் நின்ற நிலையானது - வெண்ணெய் களவு போயிற்று என்கிற வார்த்தை பிறந்த போது 'இவனே களவு செய்தான்' என்று யசோதை வசவு கூற, வசவுண்டு அவ்விடம் விட்டு நீங்காமல் கண்ணும் கண்ணீருமாய் நின்ற நிலை போலிருந்தது என்பதே அச்சுவைப் பொருள்.

## 3.நல்குரவும்

இப்பதிகம் விபூதி யோகத்தைக் காட்டுவதென்று கொண்டால், அதையே கூறும் மாயாவாமனனே (7-8) பதிகத்திற்கும் இதற்கும் என்னவாசியென்றால், ஒரு காலத்தில் ஓரிடத்தில் ஒன்று சேராத (மாறுபட்ட தன்மையைக் கொண்ட) வறுமை செல்வம் முதலியவற்றைத் தனக்கு விபூதியாக (தானிட்ட வழக்காக) உடைமையாகிய விருத்த விபூதியோகம் நல்குரவில் கூறப்படுகிறது. வெவ்வேறுபட்ட தன்மைகளைக் கொண்டு ஒன்றோடொன்று சேர்ந்துள்ள பஞ்சபூதம் முதலியவற்றைத் தனக்கு விபூதியாக உடைமையாகிற விசித்ர விபூதியோகம் மாயாவாமனனேயில் கூறப்படுகிறதென்று வாசி காணத்தக்கது.

## 4. குரவையாச்சியர்

இப்பதிகத்திற்கு மின்னிடை மடவார் பதிகத்தோடு தான் ஸங்கதி - உன்னோடு கூடேன் என்று அகல நினைத்த

ஆழ்வாரைக் கூடுவேனென்னும்படி பண்ணித் தன்னோடு சேர்த்துக் கொண்டபடியை நினைத்து, இங்ஙனம் செய்ய வல்லவன், குரவை முதலாம் கோலச் செய்கைகள் செய்த கண்ணனேயாவன் என்றெண்ணி இப்பதிகத்தை ஆழ்வார் பாடினராகையால், நடுவில் விருத்த விபூதி யோகத்தை அவன் காட்டியதும் இவர் பேசியதுமான நல்குரவுப் பதிகம் ப்ராஸங்கிகம் என்பர் அரும்பதவுரையாசிரியர்.

க்ருஷ்ண சரிதமே கூறும் இப்பதிகத்தின் நடுவில் 'மாணியாய் நிலம் கொண்ட மாயன்' என்று வாமந சரிதம் புகுந்தது - தன்னிஷ்டம் நிறைவேறினால் ஜீவிப்பது, இல்லையேல் முடிவது, இரப்பிலே தழும்பேறின திருமேனி, குறைவற்ற அழகு, இன்னார் இனையார் என்ற வாசி பாராமல் எல்லோரையும் தீண்டுவது' ஆச்ரயித்தவர்களிடம் பக்ஷபாதம், அதிமாநுஷமான சேஷ்டிதங்கள் ஆகியவற்றால் வாமனாவதாரம் க்ருஷ்ணாவதாரத்தோடு ஒத்திருக்கையால் என்பர் வ்யாக்யாதா.

இப்பதிகத்தில் 'நாயகன் முழுவேழுலகுக்குமாய் முழுவேழுலகுந் தன் வாயகம் புகவைத்துமிழ்ந்தவையாய் அவையல்லனுமாம் கேசவன்' என்ற கடைசிப் பாட்டில் 'நாயகன் ... அல்லனுமாம்' என்று ஏழுலகுக்கும் நாயகனாகுந் தன்மை முதலிய ஸர்வேச்வரத்வம் கூறுவதனால் அப்பகுதி விருத்த விபூதி யோகத்தாலே ஸித்தமான நல்குரவில் கூறிய ஸர்வேச்வரத்தின் அநுவாதமென்னும், கேசியைக் கொன்ற க்ருஷ்ணனைக் கூறும் கேசவன் என்னும் சொல் க்ருஷ்ணனைக் கூறும் இக்குரவைப் பதிகத்தின் அநுவாதமென்றும் சிலரது கொள்கை. "க்ருஷ்ண ஏவ ஹி லோகாநாம் உத்பத்தி: அபி ச அப்யய:" என்ற மகாபாரத ச்லோகத்தின்படி உலகத்தின் படைத்தல் காத்தல் அழித்தல் முதலிய காரியங்களெல்லாம் க்ருஷ்ணனுடையவாகச் சொல்லுவதனால் 'நாயகன் ... கேசவன்' என்ற முழுதுமே

க்ருஷ்ண சரிதம் சொல்லும் குரவைப் பதிகத்தின் அநுவாதமே யென்று மற்றும் சிலருடைய கொள்கை.

'உருகாமல் வரித்ததும் நண்ணி வணங்க பலித்தவாறே' என்று இப்பதிகத்தின் ப்ரமேயம் ஆசார்யஹ்ருதயத்தில் குறிக்கப் பட்டிருக்கிறது. பகவத் குணங்களையும் சேஷ்டிதங்களையும் அநுபவிக்கத் தொடங்ினவாறே 'ஊடுருக்கெனதாவியை உருக்கியுண்டிருக்கின்ற' என்றபடியே அவை மனதை உருக்கியதனால் நன்றாக அநுபவிப்பதற்குறுப்பாக 'நாகணைமிசை நம்பிரான் சரணே சரண்' என்றுபிறந்தவாற்றில் (5-10) ஆழ்வார் அவனை உபாயமாக வரித்தது - இப் பதிகத்தில் 'நண்ணி நான் வணங்கப் பெற்றேன் எனக்கார் பிறர் நாயகரே' என்று அவனுடைய க்ருஷ்ணாவதார குணசேஷ்டிதங்களை எப்போதும் முறையாகக் கிட்டி தரித்து நின்று அனுபவித்து கர்விக்கும்படி பலித்ததென்று கருத்து.

சன்மம பலபல(3-10) என்ற பதிகத்தில் 'நானோர் குறைவிலனே' என்றும், 'வீற்றிருந்து எழுலகில்'(4-5) 'இனி என்ன குறை' என்றும் இப்பதிகத்தில் 'என்ன குறையெனக்கே' என்றும் களித்துப் பேசுகின்றமை மூன்று திருவாய்மொழிகளிலும் ஒத்திருக்க இவை தம்முள் வேறுபடுமாறு என்னையெனில், சொன்னால் விரோதம் (3-9) பதிகத்தில் தாம் உபதேசித்தும் திருந்தாமல் சோறு கூறைக்காக மன்னாத மானிடரையே வாழ்த்திக் கெட்டுப் போகும் புன்புலவரைக் காட்டிலும் எம்பெருமானையே பாடுவதாகிய தமக்குள்ள தனித்தன்மையை நினைத்து சன்மம் பலபலவில் களித்தார் என்றும், மண்ணையிருந்து துழாவியில் (4-4) போலி கண்டு மயங்கிய மயக்கம் தீர எம்பெருமான் உபயவிபூதியையும் காட்டிக் கொடுக்கக் கண்டு அநுபவித்து 'போற்றியென்றே கைகளாரத் தொழுது' என்கிற படியே பல்லாண்டு பாடிக் களித்தார்

வீற்றிருந்து ஏழுலகில் என்றும், குரவையாச்சியர் பதிகத்தில் பரபக்தியின் பயனாக க்ருஷ்ணகுண சேஷ்டிதங்களில் ஒன்று விடாமல் அனுபவித்துக் களிக்கிறார் என்றும் வாசி நோக்கத்தக்கது.

## 5.துவளில் மாமணிமாடம்

இப்பதிகம் - ஆழ்வாருக்கு 'பொய்ந்நின்ற ஞானம்' (திருவிருத்தம் 1) தொடங்கி இதுவரையில் உண்டான ப்ராவண்யாதிசயத்தைக் கூறும். ப்ராவண்யாதிசயமாவது - எவ்விதத்தாலும் யாராலும் மீட்க முடியாதபடி ஆழ்வாருடைய கரணத்ரயமும் (மநோவாக்காயங்கள்) எம்பெருமா னிடத்திலேயே ஈடுபட்டிருக்கும் தன்மையேயாகும். 'இத் திருவாய்மொழி ஆழ்வார் ப்ரக்ருதி (ஸ்வபாவம் - தனித்தன்மை) சொல்லுகிறதென்று நம்முதலிகள் (ஆசார்யர்கள்) எல்லோரும் போர(மிக) விரும்பியிருப்பர்கள்' என்றுள்ள ஈடு ஸேவிக்கத் தக்கது. இந்த ப்ராவண்யம் "தொலைவில்லி மங்கலம் தொழுமிவளை உமக்காசையில்லை விடுமினோ", "சிந்தையாலும் சொல்லாலும் செய்கையினாலும் தேவபிரானையே தந்தை தாயென்றடைந்த ....சடகோபன்" என்றுள்ள சந்தைகளினால் அறியலாம்.

## 6.மாலுக்கு

ஏறாளுமிறையோனும் (4-8) என்னும் பதிகத்தால் ஆழ்வார் எம்பெருமான் ஆசைப்படாத தம்முடைமைகளும் தம்முயிரும் தமக்கு வேண்டாவென்று அவற்றைத் தாமே உபேக்ஷிக்கிறார். இம்மாலுக்கில் - அவை வேண்டா என்று தாம் உபேக்ஷிக்கும்படி இராமல் அவை தாமாகவே தம்மை விட்டுப் போனமையை அருளிச் செய்கிறார் என்று இவ்விரண்டு பதிகங்கட்கும் உள்ள வாசி காணலாம்.

'கட்டெழில் சோலை நல்வேங்கடவாணனைக் கட்டெழில் தென்குருகூர்ச் சடகோபன் சொல். கட்டெழிலாயிரத்திப்பத்தும் வல்லவர், கட்டெழில் வானவர் போகமுண்பாரே' என்ற இப்பதிகத்தின் இறுதிப்பாட்டில், 'வேங்கடவாணனை - சடகோபன் சொல் ஆயிரத்து' என்று அந்வயம் கொண்டு ஈட்டில் ஒரு விசேஷம் அருளிச் செய்யப் படுகிறது. ஆழ்வார் திருவேங்கடமுடையானைத் திருவாய் மொழியாலே துதித்தார்: 'திருவேங்கடத்தென்னானை என்னப்பன் எம்பெருமான் உளனாக - என் நாவிலின்கவி யானொருவர்க்கும் கொடுக்கிலேன்' (3-9-1) என்றிருக்கு மவரன்றோ - என்பதே அவ்வர்த்தம்.

## 7. உண்ணுஞ்சோறு

இப்பதிக வ்யாக்யானத்தின் அவதாரிகையில் ஓர் ஐதிஹ்யம் அருளிச் செய்யப்பட்டுள்ளது. திருக்கோளூருக்குத் தனியே சென்ற பராங்குச நாயகியைப் பற்றி அஞ்சவேண்டுமா, அல்லது 'கள்வன் கொல்'(பெரிய திருமொழி 3-7) திருமொழியில் உள்ளபடி நெடுமால் துணையாய்ப் போன பரகால நாயகியைப் பற்றி அஞ்சவேண்டுமா? என்று காலக்ஷேப கோஷ்டியில் ஆளவந்தார் சிஷ்யர்களை வினவ, அவர்கள் - தனியே போனவளுக்கு அஞ்சவேண்டுமே தவிர ஒருவரைத் துணையாக் கொண்டு போனவளுக்கு ஏன் அஞ்ச வேண்டும் என்று விடையளிக்க, அதன் மேல் ஆளவந்தார் 'அகலகில்லேன்' என்றும் 'பித்தர் பனிமலர் மேல் பாவைக்கு' என்றும் சொல்லுகிறபடியே பித்தர்களான பிராட்டியும் பெருமானுமாகிய இருவரும் ஒருவருக்கொருவர் ஆசைப்பட்டு மோஹித்துத் தம்மைக் கடித்ததையும் தம் மேலூர்ந்ததையும் அறியார்கள்.. ஆகையால் அங்கு இருவரைப்பற்றியும் அஞ்சவேண்டும். அங்குத் திருத்தாயார் 'அணியாவிபுகுவர் கொலோ' என்றதனை

ஒருதடவைக்கு ஒன்பது தடவைகளாகச் சொல்லி (கொல் என்னும் ஐயப் பொருள்படும் இடைச் சொல்லின் வாயிலாக) அணியாவிடுகுவரோ, அன்றிக்கே லங்காத்வாரத்தில் சென்று புகுவரோ என்று ஐயமுற்றுக் கவலைப்படுவதைக் காண்பதனால் இருவர்க்கும் அங்கு அஞ்ச வேண்டுமென்பது உறுதிப்படுகிறது. இங்குப் பராங்குச நாயகியோவெனில் - திருக்கோளூர் சென்று புகுந்தாலன்றி தரியாதவளாகையால் சென்றே தீருவள். ஆதலால் இவளுக்கு அஞ்சவேண்டா - என்று அருளிச்செய்தார் என்பதே அந்த ஐதிஹ்யம்.

உண்மை இவ்வளவேயானாலும் எங்குப் போனாலும் இருவரயல்லது போகார்கள் அங்கு (கள்வன் சொல்லில்). இங்குத் தனியே போன பராங்குச நாயகி என்ன பாடுபடுகிறாளோ என்று திருத்தாயார் வருந்திக் கூறுகிறாள். வருந்துகிறவர்களெல்லாரும் தம்தம் வருத்தமே பெரிதென்று நினைப்பது உலகத்தில் இயல்புதானே!

ஆசார்யஹ்ருதயத்தில் *துவளில் *மாலுக்கு *உண்ணுஞ் சோறு என்ற மூன்று பதிகங்களுக்கும் ப்ரமேயமாக 'புராண பௌராணிகர் த்யாஜ்யாம்சமாக்கிய சிக்ஷித்ப்ராப்ய ப்ராபகாபாஸங்களைக் கை வலிந்து கைகழல எல்லாங்கிடக்க நினையாதகன்று, தந்தை தாயுண்ணுஞ்சோறு மாநிதி பூவையாவையும் ஒன்றேயாக்கி' என்று அருளிச் செய்யப்பட்டுள்ளது. இதன் விவரணம் வருமாறு:- 'பிதரம் மாதரம் தாராந்புத்ராந்பந்தூந்ஸகீந்குருந், ரத்நாநிதநதாந்யாநி க்ஷேத்ராணிச க்ருஹாணிச, ஸர்வதர்மாந் ச ஸந்த்யஜ்ய ஸர்வ காமாந் ச ஸாக்ஷராந், லோக விக்ராந்த சரணௌ சரணம் தே அவ்ரஜம் விபோ' என்ற பவிஷ்யத் புராணமும் அப்புராணத்தை நன்கறிந்து அதன்படி கத்யத்தில் சரணாகதி செய்த ஸ்ரீபாஷ்யகாரரும் சரணாகதிக்கு அங்கமாகப் பரித்யஜித்த

(விட்ட) தகப்பன் தாய் மனைவி முதலிய சித்துக்கள் (அறிவுள்ள பொருள்கள்) ரத்நம் தநம் தான்யம் முதலிய அசித்துக்கள் (அறிவில்லாத பொருள்கள்) ஆகியப்ராப்யப்ராபகாபாஸங்களை (* உண்மையில் அடையப்படும் பயனும் அதனை அடைவிக்கும் உபாயமும் பகவானேயாகையால் மேலெழுந்தவாறு பார்க்கும்போது பயனும் உபாயமும் போல் நம்மால் ப்ரமிக்கப்படுமவற்றைக்) கைவிந்து கைகழலக் கண்டும் எல்லாம் கிடக்க நினையாதகன்றும் தந்தை தாய் உண்ணுஞ்சோறு மாநிதி பூவையாவையும் ஒன்றேயாக்கியும் போந்தார் ஆழ்வார். 'அன்னைமீர் அணிமாமயில் சிறுமானிவள் நம்மைக் கைவலிந்து' (6-5-7) என்று பராங்குசநாயகி தாய்மாரையும் தோழிமாரையும் கை கடந்து அவர்களை விட்டமையும், 'இழந்தது சங்கே' (6-6-1) இத்யாதிகளின்படி, சங்கு முதலியவை கழலக் கண்டமையும், 'இதெல்லாம் கிடக்க இனிப்போய்' (6-7-9) என்று -எல்லாம் கண்ணனென்று சொல்வது, தாமரை திருத்துழாய் முதலிய நற்பொருள்களைக் கண்டால் இவையெல்லாம் என் கண்ணனுக்கு என்பது தொடக்கமாக இங்கிருந்து அநுபவிக்கும் போகங்களையெல்லாம் விட்டுப் போனமையும், 'எம்மை ஒன்றும் நினைத்திலனே' (6-7-6) என்று இவர்களையும் இவற்றையும் ஒரு பொருளாக நினையாமல் அகன்று போனமையும், 'தேவபிரானையே தந்தை தாயென்றடைந்த (6-5-11) 'உண்ணுஞ்சோறு ......எல்லாம் கண்ணன் (6-7-1), 'வைத்தமாநிதியாம் மதுசூதனையே அலற்றி (6-7-11), 'பூவை பைங்கிளிகள் பந்து தூதை பூம்புட்டில்கள் யாவையும் திருமால் திருநாமங்களே' (6-7-3) என்றிவற்றால் - தந்தை தாய் முதலிய பந்துக்கள் சோறு நீர் வெற்றிலை முதலாகும் தாரகபோஷகபோக்யவஸ்துக்கள், ஆபத்தில் உதவும் நிதி இவையெல்லாம் எம்பெருமான் ஒருவனேயாகவும், பூவை முதலியவற்றால் பிறக்கும் மகிழ்ச்சி திருமால் திருநாமங்களைச்

சொல்லவே உண்டாகுமென்றும் கூறியதனால் முன்னே விட்டு சேதசித்துக்கள் அனைத்தும் பகவத் விஷயமொன்றேயென நினைத்தமையும் கூறப்பட்டுள்ளமை காண்க.

## 8. பொன்னுலகாளீரோ

வைகல் பூங்கழிவாய் போலே இப்பதிகமும் பக்ஷிகளைத் தூதுவிடும் முகத்தால் ஆழ்வார் அநுஷ்டித்த கடக ஸமாச்ரயணத்தையே காட்டும். இவ்விரண்டிற்கும் வாசியுமுண்டு. அது வருமாறு - கடக ஸமாச்ரயணம் பட்டுமே வைகலில். இங்கு அதோடு கூட, 'புள்ளினங்காள்! நீங்கள் எனது நிலைமையை எம்பெருமானுக்கு விண்ணப்பித்து வந்து, பரமபதத்தையும் இப்புவனிமுழுவதையும் நான்தர நீங்கள் ஆளவேணும். கிளிகாள்! தோழிமார் முன்பு என்கையில் இருந்து நெய்யடிசிலையும் பாற்சோற்றையும் தினந்தோறும் நான் ஊட்ட நீங்கள் உண்ணவேணும். வண்டினங்காள்! என் குழலில் வீற்றிருந்து அதிலுள்ள மலரின் தேனை நீங்கள் பருக வேணும்' என்று கூறி கடகர்க்கு போக்யமான நெய்யடிசில் முதலியவற்றைத் தமக்கு போக்யமான பரமபதத்தோடு ஸமானமாக அவர்களுக்கு ஸமர்ப்பித்தும் கூறப்பட்டிருப்பது அதனில் இதனுக்குள்ள வாசி. "திர்யக்குக்களையிட்டு ஸ்வாபிப்ராயத்தை நிவேதித்து" என்று வைகலின் ப்ரமேயமும், "ஆளீர் மேலீர் ஊதீர் என்று ததீய சேஷமாக்கி" என்று இப்பதிகத்தின் ப்ரமேயமும், ஆசார்யஹ்ருதயத்தில் அருளியுள்ளமை காணத்தகும்.

மேலும், வைகலில் விபவாவதாரமான இராமபிரானிடம் - திருவண் வண்டூரிலுள்ள சிறந்த செல்வம் அவனை மறப்பித்த ஆர்த்தரக்ஷண தீக்ஷிதத்வத்தை (நோவு பட்டாரைக் காப்பதில் விரதமுடைமையை) உணர்த்துதற்காகத் தூது விட்டார் ஆழ்வார். பொன்னுலகாளீரோவில்- தான் படைத்த உலகைக்

காக்கும் பராக்கினால் அவன் மறந்த ஐகரஸ்யத்தை (அடியார்களின் ஆனந்தத்தையே தனக்கு ஆனந்தமாகக் கொண்டுள்ளமையை) அறிவிப்பதற்காகப் பரமபத நாதனிடமும் அந்தர்யாமியிடமும் தூதுவிட்டார் என்று வாசி கூறலாம். "தம்பிழையும்" என்று தொடங்கும் ஆசார்யா ஹ்ருதய சூர்ணிகையின் வ்யாக்யானத்தில் இது விரிவாக ஸேவிக்கத் தகக்கது.

## 9. நீராய் நிலனாய்

இப்பதிகத்தின் ஈட்டவதாரிகையில் அர்ஜுநனுக்கும் ஆழ்வாருக்கும் ஒப்புமை கூறப்பட்டுள்ளது. அது வருமாறு - "பச்யாமி தேவாந் தவ தேவ தேஹே" (கீதை 11-15) இத்யாதிப்படியே அர்ஜுநன் எம்பெருமானுடைய விச்வரூபம் கண்ட பிறகு அது தனக்கு ஆச்சர்யத்தையும் அச்சத்தையும் விளைத்ததனால், அதை மறைத்துத் தனக்குப் பூர்வபரிசிதமான ஸௌம்யமான ரூபத்தையே காட்ட வேணுமென்று "கிரீடிநம் கதிநம் சக்ரஹஸ்தம்" (கீதை 11-16) இத்யாதியால் ப்ரார்த்தித்தது போல, ஆழ்வாரும்-நல்குரவுபதிகத்திலும் இங்கு "நீராய் நிலனாய் .......சிவனாய் அயனானாய்." என்ற இரண்டடிகளிலும் ஐகதாகாரனாயிருக்கும் தனது இருப்பைக் காட்டிய எம்பெருமானைக் குறித்து, 'இது எனக்குக் கண்ணைக் கவர்வதாய் அநுபவிக்கத்தக்கதாக இல்லை. அப்படியிருக்கிற கூராராழி வெண் சங்கேந்திய - உன்னுடையதேயான ஆகாரத்தோடு வாராய்' என்று ப்ராத்திப்பதனால் இவ்வொப்புமை காண்க.

இத்திருவாய்மொழியில் "ஞாலத்தூடே நடந்தும் நின்றும் கிடந்திருந்தும், சாலப்பலநாள் உகந்தோறு உயிர்கள்காப்பானே! கோலத்திருமாமகளோடு உன்னைக் கூடாதே, சாலப்பலநாள் அடியேனின்னம் தளர்வேனோ" என்ற மூன்றாம் பாட்டு, ப்ரணவத்தில் உள்ள அகாரத்தின் பொருளை விவரிக்கிறது என்பர்

வ்யாக்யாதா. அவ-ரக்ஷணே என்னும் தாது அடியாகப் பிறந்த அகாரம்-எம்பெருமானை ரக்ஷகன் என்று மட்டும் காட்டுமே யொழிய வேறொன்றும் காட்டாது. இப்பாட்டு 'காப்பான்' என்று அகாரார்த்தத்தைக் காட்டுவதோடு நில்லாமல், "ஞாலத்தூடே நடந்தும்.....இருந்தும்" என்று எல்லாவிதத்தாலும் ரக்ஷிப்பதையும், "சாலப்பல நாள் உ(யு)கந்தோறு(ம்)" என்று எல்லாக்காலத்திலும் ரக்ஷிப்பதையும், 'உயிர்கள்' என்றுள்ள தன்மையால் எல்லா உயிர்களையும் ரக்ஷிப்பதையும், 'கோலத் திருமாமகளோடு காப்பானே' என்று அவன் செய்யும் ரக்ஷணம் பிராட்டியின் புருஷகாராதீநம் என்பதையும் விளக்கிக் கூறுவதனால் அகாரார்த்த விவரணமாதலும் பொருந்தும்.

மேலும் இது அர்த்தபஞ்சகத்தை விவரிக்கும் திருமந்த்ரத்தின் பொருள்களையும் காட்டுமென்று அருளிச் செய்வர் வ்யாக்யாதா. 'கோலத்திருமாமகளோடு உன்னை' என்று ப்ராப்யமான பரப்ரஹ்மத்தின் ஸ்வரூபமும்., 'அடியேன்' என்று ப்ராப்தாவான ஜீவாத்மாவின் ஸ்வரூபமும், 'உயிர்கள் காப்பான்' என்று எம்பெருமானாகிய ஸித்தோபாயத்தின் ஸ்வரூபமும், 'உன்னைக் கூட' என்று பரப்ரஹ்மத்தை அடைவதாகிய புருஷார்த்தத்தின் ஸ்வரூபமும் 'கூடாதே தளர்வேனோ' என்று அதனை அடைய முடியாமல் தடுக்கும் - (தளர்ச்சிக்குக் காரணமான) அழுக்குடம்பு முதலிய விரோதியின் ஸ்வரூபமும் கூறப்படுவதனால் இது திருமந்த்ரார்த்த ப்ரதிபாதகமென்பதும் தகும்.

## 10. உலகமுண்ட பெருவாயா

இக்கடைசித் திருவாய்மொழியில் முதல் ஒன்பது பாட்டால் ஆழ்வார் தாம் தஞ்சமாகப் பற்றத் தகுதி பெற்ற எம்பெருமான் படிகளைப் பேசி, பத்தாம் பாட்டால் எம்பெருமானைச் சரணம் புகுகிறார். பிராட்டி புருஷகாரமாகச்

சரணம் புகுதலை விளக்கும் - 'அகலகில்லேன்' என்னும் அப்பாசுரம்.

இனி ப்ரபத்திக்கு விஷயநியமமும், பிராட்டியின் புருஷகாரம் இருந்தே தீர வேண்டிய நிர்ப்பந்தமும், முன்பு செய்த நான்கு ப்ரபத்திகளை விட இந்த ப்ரபத்திக்குள்ள வாசியும், அகலகில்லேன் பாசுரம் த்வயத்தின் பூர்வவாக்யார்த்தா நுஸந்தா நரூபம் என்பதும் வ்யாக்யானத்தை ஒட்டி விஸ்வரிக்கப்படும்.

## ப்ரபத்தியின் விஷய நியமம்

ப்ரபத்திக்கு விஷயநியமமாவது -எம்பெருமானுடைய ஐந்து நிலைகளில் ஐந்தாவதான அர்ச்சாவதார நிலையிலேயே ப்ரபத்தி அநுஷ்டிக்க வேண்டியதென்னும் நிர்ப்பந்தம். அது வருமாறு: - பரமபதத்திலுள்ள எம்பெருமான், ஜீவாத்மாவுக்கு பகவானை ஆச்ரயிக்க வேணுமென்று ஆசை பிறந்தபோதே ஆச்ரயிக்க முடியாதபடி வெகு தூரத்திலுள்ளான். ப்ரஹ்மாதி தேவர்களால் மட்டும் ஆச்ரயிக்கலாம்படித் திருபாற்கடலில் உள்ள வ்யூஹ மூர்த்தியும் அப்படியே. ராம க்ருஷ்ணாதிரூபம் கொண்டு அவதரித்த எம்பெருமானோ ஸம காலத்தில் பிறந்த பாக்யவான்களுக்கேயன்றிப் பிற்பாடரான நமக்கு உதவாமல் காலத்தால் மிக முற்பட்டிருப்பான். அந்தர்யாமியெம்பெருமான் எல்லாவிடங்களிலும் எல்லாக் காலங்களிலும் எல்லாருடைய ஹ்ருதயத்திலும் எழுந்தருளியிருந்தாலும் யோகிகளுக்கன்றி நம் கண்ணுக்குப் புலப்படான். இக்குறைகளில் ஏதுமின்றி எங்கும் எக்காலத்திலும் எல்லார்க்கும் ஆச்ரயிக்கலாம்படியான பெருமையோடு நம் கண்ணுக்குத் தென்பட்டு, நம் காரியத்தைச் செய்து முடித்தற்குத் தக்க ஞான சக்திகள் நிறையப் பெற்று ஸதாஸேவை ஸாதிக்கும் அர்ச்சாவதார எம்பெருமானே நம்மால் ப்ரபத்தி செய்யத்தக்கவன். அர்ச்சாவதாரங்களுள், நித்யஸூரிகள், ப்ரஹ்மாதி தேவர்கள், நித்யஸம்ஸாரிகளான

மனுஷ்யர்கள், வானரம், யானை முதலிய விலங்குகள் ஆகிய எல்லார்க்கும் முகங்கொடுத்துக் கொண்டிருக்கும் திருவேங்கடமுடையானே மிக முக்கியமானவன். இதுதான் விஷய நியமம்.

## பிராட்டி புருஷகாரத்தின் நிர்ப்பந்தம்

பகவானுக்கே அடிமைப்பட்டிருக்கும் ஜீவாத்மா நேரே அவனையே சரணாகப் பற்றாமல் பிராட்டியை முன்னிட்டுப் பற்ற வேண்டிய நிர்ப்பந்தம் எதற்கு? என்று நஞ்சீயர் முதலிய சிஷ்யர்கள் கேட்க அதற்கு பட்டர் அருளிய ஸமாதானம் வருமாறு - இராவணனுக்கும் காகாஸுரனுக்கும் இராமபிரானோடு - உண்மையில் அடியவன் எஜமானனென்னும் ஸம்பந்தமும், காகாஸுரன் மூவுலகும் சுற்றிக் காப்பாரற்று முன்னே வந்து விழுந்ததனாலும், வஜ்ராயுதம் முதலியவற்றுக்குச் சளைக்காத இராவணன் இராமபாணத்தால் அடியுண்டு மனங்கலங்கிக் கையிலுள்ள வில்லையும் வீசியெறிந்து நின்றதனாலும் செயலற்று நின்ற நிலையும் இருவர்க்கும் ஒக்கும். ஆகையால் இருவரையும் அவர் காப்பாற்றியிருக்க வேண்டும். பிராட்டியின் அபகாரத்தையே முக்கியமாகக் கொண்டால் இருவரையும் கொன்றிருக்க வேண்டும். இராவணன் வேதவதியின் சாபத்திற்கு அஞ்சிப் பிராட்டியைக் கிட்டாமலிருந்ததையும், காகாஸுரன் அங்ஙனல்லாமல் கிட்டித் திருமார்பைக் குத்திப் புண் படுத்தியதையும் நோக்கினால் இராவணனை விட்டு விட்டு, காகத்தையே வதைத்திருக்க வேண்டும். ஆனால் அதற்கு நேர்மாறாக, காகம் தலை தப்பிற்று. இராவணனோ தலையறுப்புண்டு மாண்டான். இதற்குக் காரணம் - காகம் விழுந்த போது பிராட்டி பெருமாளருகில் இருந்தமையும், இராவணன் செயலற்று நின்றபோது அவள் அவனருகில்

இல்லாமையும்தான். ஆகையால் பிராட்டியை முன்னிட்டே பெருமாளைச் சரணம் புகவேண்டும். தகப்பனைவிடத் தாய் மக்களிடம் அதிக ப்ரீதியுடையவளாகையால் அவர்கள் செய்த குற்றத்தைத் தகப்பனிடம் சொல்லாமல் மறைத்து விடுவாளொருத்தியன்றோ? தன் வார்த்தையைக் கேளாத இராவணனுக்கும் உபதேசம் செய்து அவனை நல்வழிப்படுத்த நினைத்தவள் - தன்னை மிகவும் வருத்திய ராக்ஷஸிகளைச் சித்ரவதை செய்ய எண்ணிய திருவடியிடம் மன்றாடி 'உலகில் தவறு செய்யாதவர் யார், நீ இவர்கள் திறத்தில் இரங்கவேணும்' என்று உபதேசித்து அவர்களைக் காப்பாற்றியவள் - தன் சொல்லைக் கேட்கும்படித் தன்னிடம் மிக்க அன்பு கொண்ட பெருமாளிடம் நம்மைப் பற்றிப் புருஷகாரம் (சிபார்சு) செய்து நம்மை அவன் காக்கும்படிச் செய்வாள் என்பதைத் தனிப்படச் சொல்ல வேண்டுமா? இதனாலும் பிராட்டியைப் புருஷகாரமாகப் பற்ற வேண்டிய நிர்பந்தம் அறியலாம் - என்பதே.

## முன்பு செய்த ப்ரபத்திகளைக் காட்டிலும் இந்த ப்ரபத்திக்கு உள்ள வாசி

முன்பு நோற்ற நோன்பு தொடங்கி நான்கு தடவைகள் ப்ரபத்தி செய்திருக்க, இவ்வுலகமுண்ட பெருவாயனில் ப்ரபத்தி செய்கிறாரே, அவற்றைவிட இதற்கு ஏதாவது விசேஷமுண்டோ என்றால்- அங்கெல்லாம் பிராட்டியைச் சொல்லும் ஸ்பஷ்டமான சப்தம் இல்லை, இங்கு அது உண்டென்பதே வாசி. பிராட்டியின் புருஷகாரம் அவசியமான தென்பது முன்னே கூறப்பட்டமையால் அப்படிப்பட்டவளை வெளிப்படையாகக் கூறிய இவ்விடத்தில் செய்யப் பட்ட ப்ரபத்தியே உயர்ந்ததென்னத் தடையில்லையன்றோ?

இவ்வாசியை ஒரு உவமையாலே விளக்கி யருளுகிறார் வ்யாக்யாதா. 'கீழில் ப்ரபத்திகள் திருமந்த்ரம் போலே, இது

த்வயம் போலே என்று அதைச் சற்று விரிவாகக் கூறுகிறார்கள் அரும்பதவுரையாசிரியர்கள்:- திருமந்த்ரத்தில் ரக்ஷகனைச் சொல்லும் அகாரம், ரக்ஷணம் பிராட்டியின் அதீனமாகையால் அவன் மார்பை விட்டுப் பிரியாத பிராட்டியையும் சொல்விற்றேயாகக் கொள்ள வேணும். அப்படிக் கொள்வது அந்தந்த ஸ்பாவத்தினால்தான், சப்தத்தின் சக்தியால் அன்று. த்வயத்திலோவென்றால்-"ஸ்ரீமந் நாராயண சரணௌ சரணம் ப்ரபத்யே" என்று பிராட்டியைச் சொல்லும் ஸ்ரீ என்கிற சொல்லே உள்ளது. அது போல - நான்கு தடவைகள் முன்பு ப்ரபத்தி செய்த நான்கிடங்களால், எம்பெருமானைச் சொன்னது அவனைவிட்டு நீங்காத அவளையும் கூறினபடியாகவே கொள்ள வேணுமென்கிற ந்யாயத்தால் லக்ஷ்மீஸம்பந்தம் (புருஷகாரமாக லக்ஷ்மீஸம்பந்தம்) ஆழ்வாரால் அருளிச் செய்யப்பட்டது. இங்கோவெனில் 'திருமாமகள் கேள்வா', 'அலர்மேல் மங்கையுறை மார்பா' என்று - புருஷகாரமாக லக்ஷ்மீஸம்பந்தம், அவளை ஸ்பஷ்டமாகக் கூறும் திருமாமகள், அலர்மேல் மங்கை என்ற சப்தத்தாலேயே அருளிச் செய்யப்பட்டுள்ளது என்று.

## அகலகில்லேன் என்னும் பாசுரம் த்வய பூர்வவாக்யார்த்தாநுஸந்தாரூபம்

'ஸ்ரீமந்நாராயண சரணௌ சரணம் ப்ரபத்யே' என்கிற த்வயமந்த்ர பூர்வவாக்யத்தில் உள்ள ஸ்ரீ சப்தார்த்தம், 'அலர்மேல் மங்கை' என்றும், மதுப்பின் பொருளான நித்ய யோகம் (பெருமானுடன் பிராட்டிக்குள்ள இடைவிடாத சேர்த்தி) 'அகலகில்லேன்............உறைமார்பா' என்றும், நாராயண சப்தார்த்தமான வாத்ஸல்ய ஸ்வாமித்வ ஸௌசீல்ய ஸௌலப்ய குணங்கள் நான்கும்:- 'நிகரில் புகழாய்' தொடங்கி, 'திருவேங்கடத்தானே' என்ற நான்கு விளிகளாலும், சரணசப்தார்த்தம் 'உன்னடிக்கீழ்' என்றும், ப்ரபத்யே என்றதன்

பொருள் 'அமர்ந்து புகுந்தேன்' என்றும், ப்ரபத்யே (பற்றுகிறேன்) என்பதற்கு எழுவாயாக வந்து புகுந்த அஹம் (நான்) என்பதன் பொருளை 'அடியேன்' என்றும், அந்த அதிகாரியின் ஸ்வரூபங்களாய், அங்குச் சொல்லப்படாத ஆகிஞ்சந்யம் (வேறு உபாயமின்மை) அநந்யகதித்வம் (வேறு காப்பாரின்மை) என்ற இரண்டும் 'புகலொன்றில்லா' என்றும், இப்பாட்டில் அநுஸந்திக்கப் பட்டிருக்கிறபடியால் இது த்வய பூர்வவாக்யார்த்தாநுஸந்தான ரூபமென்று ஆசார்யார்கள் அருளிச் செய்வர். (புகல் என்ற தொழிற்பெயர் ஆகுபெயராய் (லாக்ஷணிகமாய்) நின்று, புகுதலுக்குக் கைம்முதலான உபாயத்தையும் புகுமிடமான ரக்ஷகனையும் காட்டும்).

## 'அகலகில்லேன்' பாட்டின் பொருள்

இனிப் பாசுரத்தின் பொருளைச் சிறிது அநுபவிப்போம். அகலகில்லேன்......உறைமார்பா - எவ்வளவு அநுபவித்தாலும் புதிதாகவே தோன்றி மேன்மேலும் அநுபவிக்க வேண்டியதாகத் தோன்றும் எம்பெருமானுக்குள்ள போக்யதையின் மிகுதியாலே பத்தர் முக்தர் நித்யர் என்ற த்ரிவித சேதனர்க்கும் ஸ்வாமிநியாய் எம்பெருமானுக்கு [illegible] தாமரை மலரின் [illegible] ஒரு வடிவு கொண்டாற்போலுள்ள பேரழகியான பெரிய பிராட்டியார் - க்ஷணகாலமும் உன்னை விட்டு அகல வல்லமையுடையேனல்லேன் என்று சொல்லிக் கொண்டே - நித்யவாஸம் செய்யும் திருமார்பையுடையவனே என்பது இதன் பொருள். இத்தால் - எம்பெருமானை விட்டுப் பிரியாத பெரிய பிராட்டியாரை - தாம் பேறு பெறுவதற்காகத் தாம் எம்பெருமானிடம் செய்யப் போகும் ப்ரபத்தி பலிக்குமாறு அவனிடம் புருஷகாரம் செய்யும்படி - ஆழ்வார் ஆச்ரயிக்கின்றமை கூறப்படுகிறது. ஓர் அபராதியை ரக்ஷிக்க வேணுமென்று பிராட்டி பெருமாளிடம் விண்ணப்பித்த போது,

அபராதியை தண்டியாது விட்டால் சாஸ்த்ரவரம்பை மீற வேண்டுமேயென்று பெருமாள் சொல்ல, இவனை ரக்ஷியாது விட்டால் உம்முடைய தயை வீணாய்ப் போகுமேயென்று பிராட்டி கூற, சாஸ்த்ரவரம்பும், தயையும் நிறம் பெறும்படி நீ ஓர் உபாயம் சொல் என்று பெருமாள் சொல்ல அபராதியாயிருந்து உம்மைச் சரணமாகப் பற்றினவனைக் காப்பாற்றினால் உம்முடைய தயை ஜீவிக்கும். அபராதியாய் உம்மிடம் வராமல் த்வேஷபுத்தியையுடையவனைத் தண்டித்தால்சாஸ்திர வரம்பும்பிழைக்கும். ஆகையால் உம்மை ஆச்ரயித்த இவன் அபராதியாயிருந்தாலும் உம்மால் அவச்யம் காக்கத் தக்கவனேயாவான் என்று - பெருமாள் மறுக்க முடியாதபடி உபதேசித்து அவனது ஸ்வாதந்த்ர்யத்தைத் தலை சாயும்படி செய்வள் பிராட்டி. ஸ்வாதந்த்ர்யம் மடிந்தவாறே, இது வரையில் விஷயமகப்படாமல் உள்ளேயே அடங்கிக்கிடந்த ப்ரபத்தி-பலிக்குமென்று நாம் நம்புவதற்குக் காரணமான நான்கு குணங்கள் தலையெடுக்குமாறு சொல்லுகிறது மேல் நான்கு அடைமொழிகளால், (1) நிகரில் புகழாய் - ஒப்பற்ற புகழை உடையவனே என்பது இதன் பொருள். புகழப்படுவது புகழ்-கல்யாணகுணமென்றபடி. அக்குணங்கள் பலவற்றில் ஒப்பற்ற குணமாவது வாத்ஸல்யம். ஆச்ரிதருடைய தோஷத்தை போக்யமாகக் கொள்ளுகையே வாத்ஸல்யம். எம்பெருமானார் கத்யத்திலே "அபாரகாருண்ய ஸௌசீல்ய வாத்ஸல்ய" இத்யாதியாலே மற்ற குணங்களுடன் சேர்த்து அருளிய வாத்ஸல்யத்தை "ஆச்ரிதவாத்ஸல்யைக ஜலதே" என்று தனிப்படவும் அருளிச் செய்கையாலே இக்குணம் நிகரில்லாததென்பதை அறியலாம். ஆழ்வார் இங்கு நிகரில் என்றதையே எம்பெருமானார் ஏகசப்தத்தால் மொழி பெயர்த்தருளினார். எம்பெருமானுக்குள்ள எல்லா குணங்களும் அளவிட முடியாதவையாயினும், வாத்ஸல்யமென்னும் குணம்

அளவிட முடியாமையில் ஒப்பற்றது - என்னும் பொருள் - வாத்ஸல்யமேவ ஏக: - அத்விதீய:, ஜலதி: - ஜலதிவத் அபரிச்சிந்ந: (குண:) யஸ்ய ஸ: - ஆச்ரிதவாத்ஸல்யைகஜலதி: என்ற பஹுவ்ரீஹிஸமாஸத்தாற் பெறப்படும். தான் புருஷகாரம் செய்து சேர்த்த ஜீவன் விஷயமாக ஒருவேளை பிராட்டி குற்றம் சொன்னாலும், "என்னடியார் குற்றம் செய்யார்; செய்தாரேல் நன்று செய்தார்" என்று அவனோடு மன்றாடுவதற்கு உறுப்பாகும் இவ்வாத்ஸல்ய குணம், நிகரில் புகழாயென்ற விளியினால் - எம்பெருமான் நம் தோஷங்களைக் கண்டு நம்மை விலக்குகையன்றிக்கே அதற்கு நேர்மாறாக அவற்றையே போக்யமான உபஹாரமாகக் கொண்டு நம்மை ரக்ஷிக்குமவன் என்றுஞ்சொல்லப் பட்டதாயிற்று. (2) உலகம் மூன்றுடையாய்- மூவுலகுக்கும் ஸ்வாமியே! என்றபடி. முன் சொன்ன வாத்ஸல்யத்துக்குக் காரணமான ஸ்வஸ்வாமிபாவ ஸம்பந்தம் சொல்லுகிற இவ்விளியினால் - எம்பெருமான் உலகிற்கெல்லாம் ஸ்வாமி யாகையாலே நம் தோஷங்களை போக்யமாகக் கொண்டு நம்மை ரக்ஷிப்பான் என்று கூறப்பட்டதாயிற்று. (3) என்னையாள்வானே! உன்னுடைய மிக்க இறைநிலையாகிய மேன்மையையும், மாறிமாறிப் பலபிறப்பும் பிறந்து துளங்குகிற என் தாழ்மையையும் பாராமல் மயர்வறமதிநலமருளி, கர்மாதி உபாயங்கள் ஸ்வரூபவிரோதி; பிராட்டி புருஷகாரமாக பற்றப்படும் உபாயமும் உபேயமும் தானே! என்னும் உறுதியை உண்டாக்கி என்னை ஆண்டு என்னோடு ஒரு நீராகக் கலந்தவனே! என்பது இதன் பொருள். மிகப் பெரியவன் மிகத்தாழ்ந்தவனோடு புரையறக் (குற்றமறக்) கலக்கையாகிற ஸௌசீல்யம் இதனால் சொல்லப்படுகிறது. இங்குக் குற்றமாவது - கலக்கும்போது, ஐயோ இவ்வளவு உயர்ந்த நாம் இத்தனைத் தாழ்ந்தவனோடு கலக்க வேண்டியதாயிற்றே என்னும் நினைவேயாகும். இவ்விளியால் எம்பெருமான் - முற்கூறிய

ஸ்வஸ்வாமிபாவ ஸம்பந்தத்தை விலக்காமல் - நம்மைக் கைக் கொண்டு நமக்கு உபகரித்துக் கலந்து பயனுள்ளதாகச் செய்யுமவன் என்று சொல்லப்பட்டதாயிற்று. (4) நிகரிலமரர் முனிக்கணங்கள் விரும்பும் திருவேங்கடத்தானே! இதனால் சொல்லப்படுவது - ஸௌலப்யம். அதாவது வேடர்கள் யானைகள் வானரங்கள் அகப்படத் தன்னைக் கண்ணால் கண்டு பற்றும்படி எல்லோர்க்கும் எம்பெருமான் வசப்பட்டிருக்கை என்றபடி, இது திருவேங்கடத்தான் என்ற சொல்லால் கிடைக்கின்றது. பரமபதத்திலே கைங்கர்யத்திலே யூன்றின அமரர், குணானுபவத்திலே யூன்றின முனிவர் என்ற இருதிறத்தாரும் உள்ள நித்யஸூரிகள் - அங்கு அநுபவிக்க முடியாத எம்பெருமானுடைய ஸௌசீல்யத்தை அநுபவிப்பதற்காக விரும்பி வந்து படுகாடு கிடக்கும் இடம் திருமலை என்ற பொருளைத் தரும் - நிகரில் ........... விரும்பும் என்னும் திருவேங்கடத்தின் அடைமொழி. இந்த நித்யஸூரிகள் நிகரற்றவர்கள் - சரீர (அழுக்குடம்பின்) ஸம்பந்தம், அது இருந்து கழிதல், ஸ்ருஷ்டி முதலிய ஜகத்வ்யாபாரம் ஆகிய மூன்றும் இல்லாத இவர்கள், முறையே இவற்றில் ஒவ்வொன்றையுடைய ஸம்ஸாரிகள், முக்தர்கள், எம்பெருமான் இவர்களை ஒப்பாகவுடையரல்லாமையால் இவர்களுடைய நிகரின்மை கூறப்படுகிறது. இங்ஙனம் மூன்றடிகளாலும் - பிராட்டியை முன்னிட்டு, அவளால் தலைபெறுத்த நான்கு குணங்களையுடைய எம்பெருமானை விளித்து விட்டு, "புகலொன்றில்லா வடியேன் உன்னடிக் கீழ் அமர்ந்து புகுந்தேனே" என்ற நான்காமடியால் - வேறு உபாயமும் வேறு ரக்ஷகரும் இல்லாத - தேவரீருடைய அடியவனான நான் தேவரீருடைய திருவடிகளின் கீழே இடை வெளியில்லாதபடி சேர்ந்து (அத்திருவடிகளை) உபாயமாகவும் ரக்ஷகமாகவும் (நிரபேக்ஷரக்ஷகமாக) பற்றினேன்" - என்று தம்முடைய

ஸ்வரூபத்தை விண்ணப்பித்து ஆழ்வார் திருவேங்கட முடையான் திருவடிகளில் ப்ரபத்தியை அநுஷ்டிக்கிறார்.

ஆக ஆழ்வார் - இப்பதிகத்தில் எம்பெருமான் திருவடிகளை உபாயமாகப் பற்றி ப்ரபத்தியை யநுஷ்டித்தும், கீழ் நல்குரவுப் (6-3) பதிகத்தில் 'தந்தனன் தனதாள் நிழல்', திருவிண்ணகர் மன்னுபிரான் கழல்களன்றி மற்றோர் களைகணிலம் காண்மின்கள்' என்று ஸம்ஸாரிகளுக்கு உபதேசித்தும், ஸித்தோபாயமான எம்பெருமானிடம் தமக்குள்ள உறுதியான நம்பிக்கையை இவ்வாறாம்பத்தால் வெளிப்படுத்தினாராயிற்று.

## பலச்ருதி

கடைசிப் பதிகத்தின் பலச்ருதி - திருவேங்கடத்துக்குச் சொன்ன இவை பத்தையும் அநுஸந்தித்தவர்களைப் பற்றியவர்கள், அல்லது அநுஸந்தித்தவர்களாலே அபிமானிப் பெற்றவர்கள் பரமபதத்தில் தம்முடைய சிறப்புத் தோற்ற இருக்கப் பெறுவர் - என்று கூறப்பட்டுள்ளது. அதாவது - திருவேங்கடமுடையானைப் பற்றிய இப்பதிகத்தோடு நேராக ஸம்பந்தம் பெற்றவர்களோடு பரம்பரா ஸம்பந்தம் பெற்றவர்களோடு (தொட்டாரைத் தொட்டவர்களோடு) வாசியற எல்லார்க்கும் மோக்ஷப்ராப்தி கூறப்பட்டுள்ள தென்றவாறு.

இப்பதிகத்தோடு பரம்பரா ஸம்பந்த முள்ளவர்களுக்கே பரமபதம் கிடைப்பது உறுதியானால், திருவேங்கடமுடையானோடு பரம்பராஸம்பந்தம் உள்ளவர்களுக்கு அது கிடைப்பது சொல்லாமலே விளங்கும். அதையும் கீழே இரண்டாம் பத்தில் - 'என்னமுதம் கார்முகில் போலும் வேங்கட நல்வெற்பன்' என்று திருவேங்கடமுடையானையே கூறும் கேசவன் தமரில் (2-7) நாராயணனாலே ("அந்தர்யாமியாய் வத்ஸலனான

திருவேங்கடமுடையானாலே) கீழ் மேலெவர் ஏழெழு பிறப்பும் கேசவன் தமர் ஆனார்கள் என்று தம்மோடு பரம்பரா ஸம்பந்தம் பெற்றவர்கள் அடிமைப்பட்டதையும், 'எந்தாய் தண் திருவேங்கடத்துள் நின்றாய்', 'தண் திருவேங்கடம் மேகின்றாய்' என்று திருவேங்கடமுடையானையே ப்ரஸ்தாவிக்கும் வைகுந்தாவில் (2-6) 'செடியார் நோய்களெல்லாம் துரந்து எமர் கீழ்மேல் எழுபிறப்பும் விடியா வெந்நரகத்தென்றும் சேர்தல் மாறினர்' என்று தம்மோடு பரம்பரா ஸம்பந்தம் பெற்றவர்கள் நரகத்தில் சேராமல் பரமபதம் பெறுவதையும் கூறி - குறிப்பித்தருளியே இருக்கிறார் ஆழ்வார்.

'இருந்தமிழ் நூற்புலவன்' (திருவாய்மொழிப் புலவன்) என்று தம் பெருமையைத் தாமே வெளியிட்டருளிய திருமங்கையாழ்வார் ஆறங்கம் கூறவே அவதரித்தவர் - "இன்னை பாயில் கொண்டு தொண்டர்கள் ஏத்துவார் உறுவோர் வாழ்வினைக் கொண்டு பெரியவும் - வேங்கடம் கோயில் கொண்டு ........இருப்பார்க்கு அடிமைத் தொழில் பூண்டாயே" என்று (பெரிய திருமொழி 2-7-3) திருவேங்கடமுடையான் தொண்டர்களோடு) ஸம்பந்தம் பெற்ற அவருறவினரும் மோக்ஷம் பெறும் பெருமையைக் கூறியருளியதையும், மாறனடி பணிந்துய்ந்து, அவர்தம் தமிழ் மறையை மொழியினால் வளர்த்த ஸ்ரீஸ்வாமி எம்பெருமானார் - ஸ்ரீபாஷ்ய மங்கள ச்லோகத்தில் - "விநத விவித பூதவ்ராத ரக்ஷைக தீக்ஷே ........... ஸ்ரீநிவாஸே" என்று "பூதவ்ராத" சப்தமிட்டருளியதன் மூலம் - அவர்மேல் மங்கையுறை மார்பன் (திருவேங்கடமுடையான்) தன்னை யாச்ரயித்தவர்களோடு பரம்பரா ஸம்பந்தம் பெற்றவர்க்கும் பரமபதமளிப்பதில் விரதம் கொண்டுள்ளமையைக் கூறியருளியதையும் இதற்கு ப்ரமாணமாக நினைக்கத்தக்கது.

# [8]

# மந்த்ர ரத்னமும் திருவேங்கடமுடையானும்

'ஸ்ரீமந் நாராயண சரணௌ சரணம் ப்ரபத்யே, ஸ்ரீமதே நாராயணாய நம:' என்று இரண்டு வாக்யங்களாக அமைந்துள்ளது த்வயமென்னும் இம்மந்த்ரம். இதற்கு மந்த்ர ரத்னம் என்ற பெயர் ஸ்ரீ பாஞ்சராத்ர சாஸ்த்ரத்தில் ப்ரஸித்தமாக வழங்கப்படுகின்றது. மந்த்ர ராஜமென்னும் அஷ்டாக்ஷரியான 'ஓம் நமோ நாராயணாய' என்னும் மூல மந்த்ரத்தினுடைய பொருளை விவரித்து ப்ரகாசப்படுத்துவதனால் இந்த த்வய மந்த்ர ரத்னமெனப்படுவது பொருந்தும். அரசனை விளங்கச் செய்வது அவன் தலையில் அணியும் ரத்னமன்றோ? திருமந்த்ரத்தில் 'நம:' என்றதனால் குறிக்கப்பட்ட ஸ்வாமியை ஸ்ரீமந் நாராயணன் என்றும், 'நாராயணாய' என்றதனால் சதுர்த்தி விபக்தியின் அர்த்தமான கைங்கர்யத்தை ஏற்றுக்கொள்ளுமவன் ப்ரஹ்மசாரியான நாராயணனல்ல; ஸ்ரீமந் நாராயணனே என்றும் த்வயமந்த்ரம் முறையே இரண்டு வாக்யங்களால் விவரித்துக் காட்டுகிறதென்பர் பெரியோர். இது கொண்டு திருமந்த்ரம் என்னும் அரசனைவிட அவனை விளங்கச் செய்யும் த்வயமென்னும் மந்த்ர ரத்னம் மிகவும் உயர்ந்ததென்பதை அறிதல் தகும். நம்முடைய பூர்வாசார்யர்கள் அனைவரும் இம்மந்த்ர ரத்னத்தையே அர்த்தத்துடன் எப்போதும் அநுஸந்தித்து வந்தனரென்பது பழைய நூல்களில் காணப்படுகிறது. ஸ்ரீரங்கநாதன் எம்பெருமானாருக்கு 'த்வயம் அர்த்தாநுஸந்தானேன ஸஹ ஸதா ஏவம் வக்தா அத்ரைவ ஸ்ரீரங்கே ஸுகமாஸ்வ' (த்வயத்தை அதன் பொருளின் அநுஸந்தானத்தோடு கூட இவ்வண்ணமே எப்போதும் உச்சரித்துக் கொண்டு இந்த ஸ்ரீரங்கத்திலேயே ஸுகமாக இரும்) என்று ஸதா ஜபிக்கும் மந்த்ரமாக உத்தர விட்டதும் இந்த த்வயத்தையே யாகையால் இதன் பெருமை வாசாமகோசரமன்றோ? யதீந்த்ரப்ரவணர்

(எம்பெருமானாராகிய யதிராஜரிடம் மிக்க பக்தியுடையவர்) என்று ப்ரஸித்தி பெற்ற மணவாள மாமுனிகளை எறும்பியப்பா பூர்வ தினசர்யையில், 'மந்த்ரரத்நாநு ஸந்தாந ஸந்தத ஸ்புரிதாதரம் ததர்த்ததத்வ நித்யான ஸந்நத்தபுலகோத்கமம்' என்று த்வயத்தை உச்சரிப்பதனால் எப்போதும் உதடுகள் அசையப் பெற்றவராகவும், அதன் பொருளை அநுஸந்திப்பதனால் திருமேனியில் மயிர்க்கூச்செறியப் பெற்றவராகவும் அருளிச் செய்வதனாலும் இம்மந்த்ர ரத்னத்தினுடைய சப்தார்த்தங்களின் போக்யதை (= இனிமை) அறியத்தக்கதாகும். அப்பாமுனிகள் தாமும் ஆர்த்தி ப்ரபந்தத்தின் முடிவில் 'இந்த அரங்கத்து இனிதிரு நீ யென்றரங்கர், எந்தையெதிராசர்க்கு ஈந்தவரம் - சிந்தை செய்யில், நம்மதன்றோ நெஞ்சமே நல்தாதை சொம் புதல்வர் தம்மதன்றோ தாயமுறைதான்' என்று, த்வயத்தை அர்த்தத்துடன் அநுஸந்தித்துக் கொண்டே ஸ்ரீரங்கத்தில் வாழுமென்று ஸ்ரீரங்கநாதன் தம் தந்தையாகிய (ஞானபிதாவாகிய) எம்பெருமானார்க்கு அளித்தவரம் என்னும் செல்வமானது அவரது ஞானபுத்ரராகிய தமக்கு 'தமப்பன் செல்வம் மகனுக்கு உரியது' என்னும் தாய முறைப்படி சொந்தமன்றோ என்று கூறித் தாமும் த்வயத்தையே அர்த்தாநுஸந்தானத்துடன் உச்சரித்துக் கொண்டு ஸ்ரீரங்கத்திலேயே ஸுகமாக வாழ்ந்தருளுவதை அருளிச் செய்துள்ளமையாலும் இந்த த்வயத்தின் மஹிமை தெரிந்து கொள்ளல் தகும். ஆழ்வார் எம்பெருமானார் சீயர் என்று கூறிவரும் அடைவில், முற்கூறியபடி எம்பெருமானார், சீயர், ஆகிய இருவரின் த்வயாநுஸந்தானத்திற்கும் மூலம் ஆழ்வாருடைய அநுஷ்டானமேயாகையால், அவர் த்வய மந்த்ரத்தின் பொருளையே முக்கியமாகக் கொண்டு திருவாய்மொழியை அருளிச் செய்தாரென்ற உண்மையை ப்ரமாணத்துடன் இனிக் காண்போம்.

நம்பிள்ளையருளிச் செய்த ஈடுமுப்பத்தாறாயிரப்படி வ்யாக்யானத்தின் இரண்டாம் ச்ரிய:பதியென்னும் அவதாரிகையில், நம்மாழ்வார் திருவாய்மொழியால் த்வயத்தை

விவரிக்கிறார். அது தன்னில் முதல் மூன்று பத்தும் த்வயத்தின் உத்தரவாக்யத்தையும், அடுத்த மூன்று பத்தும் பூர்வவாக்யத்தையும், அதற்கும் அடுத்த மூன்று பத்தும் முற்கூறியவற்றுக்கு அங்கமான சிலவற்றையும், பத்தாம்பத்தால் தாம் வேண்டியபடியே எம்பெருமான் கடாக்ஷத்தால் மோக்ஷமளிக்கப் பெற்றமையையும் கூறியருளுகிறார் என்ற விஷயம் குறிக்கப் பட்டுள்ளமையால் திருவாய்மொழி த்வயமந்த்ரத்ன விவரணமென்று அறுதியிடத்தகும்.

ஸ்ரீ எனப்படுகிற பெரிய பிராட்டியாரை முன்னிட்டு (*புருஷகாரமாகப் பற்றி) அவளோடு எப்போதும் கூடியிருக்கிற நாராயணனுடைய திருவடிகளை உறுதியாக நினைக்கிறேன். அப்பிராட்டியும் அப்பெருமானுமாய்ச் சேர்ந்திருக்கிற நிலையில் என்னுடைய உகப்புக்காகவன்றி, அவர்களுடைய உகப்புக்காகவே அவர்களுக்குக் கைங்கர்யம் செய்யக்கடவேன் - என்பது முறையே த்வயத்தில் அடங்கிய இரண்டு வாக்யத்தின் பொருளாகும்.

முற்கூறியபடி, திருவாய்மொழியில் முதல் மூன்று பத்தும், அடுத்த மூன்று பத்தும் முறையாக உத்தரவாக்யத்தினுடையவும் பூர்வவாக்யத்தினுடையவும், விவரணமாக இருந்தாலும் அவற்றில் ஒழிவில் காலமெல்லாமென்ற பாட்டும் (3-3-1), அகலகில்லேனென்ற பாட்டும் (6-10-10) மிகமிக முக்கியமானவை. ஆகையால் அவற்றில் த்வய மந்த்ர விவரணமாயிருக்கும் தன்மை காட்டப்படுகிறது. இப்பாசுரங்களிரண்டும் திருவேங்கடமுடையானைப் பற்றிய பதிகங்களைச் சேர்ந்தவை.

**ஒழிவில் காலமெல்லாமுடனாய் மன்னி**
**வழுவிலாவடிமை செய்ய வேண்டும் நாம்**
**தெழிகுரலருவித் திருவேங்கடத்து**
**எழில்கொள் சோதி எந்தை தந்தை தந்தைக்கே**

என்பது உத்தரவாக்யத்தின் விவரணம். கம்பீரமான குரலையுடைய அருவிகள் பொருந்திய திருவேங்கடமலையில் எழுந்தருளியிருக்கிறவனும், அழகே வடிவான மஹாலக்ஷ்மியை (மார்விலே) கொண்ட சோதி மயமான திருமேனியையுடையவனும் எனக்கும் என் குலத்துக்கும் நாதனுமான பெருமானுக்கு எல்லாக் காலங்களிலும் எல்லாவிடங்களிலும் உடனிருந்து, நிற்றல் இருத்தல் கிடத்தல் முதலிய எல்லா நிலைகளிலும் பொருந்தியிருந்து குற்றமற்ற எல்லா வடிமைகளையும் நாம் செய்ய வேண்டும் என்பது இதன் பொருள். இதன் கண் - 'எழில் கொள் சோதி' என்பது உத்தரவாக்யத்தில் உள்ள 'ஸ்ரீமதே' (பிராட்டியைப் பிரியாதவன்) என்பதனையும், 'எந்தை தந்தை தந்தைக்கு' என்பது நார சப்தார்த்தமான - கைங்கர்யத்தைப் பெற்று உகக்கை என்ற சேஷித்வகுணத்திற்கு இருப்பிடமான பெருமானுக்கு என்னும் பொருள் பட்டு 'நாராயணாய' என்பதனையும், 'அடிமை செய்ய வேண்டும்' என்பது நாராயணாய என்பதில் இறுதியிலுள்ளதாய் கைங்கர்ய ப்ரார்த்தனையைக் குறிக்கிற 'ஆய' என்கிற நான்காம் வேற்றுமையையும், அடிமையிலே 'வழுவிலா' என்ற அடைமொழியானது தன்னுடைய உகப்புக்காகச் செய்தலாகிய குற்றமற்று எம்பெருமானுடைய உகப்புக்காகவே செய்யப் படுகின்ற அடிமையைத் தெரிவித்து, என்னுடைய உகப்புக்காக அல்ல நான் செய்யும் தொண்டு என்னும் பொருள்தரும் 'நம:' என்பதனையும், 'ஒழிவில் காலமெல்லாமுடனாய்மன்னி' என்பது - ஆய என்பதனால் குறிக்கப் பெற்ற கைங்கர்யம் - எம்பெருமானுக்கு எல்லாக் கால தேச நிலைகளிலும் செய்ய வேண்டுமென்பதனையும் விவரித்துள்ளமை காணத்தக்கது. ஆக நம்மாழ்வார் - திருவேங்கடமுடையானிடத்திலே கைங்கர்யத்தை செய்ய வேண்டுமென்று பாரித்தமை ஒழிவில் காலம் என்ற திருவாய்மொழியில் என்றதாயிற்று.

இனி 'உலகமுண்ட பெருவாயா உலப்பில் கீர்த்தியம்மானே' என்று தொடங்கும் பதிகத்திலுள்ளதான,

அகலகில்லேனிறையுமென்று
    அலர்மேல் மங்கையுறை மார்பா
நிகரில் புகழாய் உலகமூன்றுடையாய்
    என்னையாள்வானே
நிகரிலமரர் முனிக்கணங்கள் விரும்பும்
    திருவேங்கடத்தானே
புகலொன்றில்லா அடியேன்
    உன்னடிக் கீழமர்ந்து புகுந்தேனே.

என்று பாசுரம் பூர்வ வாக்யத்தின் விவரணமாயுள்ளமை காட்டப்படுகிறது. 'நான் உன்னைவிட்டு ஒரு க்ஷணமும் பிரிந்திருக்க வல்லேனல்லேன்' என்று சொல்லிக் கொண்டே பெரிய பிராட்டியார் நித்யவாஸம் செய்யும் திருமார்பைப் படைத்தவனே, ஒப்பற்ற குற்றங்களைக் குணமாக எண்ணுகை யென்னும் - வாத்ஸல்யமாகிற புகழை (=புகழப்படும் குணத்தை) யுடையவனே! உலகம் மூன்றுக்கும் ஸ்வாமியே! மிகத்தாழ்ந்த என்னோடும் கலந்து பழகும் ஸௌசீல்யத்தைக் காட்டி என்னையாட் கொள்ளுமவனே! ஈடில்லாதவர்களாய், கைங்கர்யம் செய்யும் சக்தியுடைய அமரர்களென்ன, எம்பெருமானை மனனம் செய்யும் (=தியானம் செய்யும்) ஞானம் பெற்ற முனிவர் கூட்டங்களென்ன ஆகிய இரு திறத்தாரான நித்யஸூரிகளாலும் விரும்பப்பட்ட திருவேங்கடத்தில் எல்லோர் கண்ணுக்கும் புலப்படுதலாகிய ஸௌலப்யமுள்ள பெருமானே! புகுதற்கு - உன்னைக்கிட்டுகைக்கு உன்னைத் தவிர வேறு புகலென்ன, உன்னைத்தவிர வேறு புகுதற்கு இலக்காகிற ரக்ஷகரென்னும் புகலென்ன, இவற்றில் ஒன்றுமில்லாத - உன்னடியவனான நான் ஸித்தோபாயமான உன்னுடைய திருவடிகளின் கீழேயே அமர்ந்து வேறொரு பயனை உன்னிடம் பெற்றுக் கொண்டு அகன்று போகாமல் உன்னிடமே நிலைத்துப் புகுந்தேன் - புகுந்து விட்டேன் - என்பது இதன் கருத்தாகும். இங்கு - பிராட்டியோடு நித்ய ஸம்பந்தமுள்ளவனென்னும்

பொருள் கொண்டதாய் பூர்வவாக்யத்தின் முதலிலுள்ள ஸ்ரீமத் பதத்திற்கு இப்பாசுரத்தின் முதலடி விவரணமாதலையும், இரண்டாமடியும், மூன்றாமடியும், நான்காமடியும் - நம்முடைய குற்றங்களை நினைத்து பகவானை ஆச்ரயிக்க அஞ்சும் நமக்கு அவ்வச்சத்தைப் போக்குகிற நம்முடைய குற்றங்களைக் குணமாக நினைத்தலென்னும் வாத்ஸல்யத்தையும், 'அவன் யாரோ நாம் யாரோ, நம் விருப்பத்தை அவன் நிறைவேற்றுவானோ மாட்டானோ' என்ற ஐயத்தை நீக்கி 'அவன் நிறைவேற்றுவது நிச்சிதமென்று' துணிவதற்குக் காரணமாகிய - நம்மைக் குறித்து அவனுக்கு உள்ள ஸ்வாமித்வமென்னும் ஸம்பந்தத்தையும், அவன் 'ஸ்வாமியாக இருந்தாலும் மிகவுயர்ந்த தேவர் முதலியோர்க்கல்லவா அவன் உதவுவது, நம்மைப் போன்ற தாழ்ந்தவர்க்கு உதவ மாட்டான்' என்று அவனை யாச்ரயியாமல் அகன்று போவதைத் தடுத்து ஆச்ரயிக்கும் படி தூண்டுமதான - அவன் மிகமிகத் தாழ்ந்தாரோடுந் தன் மேன்மையைப் பாராமல் கலந்து பழகும் ஸௌசீல்யத்தையும், 'அவனோ பரமபதத்தில் கண்ணுக்கு இலக்காகாமல் இருக்கிறான்; நாம் அவனை எப்படி ஆச்ரயிப்பது' என்னும் மனக்குறையைப் போக்கி ஆச்ரயிக்கச் செய்வதான - அவன் திருவேங்கடமலையில் நம் கண்ணுக்கு இலக்காய் எளியனாய் இருக்கும் ஸௌலப்யத்தையும், ஜ்ஞானமும் சக்தியுமுடைய நித்யஸூரிகள் ஸேவிக்கின்றமை கூறப்பட்டதனால், அந்த திருவேங்கடத்தானிடத்தில் ஸித்திக்கிற ஜ்ஞானத்தையும் சக்தியையும், பிராட்டியின் ஸம்பந்தம் முதலடியில் கூறப்பட்டதனால் அவனால், குறையேதுமின்றி விரும்பப்படுகிற பொருள்களனைத்தும் அவனிடம் நிறைவுற்றிருக்கையாகிற பூர்த்தியையும், உன்னடிக்கீழ் என்பதில் 'உன்' என்பதற்கு ப்ராப்தனான - சேஷியான என்று பொருளாகையால் ப்ராப்தி என்கிற சேஷித்வத்தையும் காட்டி - இக் குணங்களாகிய நாரங்களுக்கு இருப்பிடமானவன் என்று பொருள் படுகிற நாராயண சப்தத்திற்கு விவரணமாதலையும்

'அடிக்கீழ்' என்பது, 'சரணௌ' என்றதன் விவரணமாதலையும், 'அமர்ந்து புகுந்தேன்' என்பது 'சரணம் ப்ரபத்யே' என்பதன் விவரணமாதலையும் நோக்குவார்க்கு, இப்பாசுரம் பூர்வ வாக்யத்தின் விவரணமென்பது போதரும். இப்பாட்டில் முதலில் கூறப்பட்ட வாத்ஸல்யம் முதலிய நான்கு குணங்களும் பகவானை ஆச்ரயித்தலென்பது எளியதுதான், அரியதல்ல என்பதைத் தெரிவிப்பன. அடுத்துக் கூறப்பட்ட ஜ்ஞாநம் முதலான நான்கு குணங்களும், பகவான் நம்முடைய விருப்பத்தை நிறைவேற்றத் தக்க யோக்யதை உடையவன் என்பதைத் தெரிவிப்பன. இவை முறையே ஆச்ரயண ஸௌகர்யாபாதகங்கள் என்றும் ஆச்ரித கார்யாபாதகங்கள் என்றும் வழங்கப்படுகின்றன.

இதுகாறும் கூறியவற்றால் மந்த்ர ரத்னம் நம்மாழ்வாரால் திருவேங்கடமுடையானை உள்ளீடாகக் கொண்டு திருவாய்மொழியின் மூலமாக விவரிக்கப்பட்டதென்றும், திருவேங்கடமுடையான் விஷயமான திருவாய்மொழியில் ஸங்க்ரஹமாகையால், மாறனடி பணிந்துய்ந்த இராமாநுச முனிவரும், அந்த யதீந்த்ரரிடம் பரமபக்தராய் அவரது அபராவதாரமான மணவாளமாமுனிகளும் த்வயத்தையே ஸதா அநுஸந்தித்துப் போது போக்கியருளினார்களென்றும் நிரூபிக்கப்பட்டதாயிற்று.

**திலதமுலகுக்காம் திருவேங்கடத்தான்**<br>
**அலகில் புகழாயிரவந்தாதி - உலகில்**<br>
**உரைத்தான் சடகோபன், உத்தமர்கள் நெஞ்சில்**<br>
**விரித்தான் பெரும்பூதூர் வேந்து**

என்று பிள்ளைலோகாசார்ய ஜீயர் ஸ்வாமி பணித்தருளிய வெண்பாவினால் - முற் கூறிய த்வயத்தின் விவரணமான திருவாய்மொழி எண்ணற்ற புகழையுடைய திருவேங்கடமுடையான் விஷயமான திவ்யப்ரபந்தமென்பது ஸ்பஷ்டமாகின்றமை காண்க.

# [9]

# திருப்பாவையும் அர்ச்சாவதாரமும்

ஆண்டாள் அருளிச் செய்த நாச்சியார் திருமொழியில் திருவரங்கம், திருவேங்கடம், திருமாலிருஞ்சோலை முதலிய திருப்பதிகளில் கோயில் கொண்டிருக்கிற அர்ச்சாவதார மூர்த்திகள் மங்களாசாஸனம் செய்யப் பெற்றமை அறியப் பெறுவதன்றி, அவளே அருளிய திருப்பாவையில் அங்ஙனம் அம் மூர்த்திகள் மங்களாஸாஸனம் செய்யப் பெற்றமை விளக்கமாக அறியப் பெறவில்லை. ஆயினும் அர்ச்சாவதார ப்ரஸ்தாவம் இருப்பதனை, பெரியவாச்சான் பிள்ளை தொடக்கமான உரையாசிரியர் பெருமக்கள் அனைவரும் 'புள்ளுஞ் சிலம்பினகாண்' என்ற பாசுரத்தில் காட்டி அருளியிருக்கிறார்கள்:-

'புள்ளரையன் கோயில் வெள்ளை விளிசங்கின் பேரரவங்கேட்டிலையோ' என்ற பகுதிக்கு வ்யாக்யானமிடும் போது - புள்ளரையன் - பக்ஷிராஜனான கருடாழ்வான், அவனுக்குக் கோ அரசன் - ஸர்வேச்வரன், அவனுடைய இல் - ஆலயம், அதில் திருப்பள்ளியெழுச்சிக் காலத்தில் ஊதும் சங்கின் பேரொலியைக் கேட்டிலையோ என்பதாக.

இங்கு - கண்ணன் திருவவதாரஞ் செய்து திருவாய்ப்பாடியில் அனைவரும் அவனழகில் ஈடுபட்டுச் செல்லுகிற காலத்தில் க்ருஷ்ணன் தொழும் கோயில் என்று கொண்டாடுகைக்கு ஒரு கோயில் உண்டோ என்று கேள்விபெற, இராமபிரான் திருவவதாரம் பண்ணித் திருவயோத்யையில் உள்ள சிறுகுழந்தைகளுமகப்பட அப்பெருமானழகில் ஈடுபட்டுச் செல்லுங்கால், 'ஸஹ பத்ந்யா விசாலாக்ஷ்யா நாராயணம் உபாகமத்' (ரா-அயோ-6-1) (* தடங்கண்ணியான தன் மனைவி சீதையுடன் பெரிய பெருமாளை உபாஸித்தான்) என்று கூறியபடி இராமபிரான் பெரிய பெருமாளை ஆச்ரயித்தது போல்

க்ருஷ்ணன் கும்பிடுவதற்குத் திருவாய்ப் பாடியிலும் ஒரு கோவிலும் ஒரு மூர்த்தியும் உண்டு என்று விடையளித்து, திருப்பாவையில் அர்ச்சாவதார ப்ரஸ்தாவமுள்ளமையை உரையாசிரியர் எல்லோரும் ஏக கண்டமாகக் கூறி யருளியுள்ளனர். நிற்க.

முற்கூறிய அதே சந்தையிலுள்ள 'கோயில்' என்ற சொல்லால், கோயில் என்றே ப்ரஸித்தமான திருவரங்கத்தில் எழுந்தருளியுள்ளவனாய், இவள் தமப்பனாரால் 'கோயிற் பிள்ளாய்' என்று அழைக்கப்படுகின்ற அழகியமணவாளனையும், 'வெள்ளைவிளிசங்கு' என்ற சொல்லால், 'வெள்ளை விளி சங்கிடங்கையில்கொண்ட விமலன் ..................வேங்கடவன்' என்று இவள் தானே நாச்சியார் திருமொழியில் அருளியபடி திருவேங்கடமுடையானையும், ஆண்டாள் குறித்தருளுகிறாள் என்று கொள்ளுதல் மிகப் பொருந்துமென்று தோன்றுகிறது. அதாவது திருப்பாவைக்கு நோக்கம் இவ்விரண்டு திவ்யதேசத்தெம்பெருமான்களிடத்திலேயே என்றபடி. இக்கருத்துக்குச் சான்றாக அரங்கனையும் வேங்கடவனையுமே குறிப்பிட்டுத் திருப்பாவைக்கு இரண்டு தனியன்கள் அவதரித்துள்ளமையைக் கூறுதல் தகும். அவற்றுள் 'அன்னவயற்புதுவை' என்ற முதல்தனியனில் உள்ள 'அரங்கற்குத் திருப்பாவைபாடிக்கொடுத்தாள்' என்றதற்குத்திருப்பாவையில் அதச்சான்று இல்லையே என்பார்க்கு, உய்யக்கொண்டார் விடையளிப்பார் போன்று 'அரங்கற்குப் பன்னு திருப்பாவை' என்று அருளியிருக்கும் அழகு அகங்குழையத் தக்கதாகும். பன்னுதல் ஆராய்தலாய், மேலெழத் தோன்றாவிடினும், ஆராய்ந்தால் அரங்கற்கென்று அறியப்படும் திருப்பாவை என்றபடி. இரண்டாவது தனியனில் உள்ள 'வேங்கடவற்கு என்னை விதி' என்ற சொற்றொடர் நாச்சியார் திருமொழியின் தனியனே யாமென்று தோன்றுமாயினும், தொன்று தொட்டுத்

திருப்பாவைத் தனியனாகவே அநுஸந்திக்கப் பெற்றும் பிள்ளைலோகார்யஜீயரால் அப்படியே வ்யாக்யானம் செய்யப் பெற்றும் உள்ளதனால் இத்தனியன் திருப்பாவையினுடையதே என்று கூறத்தடையில்லை. "கீழ் 'அரங்கற்கு' என்றது; இதில் 'வேங்கடவற்கு' என்றது. கோயில் திருமலைகளிலேயாய்த்து கோதை சூ(ட)டிக் கொண்டிருப்பது" என்று அந்த ஜீயர் ஸ்வாமியின் வ்யாக்யான ஸ்ரீஸூக்தி இங்கு நினைக்கத்தக்கது.

இனி முதல் முடிவுகள் அப்யாஸம் என்னும் இரண்டு ப்ரமாணங்களைக் கொண்டு, திருப்பாவை அழகியமணவாளன் திருவேங்கடமுடையான் ஆகிய எம்பெருமான்கள் இருவரையும் பற்றியே அவதரித்தது என்னும் விஷயம் சிறிது விமர்சிக்கப்படும். 'நாராயணனே நமக்கே பறை தருவான்' என்று முதற் பாசுரத்தில் ஆண்டாள் நாராயண சப்தத்தால் அழகிய மணவாளனையும், திருவேங்கடமுடையானையும் குறிப்பிடுகின்றாள் என்று கூறலாம். 'ஸஹபத்ந்யா விசாலாக்ஷ்யா நாராயணம் உபாகமத்' என்ற ஸ்ரீராமாயணச்லோக வ்யாக்யானத்தில் "இங்கு நாராயண சப்தத்தினால் ஸ்ரீரங்கநாயகன் குறிக்கப்படுகிறார் - மேல் யுத்தகாண்ட முடிவில் பட்டாபிஷேக சமயத்தில் 'லப்த்வா குலதநம் ராஜா லங்காம் ப்ராயாத் விபீஷண:' என்று அப்பெருமானையே விபீஷணாழ்வானுக்கு தானம் செய்தமை கூறப்படுவதனால்" என்று கோவிந்தராஜர் குறிப்பிடுவதும், 'நலந்திகழ் நாரணனடிக் கீழ் நண்ணுவாரே' என்ற பெருமாள் திருமொழிப் பாசுரத்தின் (1-11) வ்யாக்யானத்தில் 'பெரிய பெருமாள் திருவடிகளின் கீழே கிட்டப் பெறுவர்கள்' என்று பெரியவாச்சான்பிள்ளை குறிப்பிடுவதும் இதற்கு ப்ரமாணங்களாகும். நாராயண பதத்திற்குக் கூறப்படுகிற இரண்டு ஸமாஸங்களில் 'நாராணாம் அயநம் ய: ஸ: நாராயண:' என்ற தத்புருஷனை முக்கியமாகக் கொண்டு 'வன்பெருவானகமுய்ய' என்ற பெருமாள் திருமொழிப்

(1-10)பாசுரத்தின்படியே- ஆத்மாக்களுக்கு உபாயமும் உபேயமுமாகிய அழகியமணவாளன் விளங்குகின்றமையால் நாராயண சப்தம் அழகியமணவாளனிடம் நன்கு அந்வயிக்குமென்று கொள்ளக் குறையில்லை. இனி, 'நாரா: அயநம் யஸ்ய ஸ: நாராயண:' என்ற பஹுவ்ரீஹி ஸமாஸத்தை ப்ரதானமாக வைத்து, 'தாய் தந்தை உயிராகின்றாய்'(திருவாய் 2-6-10) என்றும், 'கண்ணாய் ஏழுலகுக்கு உயிராய' (பெரிய திருமொழி 1-9-10) என்றும் கூறியருளியபடி உயிராக - எல்லார்க்கும் அந்தர்யாமியாகத் திருவேங்கடமுடையான் வாத்ஸல்ய குணத்தோடு கூடி விளங்குகின்றபடியினால் அந்தர்யாமியைக் கூறுகின்ற நாராயண பதம் திருவேங்கடவனிடம் மிகப் பொருந்துமென்று கூறத் தடையில்லை.

'இற்றைப் பறை கொள்வான் அன்று காண்கோவிந்தா' என்ற கடைசிப் பாசுரத்திலுள்ள கோவிந்த சப்தத்திற்குப் பல பொருள்கள் உள்ளனவாயினும் ஸ்ரீஸூக்திகளைப் பெற்றவன் என்ற பொருள் ஸ்ரீஸஹஸ்ரநாமத்தில் 'கோவிந்தோ கோவிதாம் பதி:' என்றவிடத்தில் ப்ரஸித்தமாயிருப்பதனால் அப்பொருளையே முக்கியமாகக் கருதி, 'முகில் வண்ணனடி மேல் சொன்ன சொல் மாலை' என்கிறபடியே நம்மாழ்வார் ஸ்ரீஸூக்திகளைப் பெற்ற அழகிய மணவாளனை கோவிந்த சப்தம் குறிக்கின்றதென்று கூறுதல் பொருந்தும். திருவாய்மொழியின் ப்ரமேயம் அழகியமணவாளன் புகழ் என்பது "வான் திகழுஞ் சோலைமதிளரங்கர் வண்புகழ்மேல், ஆன்ற தமிழ் மறைகளாயிரமும் - ஈன்ற முதல் தாய் சடகோபன் மொய்ம்பால் வளர்த்த இதத்தாயிராமாநுசன்' என்னும் பட்டர் அருளிய தனியனால் விளங்குகின்றதன்றோ? அதுபோலவே திருவேங்கடமுடையானையும் கோவிந்தத சப்தம் குறிப்பிடும் - அப்பெருமான்தானும் திருவாய்மொழிக்கு விஷயமாகையால், திருவாய்மொழி த்வய மந்த்ரத்தின் விவரணரூபமென்பது

ஈடுவ்யாக்யானம் இரண்டாம் ச்ரியபதி அவதாரிகையில் அருளிச் செய்யப்பட்டிருப்பதனாலும், அதன் பூர்வ கண்டார்த்தமான உபாயப்ரார்த்தனையையும், உத்தர கண்டார்த்தமான உபேய (கைங்கர்ய) ப்ரார்த்தனையையும் முறையே உலகமுண்ட பெருவாயா, ஒழிவில் காலமெல்லாம் இரண்டு பதிகங்களால் திருவேங்கடமுடையான் திறத்திலேயே செய்தருளியுள்ளமை யாலும் திருவாய்மொழிக்கு விஷயபூதன் திருவேங்கடத்தான் அன்றோ? இது கொண்டே பிள்ளைலோகார்ய ஜீயர் திருவாய் மொழித் தனியன் வ்யாக்யானத்தின் முடிவில் "இலகும் உலகுக்கா திருவேங்கடத்தான், அலகில் புகழ் ஆயிரவந்தாதி உலகில் உரைத்தான் சடகோபன் உத்தமர்கள் நெஞ்சில் விரித்தான் பெரும்பூதூர் வேந்து" என்றொரு பாசுரம் அருளி யுள்ளார் என்பது உணரப்படுகின்றது. ஆக, திருப்பாவையின் முதலும் முடிவும் நோக்கினால் அது கோயில் திருமலை எம்பெருமான்களையே விஷயமாகக் கொண்டதென்பது அறியப்படுகின்றதென்று விண்ணப்பிக்கப்பட்டது. இனி அப்யாஸங்கொண்டு அது அறியப்படுமாறு இங்ஙனே காண்க.

ஒரு விஷயத்தையே அடுத்தடுத்துப் பல முறை ப்ரஸ்தாவிப்பதே அப்யாஸம் எனப்படும். திருப்பாவையில் நீராடுதல் என்பது - நீராடப்போதுவீர், நம்பாவைக்குச் சாற்றி நீராடினால், நாங்களும் மார்கழி நீராட மகிழ்ந்து, குள்ளக்குளிரக் குடைந்து நீராடாதே பள்ளிக்கிடத்தியோ, தந்துன் மணாளனை இப்போதே எம்மை நீராட்டு, மார்கழி நீராடுவான் மேலையார் செய்வனகள் என்று பலமுறை ப்ரஸ்தாவிக்கப்பட்டுள்ளது. இங்ஙனம் பலதடவை கூறப்பட்ட இந்நீராட்டமே இந்நூலுக்கு உயிரானதென்பது அப்யாஸமென்ற ப்ரமாணத்தினால் அறுதியிடலாகிறது. கண்ணனுடைய பிரிவினால் ஆய்ச்சிகளுக்கு நேர்ந்த தாபமானது வெறும் குளிர்ந்த மடுவில் நீராடினால் தணியாததாகையால் அந்நீராட்டம் ஒரு குளத்தில்

நடைபெற்றதாகத் திருப்பாவையில் கூறப்படவில்லை போலும். பின்னையோவெனில், ஆய்ச்சியர் அனைவரும் கூடி நந்தகோபர் திருமாளிகைக்குச் சென்று, நப்பின்னையுடன் துயிலமர்ந்த கண்ணபிரானைத் துயிலுணர்த்தி அவனையும் அவனது நடையழகையும் ஸேவித்து மங்களா சாஸனம் செய்து 'உன்றன்னோடு உற்றோமேயாவோம் உனக்கே நாம் ஆட்செய்வோம்' என்று வேண்டிக் கொண்டு வேண்டியபடியே பயனைப் பெற்றார்கள் என்பதே கூறப்பட்டுள்ளது. இப்படிப்பட்ட பகவதனுபவமே இந்நூலில் நீராட்டமாகச் சொல்லப்படுகின்றதென்று ஸர்வஜ்ஞ ஸார்வ பௌமர்களான ஆசார்யர்கள் அறுதியிட்டு வைத்தனர். 'நீராட - இத்தால் இவர்கள் நினைக்கிறது க்ருஷ்ண ஸம்ச்லேஷம். தமிழரும் கலவியைச் சுனையாடல் என்றார்கள். 'ஏஷ ப்ரஹ்ம ப்ரவிஷ்டோஸ்மி க்ரீஷ்மே சீதமிவ ஹ்ரதம்' (பாரதம்-மோக்ஷ-4-50) என்று க்ரீஷ்மகாலத்தில் குளிர்ந்த மடுவை (மடுவில் நீராடுவதை) த்ருஷ்டாந்தமாகச் சொல்லிற்றிறே' என்று பெரியவாச்சான் பிள்ளையின் ஸ்ரீஸூக்தி ஸேவிக்கத் தக்கது. இதில் க்ருஷ்ண ஸம்ச்லேஷமாவது முற் கூறியபடி கண்ணபிரானை அனுபவிப்பதேயாகும். க்ராம்யமான கலவியல்ல என்பது குறிக்கொள்ளத்தக்கது. இந்த பாரதச்லோகத்திற்கு-கோடைக்காலத்தில் வெயிலால் தவிக்கப்பட்டவன் ஒரு குளிர்ந்த மடுவில் மூழ்குவது போல், காமக்ரோதாதிகளான கோடை வெயிலால் தாபமடைந்த நான் பரப்ரஹ்மமென்கிற மடுவில் குடைந்தாடுகிறேன்- என்பது பொருள்.

இனித் திருப்பாவையில் நீராட்டமென்று மறைத்துச் சொல்லப்படும் கண்ணனோட்டைக் கலவியென்பது- அரங்கத்திலும் அன்னல் மலையிலும் மேவிய கண்ணனை அநுபவிப்பதேயாம் என்று, ஆழ்வார்களின் அருளிச் செயல்களை ஆதாரமாகக் கொண்டு மூதலிக்கப்படும்.

## அழகிய மணவாளன் மடு:

திருமங்கை மன்னன் அருளிய 'நெஞ்சுருகிக் கண்பனிப்ப' என்று தொடங்கும் திருநெடுந்தாண்டகப் பாசுரத்தில் 'அணியரங்கமாடுதுமோ தோழீ என்னும்' என்று தலைவியின் கூற்றைத் திருத்தாயார் அநுவதித்துக் கூறும் சந்தைக்கு, பெரியவாச்சான்பிள்ளை 'அணியரங்கமித்யாதி - தோழீ, நாம் கோயிலிலே போய்ப் பெரிய பெருமாளை அநுபவிக்க வல்லோமோ என்கிறாள். 'ஏஷ ப்ரஹ்ம ப்ரவிஷ்டோஸ்மி க்ரீஷ்மே சீதமிவ ஹ்ரதம்' என்று ஈச்வரனைத் தடாகமாகச் சொல்லக் கடவதிறே' என்று வ்யாக்யானம் அருளிச் செய்துள்ளார். இங்ஙனமே அந்நூலில் 'முற்றாராவனமுலையாள்' என்ற பாசுரத்திலுள்ள 'அணியரங்கமாடுதுமோ தோழீ என்னும்' என்ற பகுதிக்கும் அவர் பொருள் அருளியுள்ளார். 'பொற்றாமரைக் கயம் நீராடப் போனாள்' என்ற அப்பாட்டின் ஈற்றடிக்கு 'பொற்றாமரைக் கயமென்று பெரிய பெருமாளைச் சொல்லுகிறாள்' என்று விவரணம் காட்டியுள்ளார் அவர்.

## திருவேங்கடமுடையான் மடு:

ஆறங்கம் கூற அவதரித்த ஆலிநாடனுக்கு வழி காட்டும் வகையில் நற்றமிழ் நால் வேதங்கண்ட நம்மாழ்வார் அருளிய 'உறுகின்ற கன்மங்கள்' என்று தொடங்கும் திருவிருத்தப் பாசுரத்தில் உள்ள 'தொல்லை வேங்கடமாட்டவும் சூழ்கின்றிலர்' என்று- தாய்மார் செவிப்படுமாறு பராங்குச நாயகியைப் பற்றித் தோழி கூறிய வார்த்தைக்கு - இத்தலைவியை, திருவேங்கட மலைக்கு அழைத்துச் சென்று திருவேங்கடமுடையானை இவள் அநுபவிக்கும்படி செய்ய இத்தாய்மார் நினைக்கவும் செய்கின்றார்களில்லை என்ற பொருளைத் திருவுள்ளம் பற்றி 'தொல்லையித்யாதி' - இக்குடிக்குப் பழையதாகச் செய்து போரும் பரிஹாரத்தையும் செய்கின்றிலர்கள். 'ஏஷ ப்ரஹ்ம

ப்ரவிஷ்டேஸ்மி போலே' என்று நம்பிள்ளையும் பெரியவாச்சான் பிள்ளையும் வ்யாக்யானம் அருளியுள்ளனர்.

இவ்வாறு 'அணியரங்க மாடுதுமோ' 'தொல்லை வேங்கடமாட்டவும் சூழ்கின்றிலர்' என்னுமிடங்களில் வ்யாக்யானசக்ரவர்த்திகள் 'ஏஷ ப்ரஹ்ம ப்ரவிஷ்டோஸ்மி க்ரீஷ்மே சீதமிவ ஹ்ரதம்' என்ற பாரத சலோகத்தை விடாமல் உதாஹரித்து - நீராட்டமாவது - அழகிய மணவாளனையும் அணிவேங்கடவனையும் அநுபவிப்பதேயன்றிக் குளத்தில் மூழ்குவதன்று - என்னும் ஆழ்வார்களின் திருவுள்ளத்தை வெளியிட்டருளினமையை நோக்கினால், ஆண்டாளும், மற்ற எம்பெருமான்கள் போல் அல்லாமல் கோயில் திருமலை யெம்பெருமான்களிடம் தனக்குள்ள உரிமையின் உறைப்பை 'என்னரங்கத்தின்னமுதர்' என்றும் ' என்வேங்கடவன் வரக்கூவாய்' என்றும் நாச்சியார் திருமொழியில் அருளியதற்கு ஏற்ப, அவ்விருவரோடு கூடியிருந்து குளிர்ந்திருக்கவேயே' நீராடப் போதுவீர்' முதலிய முற்காட்டிய சந்தைகளினால் மறைத்துக் கூறி, அவ்விருவரையே விஷயமாகக் கொண்டு இத் திருப்பாவையை அருளிச் செய்திருக்கலாம் என்று தோன்றுகிறது.

இதற்கு ப்ரமாணம் - திருப்பாவையின் தனியன்கள் இரண்டும் அவ்விருவரைக் குறிப்பிட்டே உய்யக்கொண்டாரால் (?) அருளிச் செய்யப்பட்டிருப்பது ஆகும். ஸூசகமோவென்றால் அர்ச்சாவதார ப்ரஸ்தாபம் உள்ளதாக ஆசார்யர்கள் குறிப்பிட்ட 'புள்ளரையன் கோயில் வெள்ளை விளிசங்கின் பேரரவம் கேட்டிலையோ' என்ற சந்தையிலுள்ள - ' கோயில்' 'வெள்ளைவிளிசங்கு' என்னும் சப்தத்வயமே ஆகலாம்.

ஆக, உபக்ரம உபஸம்ஹாரங்கள், அப்யாஸம் என்ற காரணங்களைக் கொண்டு திருப்பாவைக்கு விஷயபூதன் திருவரங்கச் செல்வனும் திருவேங்கடத்துறை செல்வனுமே என்று அநுபவிக்கப்பட்டதாயிற்று.

# [10]

# திருவரங்கனும் திருமழிசைப்பிரானும்

திருவரங்கன் - 'ஏவல்லவெந்தைக்கிடம் தலையரங்கம்' என்று பூதத்தாழ்வாரும், 'துரங்கம்வாய் கீண்டுகந்தானது தொன்மையூர் அரங்கமே' என்று திருமங்கையாழ்வாரும் அருளிச் செய்தபடியே திருமால் எழுந்தருளியுள்ள திருப்பதிகளுள்ளே தலையானதும் தொன்மையானதுமான திருவரங்கமென்னும் திருப்பதியின் கண் எழுந்தருளியுள்ள பெருமானாவர் இவர். இப்பெருமானொருவரே பதின்மர் பாடும் பெருமானாகப் பிரசித்தி பெற்றவர்.

திருமழிசைப் பிரான் - முதலாழ்வார் மூவர்க்கும் பின்பு நான்காமவராக அவதரித்தவர் இவர். கண்ணபிரான் யதுகுலத்தில் பிறந்து ஆயர் குலத்தில் வளர்ந்தது போல, முனிவர் குலத்தில் பிறந்து பிரம்பன் குலத்தில் வளர்ந்தவர் இவ்வாழ்வார். ஸ்ரீ வைஷ்ணவ சமயத்தைக் காப்பதற்காக எப்போதும் பிற மதங்களை மறுக்கவல்ல வாதங்களைச் செய்தும் அத்தகைய பிரபந்தங்களை அருளிச் செய்தும் போந்தவராகையாலே இவர் 'உறையிலிடாதவர்' (-பகைவரைத் தகர்ப்பதற்காக உருவின வாளை எப்போதும் உறையிலிடாதவர்) என்று பிரசித்தி அடைந்தவர்.

இத்தகைய பெருமையுடைய இவ்வாழ்வார்க்குப் பெரிய பெருமாளெனப்படும் திருவரங்க நாதனிடமே ஈடுபாடு அதிகமென்னும் விஷயத்தை விளக்க எழுந்தது இக்கட்டுரை.

இவ்வாழ்வார் அருளிய தொண்ணூற்றாறு பாசுரங்கள் கொண்ட நான்முகன் திருவந்ததாதிக்கும் நூற்றிருபது பாட்டுக்கள் அடங்கிய திருச்சந்த விருத்தத்திற்கும் வியாக்யான சக்ரவர்த்தியாகிய பெரிய வாச்சான் பிள்ளை அருளிய உரையின் முன்னுரையை முதலில் அனுபவிப்போம்.

பரமபதநாதனாகிய திருமால் உலகோரை உய்விக்க எண்ணி இவ்வாழ்வாரிடத்தில் இன்னருள் புரிந்து மயர்வற மதிநல மருளி ("அறியாமை ஐயம் திரிபுணர்ச்சி முதலிய குற்றம் நீங்கும்படி உண்மையறிவையும் தன்னிடம் பக்தியையும் அருள் செய்து) தன்னுடைய திவ்யாத்ம சொரூபத்தையும் திவ்ய மங்களத் திருமேனியையும் இவையிரண்டின் நற்பண்புகளையும் திருவாபரண திவ்யாயுதவர்க்கத்தையும், இவற்றையெல்லாம் காட்டி லெரிந்த நிலாவாகாமல் அனுபவிக்கிற திருமகள் முதலான தேவிமார்களையும், இவர்களைச் சேவித்தே பசி தாகம் தீரப் பெறும் நித்யசூரிகளையும் முக்தி பெற்றவர்களையும் இவர்களின் அனுபவத்தை மேன்மேலும் வளரச் செய்யும் பரமபதத்தையும், இப்பூலகின் படைப்புக் காப்பழிப்புகளைத் தான் ஒரு விளையாட்டாகக் கொண்டுள்ளபடியையும் இவருடைய அறிவுக்கு இலக்காக்கிக் காட்டினான். இவ்வாழ்வாரும் இவற்றையெல்லாம் தமது மனத்தினால் கண்டு அநுபவித்துக் கொண்டிருந்தார். பின்பு தாம் அனுபவிப்பது போல் இவ்வுலகத்தவர் அனுபவியாமல் இருப்பதற்கு என்ன காரணமென்று கண் திறந்து பார்த்தார். தாம் பரம்பொருளாகிய திருமாலிடத்து ஊன்றித் திருமாலிடம் பராமுகமாயிருப்பதை அறிந்தார். அவர்களிடம் கருணை கொண்டு, வேதம் அதற்கு முரண்படாத யுக்திகள் இவற்றைக் கொண்டு திருமாலே பரம்பொருள்; பிற தெய்வமனைத்தும் அவரப் பொருள்கள் என்பதனை நான்முகன் திருவந்தாதியின் மூலம் அவர்களுக்கு உபதேசித்தார். திருமாலை அனுபவிப்பதாகிய பயிர் விளைவதற்குத் தடையாகவுள்ள - பிற தெய்வங்களைப் பரம்பொருளாகக் கருதுகையென்னும் களையைக் களைந்தெறிந் தாரென்றபடி. (அங்ஙனம் திருமாலின் பரம்பொருள் தன்மையை நிலைநாட்டிய விஷயம் நான்முகன் திருவந்தாதியில் காண்க.)

இப்படி உபதேசித்த போதிலும் இவ்வுலகோர் தமது பாக்கியமில்லாமையினால் இவ்வுபதேசத்தைக் கேளாமலிருக்க,

இன்று திருந்தாவிடினும் என்றாவது இவர்கள் திருமாலருளால் திருந்தட்டுமென்று அவர்களை விட்டுவிட்டு, நாம் இவர்களைப் போல் அல்லாமல், 'உலகுக்குக் காரணனாய்ப் பரமபதத்திலுள்ள ஸர்வேச்வரனே நாம் அடைந்து அநுபவித்துத் தொண்டு செய்தற்கு உரியவன்' என்பதை அவனது திருவருளாலே அறியப் பெற்றோம். அவனைத் தஞ்சமடைய வேணுமென்றால் ஐந்து நிலைகளில் பரமபதம் திருப்பாற்கடல் ஆகிய இரண்டிடங்களிலுள்ள எம்பெருமான்கள் வெகு தூரத்திலுள்ளவர்களாகையாலும், அவதாரங்கள் வெகுகாலத்திற்கு முற்பட்டவையாகையாலும், அந்தர்யாமி யோகிகளுக்கன்றி மற்றையோர்க்குப் புலப்படாமையாலும், இந்நான்கு நிலைகளும் நமக்கு தஞ்சமடையத் தக்கவையல்ல. இங்ஙனம் பாக்கியமற்ற நம் போல்வாரும் இழக்க வேண்டாதபடி, அர்ச்சகர்கள் இட்ட வழக்காய் நாம் செய்யும் குற்றங்களைப் பொறுப்பவனாய் வேண்டிற்றெல்லாம் தருமவனாய் எழுந்தருளியிருக்கும் (பிம்பவடிவிலுள்ள) அர்ச்சாவதாரவெம்பெருமானே நாம் நினைத்த இவ்விடத்திலே இக்காலத்திலே நமது வெளிக் கண்களால் கண்டு பற்றத் தக்கவனென்று அர்ச்சாவதாரத்தின் எளிமையை நினைத்து வேறொரு உபாயமில்லாதவர் இவ்வர்ச்சாவதாரத்தையே தஞ்சம் பற்றுதற்குரியவர் என்றார். இங்ஙனம் தஞ்சம் பற்றுதலும் - பிரபத்தியும் - மோக்ஷோபாயமன்று. பின்னையோவென்றால், மோக்ஷம் பெறுமவனுக்கு இருக்க வேண்டியதொரு தகுதி மாத்திரமே என்றும் அர்ச்சாவதாரவெம்பெருமானுடைய கருணையே மோக்ஷமளிக்கும் உபாயமென்றும் அறுதியிட்டு அப்பெருமானையே தஞ்சமாகப் பற்றி அவன் முகங்காட்ட 'அவனையடைந்து விட்டேன் - வீடு பெற்றேன்' என்று தமக்குக் கிடைத்த பெரும் பேற்றைத் (திருச்சந்த விருத்தத்தின் வாயிலாகத்) தெரிவிக்கிறார். (இதுதான் பெரியவாச்சான் பிள்ளையருளிய முன்னுரையின் சுருக்கமாகும்.)

இவ்வாழ்வார் தமது பிரபந்தங்களில் திருவரங்கம், அன்பில், திருப்பேர்நகர், திருக்குடந்தை, கவித்தலம், திருக்கோட்டியூர், திருக்குறுங்குடி, திருப்பாடகம், திருவூரகம், திருவெஃகா, திருவெவ்வுள், திருவல்லிக்கேணி, திருவேங்கடம், துவாரகை, திருப்பாற்கடல், பரமபதம் என்ற பதினாறு திருப்பதிகளை வர்ணித்திருக்கிறார். அவற்றுள் இறுதியிலுள்ள இரண்டும் நம் கண்ணுக்கு இலக்காகாதவை. மற்ற பதினான்கில் பல திருப்பதிகட்கு ஒன்று இரண்டு என்ற வகையிலும், திருக்குடந்தைக்கு ஆறும், திருவேங்கடத்திற்குப் பதினாறுமாகப் பாசுரங்கள் காண்கின்றன.

வெஃகாவில் துயிலமர்ந்த வேந்தனிடமும் குடந்தைமேய கோவலனிடமும் இவர்க்கு பக்தி மிகவுண்டென்பதும் அதனால்தான் அவர்களில் முதல்வன் இவர்பின் சென்று 'சொன்ன வண்ணம் செய்த பெருமாள்' என்றே பிரசித்தி யடைந்தானென்பதும், பின்னவன் இவர் 'எழுந்திருந்து பேசு' என்ன எழுந்திருந்தானென்பதும், அவன் ஆழ்வார்க்கு முதலில் பிரசாதத்தை அமுது செய்வித்துத் தாம் பின்பு அமுது செய்து இப்படி தலைவன் அடிமை என்ற உறவுக்கு மாறாட்டம் உண்டானதை உலகுக்குக் காட்டுவதற்காகப் பிரானென்னும் தனது பெயரை ஆழ்வார்க்குக் கொடுத்து அவரைத் திருமழிசைப் பிரானாக்கித் தான் அவரது ஆழ்வாரென்ற பெயரைப் பெற்று ஆராவமுதாழ்வாரானானென்பதும் பிரசித்தமானவையே.

திருவேங்கடமுடையானிடம் இவர் தமக்குண்டான ஈடுபாட்டினை, 'அழைப்பன் திருவேங்கடத்தானைக் காண இழைப்பன் திருக்கூடல் கூட' (நான். 39) என்றும், 'காணலுறுகின்றேன் கல்லருவி முத்துதிர ஓணவிழவி லொலியதிரப் பேணி வருவேங்கடவா' (நான். 41) என்றும் திருமலையப்பனைச் சேவிக்கத் தமக்குள்ள ஆசையை வெளியிட்டதனாலும், 'சென்று வணங்குமினோ சேணுயர் வேங்கடத்தை' (நான். 42) 'குமரன் நிற்கும பொழில் வேங்கட

மலைக்கே போம் குமரருள்ளீர் புரிந்து' (நான். 44) 'வேங்கடமடைந்த மாலபாதமே அடைந்து நாளுமுய்ம்மினோ' (திருச். 81) என்று எல்லோரையும் திருமலைக்குச் சென்று தொழுமாறு உபதேசம் செய்ததனாலும் அறியலாகும்.

ஆயினும் இத்திருமழிசைப் பிரானுக்குத் திருவரங்கம் கோயில் கொண்ட அழகிய மணவாளன் திறத்திலுண்டான ஈடுபாட்டின் மிகுதி சொல்லுக்குள் அடங்காதது. நான்முகன் திருவந்தாதியைத் தொடங்கும் போதே 'பண்டு அரங்கம் மேயது — ஆர் அறிவார் — யான் அறிந்தவாறு' (3) என்று திருவரங்கத்தைக் குறித்துள்ளமையும், 'அவனென்னை யாளி யரங்கத்து அரங்கில் அவனென்னை எய்தாமற் காப்பான்' (30) என்று தம்மையாளும் அரங்கத்தவன் தம்மைப் பிறவியென்னும் மாமாயக் கூத்தாடப் பெறும் இவ்வுலகமாகிய நாடகவரங்கத்தில் மறுபடியும் சேரவொட்டாமல் வீடு பேற்றினைத் தந்து காப்பான் என்று அப்பெருமானிடம் தமக்குள்ள நம்பிக்கையை வெளியிட்டமையும் பிறவும் கொண்டு இஃது அறியலாகிறது.

பிற சமய மறுப்பையே முக்கிய நோக்கமாகக் கொண்டு எழுந்த நான்முகன் திருவந்தாதி ஒரு புறமிருக்கட்டும். அர்ச்சாவதாரத்தின் எளிமையைப் பேசுவதற்கென்றே இவரருளிய திருச்சந்த விருத்தத்தில் திருவரங்கனின் பெருமையை இனிக் காண்போம். மற்ற திவ்ய தேசத்தெம்பெருமான்களைப் பேசுவதற்கு முன்னமே 'அரங்கனே' (21) என்றழைப்பதும் இறுதியில் 'பொன்னி சூழரங்கம் மேய பூவைவண்ண மாயகேள்' (119) என்று அப்பெருமானை விளித்து விண்ணப்பம் செய்வதும், இடையில் பல பாசுரங்களினால் அவன் பெருமை, திருவரங்க மாநகரின் சிறப்பு முதலியவற்றை வருணிப்பதும் நோக்குவார்க்குத் திருச்சந்தவிருத்தம் தலைசிறந்த அர்ச்சாவதாரமான அரங்கனைப் பற்றியே அருளிச் செய்யப்பட்டதென்னும் உண்மை புலனாகாமற் போகாது. பல

சொல்லிப் பயனென்னை? இவ்வாழ்வார் திருவரங்க நாதனையே வீடுபேற்றிற்கு உபாயமாகப் பற்றினாரென்பதும் அவன்தன் இன்னருளாலேயே வீடு பேறெய்தினாரென்பதும் இப்பிரபந்தத்திலேயே விளக்கமாக ஆழ்வார் தம்மாலே அருளிச் செய்யப்பட்டுள்ளது.

'காரொடொத்த மேனி நங்கள் கண்ண, சேர்விடத்தை நாயினேன் தெரிந்திறைஞ்சுமா(று) சொலே' (47) - பரமபதம் பாற்கடல் முதலாக நீ இருக்குமிடங்களுக்கு எல்லையேயில்லை. அவ்விடங்களில் வந்து உன்னைத் தஞ்சம் பற்றத் தகுதியில்லாத நாயினேனுக்கு இதுதான் நாம் பற்றத்தக்கவிடமென்றறிந்து பற்றும்படி ஓரிடத்தை அருளிச் செய்யவேணுமென்று ஆழ்வார் எம்பெருமானை வேண்ட, அப்பெருமான் திருவரங்கத்தைக் காட்டினானாம் ஆழ்வாருக்கு. இவ்விஷயம், 'சேர்விடத்தை நாயினேன் தெரிந்திறைஞ்சுமா சொலே' என்ற இவர்க்கு இவிருந்த பூமியிலே சக்ஷுர் விஷயமாய் (கண்ணுக்கிலக்காய்) அவதாரங்களிலுண்டான நீர்மைகளும் இழக்க வேண்டாதபடி குணபூர்த்தியோடே கோயிலிலே கண் வளர்ந்தருளுகிற ஸம்ருத்தியைக் (எளிமைச் செல்வத்தைக்) காட்டக் கண்டநுபவிக்கிறார்" என்று 49ம் பாசுரத்திற்கு பெரியவாச்சான் பிள்ளை அருளும் முன்னுரையால் தெரியலாகும். இப்பாசுரம் தொடங்கி 55ம் பாசுரம் வரை திருவரங்கத்தின் நீர்வளம் முதலிய செல்வமும் திருவரங்கநாதனது அடியார்களைக் காக்கும் கருணை, அவர்கள் பகைவரை தீர்க்கும் திறன், எளிமை முதலியன அனுபவிக்கப்படுகின்றன.

இவ்வாறு தாம் பற்றத்தக்க இடத்தை அனுபவித்த ஆழ்வார் 'புனிதா நின்னிலங்கு பாதமற்றி மற்றோர் பற்றிலேன் எம்பீசனே' (90) என்று அரங்கன் திருவடிகளையே பற்றினார். 'அடைக்கலம் புகுந்த என்னை அஞ்சலென்ன வேண்டும்' (92) என்று அடைக்கலம் புகுதலை வீடு பெறப்போகும் தமக்கு இருக்க வேண்டிய தகுதியாக அருளிச் செய்தார். பின்பு 'அரங்கவாணனே (நின்) பாதமே விரும்பி நின்றிறைஞ்சுவேற்கு இரங்கு' (93) என்று,

பகவானுடைய கருணையொன்றே - அதாவது கருணை புரியும் பகவானே மோக்ஷத்திற்கு உபாயமென்றார்.

'பொன்னிசூழரங்கம் மேயபூவைவண்ணமாயகேள்' (119) என்று தொடங்கி - என்னுடைய உயிரென்னும் வலியவினைத் திரட்சியில் ஆசையாகிய கொழுந்து, உனது பூவை வண்ணமுடைய திருமேனியழகினாலும் ஆச்சரியமான உனது நீர்மையினாலும் பிறந்து, உனது தாமரை மலர் போன்ற திருவடிகளை விட்டுப் பிரியாது நின்றது என்று அவன் திருவடிகளில் தமக்குப் பிறந்த பேரவாவினை அவனிடமே விண்ணப்பம் செய்தார்.

முடிவில் 'இயக்கறாத' (120) என்று தொடங்கும் இறுதிப் பாசுரத்தில் - நான் இங்ஙனம் அவனைத் தஞ்சமாகப் பற்றியதும் சுதந்திரனாக அன்று; மேக வண்ணனாகிய திருவரங்கன் இடைவிடாத பல பிறப்புக்களினின்றும் என்னை விடுவிக்க நினைத்து இன்று ஒரு காரணமுமின்றி நானிருந்த இடத்திற்குத் தானே வந்து கெட்டி, உயிராகிய தன்னிடத்திலே உடலாக நிலைத்திருக்கிற எனது உள்ளத்தில் தனது திவ்ய திருமேனியைப் பிரிக்கமுடியாதபடி வைத்து என்னோடு கலந்துபற்றச் செய்யவே நான் அவனுக்குப் பரதந்திரனாக அவனருளாலேயே அவனைப் பற்றினேன். ஆதலால் என்னுடைய உயிர் - அறியாமையும் தீவினையும் பிறப்புமாயே இயங்கிச் செல்கின்ற ஸம்ஸார வாழ்க்கையை அறுத்து இடையறாத ஆனந்தமயமான கைங்கர்யமென்னும் வீடுபேற்றினை அடைந்துவிட்டது என்று தாம் பெற்ற பேற்றை அருளிச் செய்து தலைக்கட்டியருளினார்.

இங்ஙனம் இவ்வாழ்வார் தஞ்சமாகப் பற்றியதும் திருவரங்கனையே. மோக்ஷமடைந்ததும் அப்பெருமானது இன்னருளாலேயே என்னும் மிக முக்கியமான விஷயம் அறியப்படுதலால் இவர்க்குத் திருவரங்கனிடம் உண்டான ஈடுபாடு ஈடும் எடுப்பும் இல்லாததென்பது அசைக்க முடியாததோர் உண்மையாகும்.

# [11]

# பேருளாளனும் கூரத்தாழ்வானும்

## (வரதராஜஸ்தவத்தில் ஓர் அநுபவம்)

நம்முடைய ஸ்ரீ வைஷ்ணவஸம்ப்ரதாயத்தில் த்வய மந்த்ரத்திற்கு மிகவும் ஏற்றம் கருதப்பட்டிருக்கிறது. ப்ரபந்நஜன கூடஸ்தரான நம்மாழ்வார் தமது திவ்யப்ரபந்தங்களில் ச்ரேஷ்டமான திருவாய்மொழியால் த்வயமந்த்ரத்தையே விவரித்தருளினார். 'நம்மாழ்வார் திருவாய்மொழி ப்ரபந்தத்தாலே த்வயவிவரணம் பண்ணுகிறார்' என்னும் ஈடு இரண்டாம் ச்ரியபதி (அவதாரிகா) ஸ்ரீஸூக்தியும், பிள்ளைலோகாசார்யர் அருளிய ஸாரஸங்க்ரஹ ரஹஸ்யமும் இதற்கு ப்ரமாணங்களாக நினைத்தற்குரியனவாம்.

அந்த நம்மாழ்வாரையே எல்லாவுறவு முறையாகக் கொண்டு 'மாதா பிதா யுவதய:' என்ற ச்லோகத்தை அருளிச் செய்த ஆளவந்தாரும் தமது ஸ்தோத்ர ரத்னத்தை த்வய விவரணரூபமாகவே அருளிச் செய்தார். இதற்கு 'இப்படி ப்ராப்ய ப்ராபகங்களை நிஷ்கர்ஷித்து இவற்றை ஸ்தோத்ரரூபத்தாலே ஸர்வேச்வரனை நோக்கி ப்ரார்த்திக்கிறார்' என்ற பெரியவாச்சான்பிள்ளையின் வ்யாக்யாந அவதாரிகா ஸ்ரீஸூக்தியும், 'யாமுநாசார்ய: த்ரய்யந்தரஹஸ்யபூகும் த்வயார்த்தகர்ப்பம் ஸ்தோத்ரம் சிகீர்ஷு:' (ஆளவந்தார் வேதாந்த ரஹஸ்யமாய் த்வயமந்திரார்த்தத்தைத் தன்னுள்ளே அடக்கிக் கொண்ட ஸ்தோத்ரத்தை அருளிச் செய்ய விரும்பியவராய்) என்ற வேதாந்த தேசிகரின் ஸ்தோத்ரபாஷ்ய நிகமந ஸ்ரீஸூக்தியும் அத்தாட்சியாக அநுஸந்திக்கத் தக்கனவாம்.

அவ்வாளவந்தாருடைய திருவடிகளை த்யாநம் செய்தே தாம் ஸத்தை பெற்றதாக 'யத்பதாம்போருஹ' என்ற தனியனை அருளிச் செய்த எம்பெருமானார் தாமும் கத்யத்ரயத்தை த்வயத்தின் விவரணமாகவே நம்பெருமாளெதிரில் விண்ணப்பம் செய்தருளினார். இதற்கு 'உபாயோபேயபரம் த்வயம் விசதீகரியதே' (உபாயமான

எம்பெருமானையும் உபேயமான கைங்கர்யத்தையும் கூறும் த்வயம் விசதமாக்கப்படுகிறது) என்ற சுருதப்ரகாசிகாவதாரிகா ஸ்ரீஸூக்தியும், 'இது தான் த்வயத்துக்கு வ்யாக்யாநமாயிருக்கிறது' என்ற பெரியவாச்சான்பிள்ளையின் முதல் சூர்ணை வ்யாக்யாநாவதாரிகா ஸ்ரீஸூக்தியும், 'அத: க்ருத்ஸ்நமிதம் கத்யம் த்வய விவரணமிதி ஸாதியாந் ஸம்ப்ரதாய:' (ஆகையால் இந்த கத்யம் முழுவதும் த்வயமந்த்ரத்தின் விவரணரூபமென்பது மிக நல்லதோர் ஸம்ப்ரதாயம்) என்று வேதாந்ததேசிகர் அருளிய கத்யபாஷ்யத்தின் அவதாரிகா ஸ்ரீஸூக்தியும் சான்றாகக் கொள்ளத் தக்கனவாகும்.

ப்ரபத்திக்கு அபேக்ஷிதங்களான ஸௌலப்யாதிகள் இருட்டறையில் விளக்குப் போலே ப்ரகாசிக்குமிடங்களான அர்ச்சாவதாரவெம்பெருமான்களே ப்ரபத்தி மந்த்ரமாகிய த்வயத்திற்கு ப்ரதிபாத்ய தேவதைகள் என்று கொண்டனர் நம் பெரியோர்.

நம்மாழ்வார் த்வயார்த்தமான ப்ரபத்தியையும் கைங்கர்ய ப்ரார்த்தனையையும் முறையே உலகமுண்ட, ஒழிவில் காலம் ஆகிய திருவாய்மொழிகளால் திருவேங்கடமுடையான் திறத்தில் அருளிச் செய்து அப்பெருமானை த்வயப்ரதிபாத்யராகக் காட்டியருளினர்.

ஆளவந்தார் தமது ஸ்தோத்ர ரத்நத்தைப் பரமபதநாதன் விஷயமாக அருளிச் செய்தாரென்னும் விஷயம், 'ஹதாகில க்லேசமலை:', 'பவந்தமே வாநுசரந்' முதலான ச்லோகங்களைக் கொண்டு அறுதியிடலாமாயினும், அழகிய மணவாளனும் பேரருளாளனும் கூட அதற்கு விஷயமாகக் கூடும். 'லப்த்வா குலதநம் ராஜாலங்காம் ப்ராயாத் விபீஷண:' (ரா. யுத்த. 131-90) 'ஆராதய ஜகந்நாதம் இக்ஷ்வாகு குலதைவதம்' (ரா. உத்தர. 108-31) என்ற இவ்விரண்டு இடங்களிலும் முறையே குலதனமாகவும் குலதேவதையாகவும் பெரியோர்களால் கருதப்பட்ட அழகிய மணவாளனை, 'யந்மூர்த்நி மே' என்ற (ஸ்தோத்ரரத்நம் 6) ச்லோகத்தில் 'ஸ்தோஷ்யாமி ந: குலதநம் குலதைவம் தத்' என்று அதே குலதந குலதைவத சப்தங்களையிட்டுக் குறிப்பிட்டுள்ளார்

என்று கொள்ளக் குறையில்லையாகையால் ஸ்தோத்ர ரத்நம் அழகிய மணவாளன் விஷயமென்பதும், 'ஆளவந்தார் கேட்டருளி உகந்து பேரருளாளர் நம்முடைய ப்ரபத்தியை ஸபலமாக்கியருளினார் என்று பெரிய ப்ரீதியோடே பேரருளாளன் பெருமையைப் பேச வல்லவராய்க் கொண்டு ஸ்தோத்ர(ரத்ன)த்தை விண்ணப்பம் செய்து ஸ்வாபிமாநாந்தர்ப்பூதரான பெரிய நம்பி திருக்கையிலே கொடுத்து....' (ஆறாயிரப்படி குருபரம்பராப்ரபாவம் - யமுனைத்துறைவர் வைபவம்) என்ற ஸ்ரீஸூக்தியின் ப்ராமாண்யத்தால் பேரருளாளன் விஷயமென்பதும் காணலாம்.

எம்பெருமானார் அர்ச்சாவதார வெம்பெருமான்களுள் முக்கியரான அழகிய மணவாளனை நேரில் கண்டு த்வயார்த்த கர்ப்பமான கத்யத்தை விண்ணப்பிக்குமவர், அழகிய மணவாளனை 'ஆச்ரித வாத்ஸல்யைக ஜலதே' என்றும் 'ப்ரணதார்த்திஹர' என்றும் முறையே திருவேங்கடமுடையானையும் பேரருளாளனையும் குறிக்கும் திருநாமங்களாலே ஸம்போதித்து இம்மூவர்க்குமுள்ள ஐக்யத்தையும் இம்மூவரும் த்வய மந்திரப்ரதிபாத்யர்கள் என்பதையும் காட்டியருளினர்.

'ராமாநுஜஸ்ய சரணௌ சரணம் ப்ரபத்யே' என்று எம்பெருமானார் திருவடிகளையே தஞ்சமாகப் பற்றியவராய் ஸகல சாஸ்த்ரங்களையும் கையிலங்கு நெல்லிக் கனிபோல் கண்ட கூரத்தாழ்வானும், திருவேங்கடமுடையான் விஷயமாய் த்வயார்த்த விவரணமான திருவாய்மொழி போலவும் அழகிய மணவாளன் விஷயமாய் த்வயார்த்த விவரணமான கத்யம் போலவும், பெரிய நம்பிகளால் த்வயப்ரமேயபூதராக எம்பெருமானார்க்கு உபதேசிக்கப் பட்டவரும் திருக்கச்சிநம்பிகள் மூலமாக எம்பெருமானார்க்கு ஆறுவார்த்தை அருளிச் செய்தவரும், வழி திகைத்து அலமந்த எம்பெருமானாரை வில்லியாய் விந்திய மலைக்காட்டிலிருந்து காஞ்சிக்கு அழைத்து வந்தவரும் 'தேவராஜார்ச்சநரத:' (ராமாநுஜாஷ்டோத்தரம்) என்றபடியே எம்பெருமானார்க்குத் திருவாராதனப் பெருமாளும் ? அருளாளப்பெருமாளெம்பெரு மானாரை எம்பெருமானார்க்கு சிஷ்யராகத் தந்தவருமான

பேரருளாளப் பெருமாள் விஷயமான வரதராஜஸ்தவத்தை த்வயார்த்த விவரணரூபமாகவே அருளிச் செய்தார்.

இந்த வரதராஜஸ்தவம் த்வயார்த்த விவரண ரூபமென்னும் விஷயம், இதற்கு ப்ராசீநமாக ஏற்பட்டுள்ள ஸ்ரீமத் சேஷாசல நிவாஸரஸிகரான ஸ்ரீநிவாஸாசார்ய ஸ்வாமி அருளிய ஸம்ஸ்க்ருத வ்யாக்யானத்தின் படியும், ஸ்ரீ உ.வே. காஞ்சீ ப்ரதிவாதி பயங்கரம் மஹாவித்வான் அண்ணங்கராசார்ய ஸ்வாமி பணித்த மணிப்ரவாள வ்யாக்யானத்தின் படியும் சிறிது விண்ணப் பிக்கப்படுகிறது. குற்றங்குறைகளைப் பெரியோர் தம்மியற்கை யின்னருளால் பொறுத்தருள வேண்டுகிறேன்.

இதன் கண 'ஸ்வஸ்தி ஹஸ்திகிரி' என்று தொடங்கும் முதல் ச்லோகம் மங்கள ச்லோகமாகும்.

இரண்டாம் ச்லோகத்தின் முதலிலுள்ள 'ஸ்ரீநிதிம்' என்னும் பதம் - த்வய பூர்வ கண்டத்தின் முதலிலுள்ளதாய், நமக்குப் புருஷகாரபூதையான (நம்மைப்பற்றி எம்பெருமானிடம் பரிந்து பேசுமவளான) பிராட்டியோடு எம்பெருமானுக்குள்ள நித்ய ஸம்பந்தத்தைக் கூறுகின்ற ஸ்ரீமத் பதத்தின் விவரணமாக அமைந்துள்ளது. ஸ்ரீ: என்பது - ச்ரீயதே, ச்ரயதே என்னும் இரண்டு வ்யுத்பத்திகளின் மூலமாக, முறையே, புருஷகாரமாவதற்காக நம்மால் தஞ்சமடையப்படுகிறவள் என்றும், நமக்குப் புருஷகாரம் செய்வதற்காக எம்பெருமானை ஆச்ரயித்திருப்பவள் என்றும் பொருள்படும். ஸ்ரீ: நிதீயதே அஸ்மிந் ("இவனிடம் பிராட்டி திருமார்பில் எப்போதும் இருத்தப்படுகிறாள்) என்ற வ்யுத்பத்தியினால் புருஷகாரமான பிராட்டியோடு பெருமானுக்குண்டான நித்யஸம்பந்தத்தைக் கூறும் ஸ்ரீநிதி சப்தம் ஸ்ரீமத்பத ஸமானார்த்தமாவது காண்க.

இனித் தஞ்சமடையப்படும் எம்பெருமானிடம் முக்கியமாக இருக்க வேண்டிய ஸௌலப்யத்துக்கு (நம் கண்ணுக்கிலக்காகும் தன்மைக்கு) ஜ்ஞாபகமான ஹஸ்திகிரியின் பெருமை மூன்றாவது முதலாகப் பத்தாவது ச்லோகம் வரையில் பேசப்படுகிறது.

எம்பெருமானை எவ்வித ஸந்தேஹத்திற்கும் இடமில்லாதபடி, பரம்பொருளாகக் காட்டித் தரும் ஹஸ்திகிரியானது வேதங்களைவிட உயர்ந்ததென்பது அந்த ச்லோகங்களின் ஸாரமாகும். இத்திருமலை த்வயத்திலுள்ள நாரபதத்தின் பொருள். அண்டத்துக்குட்பட்ட தேவ மநுஷ்ய திர்யக் ஸ்தாவரங்களெல்லாம் நாரபதார்த்தமாகையாலே ஸ்தாவரத்தில் சேர்ந்த ஹஸ்திகிரி நாரபதார்த்தமாவது காண்க. இங்ஙனம் நாரபதார்த்தமான ஹஸ்திகிரியை அயனமாக - இருப்பிடமாக உடையவன் பேரருளாளன் என்க. இப்பொருளில் நாராயண பதத்திற்கு பஹுவ்ரீஹி ஸமாஸம் கொள்க.

இங்குள்ள நாராயண சப்தத்திற்கு நற்குணமுடையவ னென்னும் பொருள் மிக முக்கியமானது. அக்குணங்கள் பிராட்டியின் புருஷகார பலத்தினால் எம்பெருமானிடம் தலையெடுப்பனவாகும். அவையாவன - பாபியான ஜீவாத்மா ஆச்ரயித்தற்கு உதவி செய்யும் வாத்ஸல்யாதிகளும், ஆச்ரயித்த ஜீவாத்மாவினுடைய காரியத்தை நிறைவேற்றுவதற்கு உரிய ஜ்ஞாந சக்த்யாதி களுமாகும். இத்தகைய பல நற்குணங்களின் பூர்த்தியே பதினோராவது முதலாக இருபதாவது ச்லோகம் வரையில் வருணிக்கப்படுகிறது. 'நாரங்களாவன ......ஜ்ஞாநசக்த்யாதிகளும் வாத்ஸல்ய ஸௌசீல்யாதிகளும்' என்ற முமுக்ஷுப்படி சூர்ணை (96-97)களினால் இக்குணங்களும் நாரபதார்த்தமென்பது விளங்கும்.

இனி, 'நாரங்களாவன.......திருமேனியும் காந்தி ஸௌகுமார்யாதிகளும், திவ்யபூஷணங்களும் திவ்யாயுதங்களும்' என்ற முமுக்ஷுப்படி (96,97) சூர்ணையின்படி காந்தி ஸௌகுமார்யாதி குண திவ்யாயுத ஸஹிதமான திருமேனியும் நாரபதார்த்தமாகும். அப்படிப்பட்ட திருமேனி ஸம்பந்தமும் நாராயண சப்தார்த்தமாகையாலும் மேற் கூறப்படும் சரணங்கள் திருமேனியிருந்தாலன்றிப் பொருந்தமாட்டா வாகையாலும், இதில் 21 ச்லோகம் தொடங்கி 62 ச்லோக மீறாகத் திருமேனியும் அதன் ப்ரத்யவயவ ஸௌந்தர்யாதிகளும் திவ்யபூஷண திவ்யாயுதங்களும் வருணிக்கப்படுகின்றன. முற்கூறிய பிராட்டிக்கு இருப்பிடமாகவும்

வாத்ஸல்யாதி குணப்ரகாசகமாகவும் உள்ள திருமேனியின் ஸம்பந்தம் இங்கு அவச்யம் சொல்லித் தீரவேண்டுமன்றோ? குண ஸம்பந்தமும் திருமேனி ஸம்பந்தமும் சொல்லும்போது நாரங்களான குணங்களுக்கும் திருமேனிக்கும் எம்பெருமான் ஆதாரமாகையால், நாரங்களுக்கு அயநம் நாராயணன் என்று ஷஷ்டீ தத் புருஷஸமாஸம் கொள்க.

திருமேனி வர்ணனத்தின் இறுதியில் திருவடிகளும் வர்ணிக்கப்பட்டுவிட்டபடியால் இதுவரையில் ஸ்ரீமந் நாராயண சரணௌ என்னும் முதற்பதத்தின் விவரணம் முடிவு பெற்றதென்க.

இங்ஙனம் அர்ச்சாவதார வடிவழகை அநுபவித்தவர் ஸௌலப்யத்தில் இது தன்னோடு சிறிது ஒப்புமையுடைய விபவாவதாரம் தம் நினைவுக்கு வர, நரஸிம்ஹ ராம க்ருஷ்ண அவதாரங்களின் பெருமையை 64 வது முதல் 71 வது ச்லோகம் வரையில் பேசப்புகுந்து நடுவிலுள்ள 63வது ச்லோகத்தினால், முற்கூறிய திருக்குணங்கள், திருமேனி, திவ்யபூஷணங்கள், திவ்யாயுதங்கள், பிற கூறப்படும் அவதாரத் திருமேனி மற்றும் பரமபதம், நித்யஸூரிகள், சத்ரசாமராதிகள், அண்டங்கள், தனது திவ்யாத்மஸ்வரூபம் ஆகிய இவற்றையெல்லாம் தனக்கென்று இல்லாமல் தன்னைத் தஞ்சமடைபவர்களின் அநுபவத்திற்கே உருப்படாக்கி வைத்த எம்பெருமானுடைய ஔதார்ய அதிசயத்தைப் பேசுகிறார்.

இப்படி விபவாவதாரப் பெருமையை 71ம் ச்லோகத்தோடு பேசித் தலைக் கட்டிவிட்டு, 72வது ச்லோகம் தொடங்கி 79வது ச்லோகம் ஈறாக தாபத்ரயம், எம்பெருமானைப் பற்றிய ஆசையின்மை, ராகம் த்வேஷம் முதலிய துர்க்குணங்கள், புத்ராதிகளைப் பற்றிய பயனற்ற சிந்தனை, விஷயாஸக்தத்தை விடாமை பகவதபசார பாகவதாபசாராதிகள் முதலிய தமக்குள்ள குற்றங்களின் நிறைவை எம்பெருமானிடம் விண்ணப்பிக்கிறார். சரணாகதி செய்யும் அதிகாரி தன்னுடைய தோஷங்களை வெளிப்படையாகச் சொல்லியன்றோ சரணாகதி செய்ய வேண்டும்.

இத்தகைய தமக்கு எம்பெருமான் தாஸ்யரஸத்தை (தனக்கடிமையாயிருப்பதிலுள்ள சுவையை) அறிவித்தா னென்றும் அதன் விளைவாகத் தமக்கு இஹபரஸுகமென்னும் ஐச்வர்யத்திலும் ஆத்மாநுபவமாகிற கைவல்ய மோக்ஷத்திலும் வைராக்யம் விளைந்ததென்றும் அருளிச் செய்கிறார் 80,81ம் ச்லோகங்களால். பகவத் கைங்கர்யத்திற்காகச் சரணாகதி செய்யுமவனுக்கு அடிமைச் சுவையறிவும் இதர புருஷார்த்த வைராக்யமும் இன்றியமையாதனவன்றோ?

இனி 82, 83ம் ச்லோகங்களினால் த்வயத்தில் 'சரணம் ப்ரபத்யே' என்றதன் பொருளை விவரிக்கிறார். அதாவது முற்கூறிய தோஷபூர்த்தியையும், வேறு ரக்ஷகர் வேறு உபாயங்கள் இவையில்லாமையையும் முன்னிட்டுக் கொண்டு ஸ்ரீமந் நாராயணனான பேரருளாளப் பெருமாளை (அவர் திருவடிகளை) உபாயமாகப் பற்றுகிறாரென்றபடி. தோஷ பூர்த்தியும் வேறு ரக்ஷகர் வேறு உபாயம் இவையில்லாமையும் த்வயத்தில் ப்ரபத்யே என்பதற்கு எழுவாயாகத் தருவித்துக் கொண்ட 'அஹம்' என்பதன் விசேஷணங்களாகையால் இவையும் த்வயார்த்த விவரணங்களேயாகும்

(இனி, ஸ்ரீமதே நாராயணாய என்பதன் கண் உள்ள ஸ்ரீமந் நாராயண சப்தார்த்தம் பூர்வ கண்டத்திற் கூறிய படியே கொள்க. அங்கு அதன் பொருளான லக்ஷ்மீ குண விக்ரஹ ஸம்பந்தம் எம்பெருமான் உபாயமாவதற்கு உபயோகப்படுமதென்றும் இங்கு அஃது அநுபவகைங்கர்யங்களுக்கு உபயோகப்படும தென்றும் வாசி காண்க. இங்குள்ள நாராயண சப்தம், கைங்கர்ய ப்ரார்த்தனையைத் தெரிவிக்கும் ஆய என்ற சதுர்த்தீ விபக்திக்கு ப்ரக்ருதியாகையாலே கைங்கர்யத்தைக் கொள்வதற்குத்தக்க சேஷியை முக்கியமாகக் குறிக்கும் என்பதும் நோக்கத்தக்கதாகும்).

இனி மேல் 84 முதல் 91 வரையில் நம: என்பதனை விவரித்தருளுகிறார். பகவத்ப்ராப்தி விரோதியான ஸ்வப்ரவ்ருத்தியின் நிவ்ருத்திதான் நம: பதத்தின் பொருள். அதாவது எம்பெருமானுடைய

நிர்ஹேதுக க்ருபையினால் அவனையடைவதற்குத் தடையான தன் முயற்சியில்லாமை என்றபடி.

"பேரருளாளப் பெருமாளே! செய்த பாவங்களுக்குப் பச்சாதாபப்படுதல் ப்ரபத்தியை புத்திபூர்வமாக அனுஷ்டித்தல் லௌகிக விஷயங்களில் பற்றின்மை தேவரீர் திருவடிகளில் சிறிதாவது ஆசை ஆகியவை அடியேனிடம் இருந்தால் இவற்றின் மூலமாக தேவரீருடைய (ஸஹேதுக) க்ருபையைப் பெற்று உய்ந்து போகலாம். இவையேதும் அடியேனிடம் சிறிதுமில்லை. 'வரதமுருதயம் சதிம் த்வாம் வ்ருணே' என்று சொன்ன சரணாகதி வாக்யமும் தேவரீர் நிர்ஹேதுக க்ருபையினால் சொல்லுவிக்க, வாயால் மட்டும் சொன்னதித்தனையே. நெஞ்சில் அத்யவஸாய லேசமும் இல்லை. ஆகையால் 'இவனுக்கு உய்ய வழியேதுமில்லாமல் இவன் தவிக்கிறானே. ஐயோ பாவம்' என்று இரங்கி, (நிர்ஹேதுக க்ருபையை அடியேனிடம் பெருகச் செய்து) பாவங்களை க்ஷமித்தும் பிறவற்றில் பற்றினை நீக்கியும் தேவரீரிடம் பற்றினை உண்டாக்கியும் அடியேனைக் கைக் கொள்ள வேணும். அடியேன் வேண்டும் ஓர் பொருள் (இருந்த கண்கள்) தேவரீர் திருவடிகளை தேவரீருடைய நிர்ஹேதுக க்ருபையாலே பெறுவதற்குத் தடையாக இல்லாதிருக்குமானால் அதையும் தந்தருள வேண்டும். தடையாக இருக்குமானால் உடனே திருவடிகளிலே சேர்த்துக் கொள்ள வேண்டும். துர்வாஸனையினால் தூண்டப்பட்டு, தடையாயிருந்தாலும் அடியேன் வேண்டும் அப்பொருளை (எம்பெருமானாருக்காக) தந்தருளி, இதை வேண்டிய அடியேனை க்ஷமித்தருள வேண்டும். அது நிற்க, அடியேனுக்கு ப்ரியமானதோ (கண்களோ) ஹிதமானதோ (தேவரீர் திருவடிகளோ) எதைத் தேவரீர் (உகந்து) தந்தருளுகிறதோ அதைப் பெற்று அனுபவிப்பதே அடியேனுக்குத் தகுதியாகும். தேவரீர் திறத்தில் பாரத்தைப் போகட்டுச் சரணாகதி செய்த அடியேன் இதைக் கொடுத்தருளும், அதைக் கொடுக்க வேண்டாம் என்று நிர்ப்பந்திக்கக் கூடாதல்லவா?" என்று விண்ணப்பித்து, அவனது நிர்ஹேதுக க்ருபையால் அவனைப் பெறுவதற்குத் தடையாகத் தம்மிடம் ஆசையோ முயற்சியோ ஏதுமில்லாமையாகிற நம: பதார்த்தத்தை விவரித்தருளினார்.

இனி 92ம் ச்லோகத்தினால், "ஹஸ்திகிரிநாதனே! தேவரீரை ஸ்வரூபரூப குண பரிமாண சேஷ்டித விபூதிகளோடு நேரில் காண, ப்ரபத்தியை வாயால் மட்டும் அநுஷ்டித்த அடியேன் ஆசைப்படுகிறேன்" என்று அநுபவத்தை ப்ரார்த்திருக்கிறார். அநுபவித்த மகிழ்ச்சி தூண்டக் கைங்கர்யம் செய்ய வேண்டியிருப்பதால் கைங்கர்ய ப்ரார்த்தனைக்கு முன்பாக அநுபவ ப்ரார்த்தனை அமைந்துள்ளதென்று கொள்க.

"தயையுடைய பேருளாளனே! ஸ்ரீமந் நாராயணனாகிய தேவரீருக்குச் செய்யும் முக்கிய பலமான கைங்கர்யத்தையே செய்யும்படி நிர்ப்பந்தமாக அருள்புரிய வேணும்" என்று 93ம் ச்லோகத்தினால், ஸ்ரீமதே நாராயணாய என்றவிடத்திலுள்ள ஆய என்னும் சதுர்த்தீ விபக்தியின் அர்த்தமான கைங்கர்ய ப்ரார்த்தனையைச் செய்கிறார். இங்கு 'நிர்ப்பந்தமாக' என்பதற்கு 'தேவரீர்க்குச் செய்யும் கைங்கர்யம் அடியேனுடைய உகப்புக்காகச் செய்யப்படுகிறது என்னும் புத்தியைத் தவிர்த்து' என்பது பொருளாகும். இதுதான் இங்கு முக்கியமான நம: பதார்த்தமாகும். 'உனக்கே நாமாட்செய்வோம்' என்று கைங்கர்யத்தை ப்ரார்த்தித்த ஆண்டாள், அந்தக் கைங்கர்யத்தில் ஸ்வப்ரயோஜநத்வ புத்தி நிவ்ருத்தியை 'மற்றை நம் காமங்கள் மாற்று' என்று ப்ரார்த்தித்ததை இங்கு நினைக்க.

அதற்கு மேல் 94, 95 ச்லோகங்களினால் "ஹஸ்திகிரீசனே! கர்மஜ்ஞாநபக்திகளை உபாயமாகக் கொண்டவர்களுக்கும் கைங்கர்யத்தைப் பெறுவிக்கும் தேவரீருடைய தயையே சரணாகதிவாக்யம் மட்டும் விண்ணப்பித்த அடியேனுக்கும் உபாயமென்று அறுதியிடுகிறேன். ஒன்றுமில்லாத அடியேன் தேவரீர் திருவடிகளை அடைந்தாலன்றோ தேவரீருடைய தயை முதலிய குணங்கள் நிறம் பெறுவது என்று தயையைக் கொண்டாடி, 96 முதல் 100 வரையிலுள்ள ச்லோகங்களால் - "வாதப்ரபோ! தேவரீருடைய கடாக்ஷம் விலாஸம் புன்சிரிப்பு இங்கிதம் முதலியவற்றால் தூண்டப்பெற்று அடியேன் தேவரீருக்குக் கைங்கர்யம் செய்வது எப்போதோ? ' ஆழ்வானே! க்ஷேமமா? வாரும், இன்னின்ன

தொண்டுகளைச் செய்யும்' என்று தேவரீர் அருளும் மதுரமான ஸ்ரீஸூக்திகளைக் கேட்டனுபவிக்க வேணும். ஒழிவில் காலமெல்லாம் உடனாய் மன்னி வழுவிலா அடிமைகளைச் செய்து கொண்டு தேவரீருக்கு அருகிலேயே அடியேன் இருக்கப் பெறவேணும். தேவரீர் திருக்கண்களென்னும் நதியிலிருந்து உண்டான கடாக்ஷமாகிற அலைகள் அடியேனை நனைத்து எப்போது குளிரச் செய்யப் போகின்றனவோ? எப்போதும் தேவரீரை அனுபவிக்க ஆசை கொண்ட பிராட்டியாலே நித்யம் அனுபவிக்கப் பெற்ற தேவரீரை கைங்கர்யம் செய்வதற்காக இடைவிடாமல் கண்டு கொண்டிருக்க வேணும்" என்று முற்கூறிய அனுபவ கைங்கர்யங்களைப் பற்றிய பாரிப்பு ருசி த்வரை இவற்றை விண்ணப்பிக்கிறார்.

கடைசியில் 101, 102ம் ச்லோகங்களால் - "வரதராஜனே! தன் முயற்சியாலே பெறவிருக்கும் ஸநகஸநந்தநாதிகளால் அடைய முடியாதவையும், பக்த ஜனங்களால் அடைய வெளியவையுமான தேவரீர் திருவடிகளை, கர்மஜ்ஞான பக்திகளில் அந்வயமில்லாதவனும் ப்ரபத்தியையும் மனமார அநுஷ்டியாதவனுமான அடியேன் எங்ஙனே அடையப் போகிறேன்?" என்று சற்றுப் பின்வாங்கி, பின்பு எம்பெருமானார் ஸம்பந்தத்தை நினைத்துத் தேறியவராய், "தேவப்பெருமாளே! எம்பெருமானார் திருவடிகளே சரணமென்றிருக்கிற அடியேனைக் கடாக்ஷித்தே தீர வேணுமென்று ப்ரார்த்தித்து ஸந்தோஷத்துடன் ஸ்தோத்ரத்தைத் தலைக் கட்டியருளுகிறார்.

இங்ஙனம் எம்பெருமானாரின் நியமனத்தினால் கூரத்தாழ்வான் பேரருளாளனைப் பற்றி அருளிச் செய்த வரதராஜஸ்தவம் த்வயார்த்த விவரணமாய் அமைந்துள்ள தென்பதை அதன் வியாக்யானங்களை ஸேவித்துத் தெரிந்த வரையில் விண்ணப்பித்துக் கொண்டேன். குற்றங்குறைகளைப் பெரியோர் பொறுத்தருள வேணுமென்று மறுபடியும் வேண்டிக் கொண்டு விடை பெறுகிறேன்.